॥ ஸ்ரீ: ॥

  

திருமங்கையாழ்வார் திருவடிகளே ஶரணம்.
பெரிய பரகால ஸ்வாமி திருவடிகளே ஶரணம்.

வையமெல்லாம் மறை விளங்க வாள் வேல் ஏந்தும்
மங்கையர்கோன் மகிழ்ந்துபாடின

# பெரிய திருமொழி.

## இரண்டாம் பத்து.



பெரிய பரகால ஸ்வாமி அருளிச்செய்த
**நிகமபரிமள வ்யாக்யானமும்**




திருவஹீந்திரபுரம் சேட்லூர் வித்வான் பகவத் விஷயம்
பண்டித பூஷணம் தேஶிக தர்ஶநாசார்யர்
ஸ்ரீ உ.ப. வே.
மஹாமஹோபாத்யாய நரஸிம்ஹாசார்ய ஸ்வாமியின்

பதவுரையும் வ்யாக்யானமும் அடங்கியது.




நிகமபரிமள அச்சுக்கூடம்:
பராங்குச மந்திரம், திருவல்லிக்கேணி, சென்னை.

விலை ரூ. 3 ] 1933 [ தபால் கூலி வேறு.

## ஒன்பதாம் திருமொழி—சொல்லுவன்.

[ திருப்பரமேஶ்வர விண்ணகர ஸ்ரீவைகுண்டப்பெருமாள் விஷயம்.]

சொல்லுவன் சொற் பொருள் தானவையாய்ச்
சுவை ஊறு ஒலி நாற்றமும் தோற்றமுமாய்
நல்லரண் நான்முகன் நாரணனுக்கு
இடம் தான்தடம் சூழ்ந்தழகாய கச்சி
பல்லவன் வில்லவன் என்று உலகில்
பலராய்ப் பல வேந்தர் வணங்கு கழல்
பல்லவன் மல்லையர் கோன் பணிந்த
பரமேச்சுர விண்ணகரமதுவே. 1

ப—ரை.] சொல்லுவன் — சொல்லப்படுமதான, சொல் — ஶப்தம், பொருள் — அதின் அர்த்தம், அவை — ஆகிய இவற்றிற்கு, தான் ஆய் - நிர்வாஹகனாய், சுவை — ரஸம், ஊறு — ஸ்பர்ஶம், ஒலி — ஶப்தம், நாற்றமும் — மணம் இவைகளும், தோற்றமும் — பார்க்கப்படும் ரூபங்களும், ஆய் - ஆகிய இவைகளுக்கு நிர்வாஹகனாய், நல் அரண் ரக்ஷைக்கொடுப்பவனாய், நான்முகன் - ப்ரும்மாவிற்கு அந்தர்யாமியான, நாரணனுக்கு - ஸர்வேஶ்வரனுக்கு, இடம் தான் - வஸிக்கும் இடமானது, தடம் — தடாகங்களினால், சூழ்ந்து — சூழப்பட்டு, அழகாய — அழகாயிருக்கிற, கச்சி — கச்சி நகரிலே, பல்லவன் வில்லவன் என்று — பல்லவன் என்றும் வில்லவன் என்றும், பலராய் — அநேகர்களாய், உலகில் — இந்தப் பூமியில், பல வேந்தர் - அநேகம் அரசர்கள், வணங்கு - வணங்குகிற, கழல் - வீரக்கழல்களையுடையவனாய், மல்லையர் கோன் - திருக்கடல் மல்லைக்கு அரசனான, பல்லவன் — பல்லவன் என்பான், பணிந்த - ஆஶ்ரயித்த, பரமேச்சுர விண்ணகரமதுவே. 1

## ஒன்பதாம் திருமொழி.

அஷ்டபுஜகரன் உகக்தும்படியான அடிமை செய்த தொண்டைமான் சக்ரவர்த்தியைத் தாம் உகந்த ப்ரஸங்கத்தாலே பரமே

---

## ஒன்பதாம் திருமொழி.

கீழ்த் திருமொழிக்கும் இத்திருமொழிக்கும் ஸங்கதியை நிரூபிக்கிறார்—'அஷ்டபுஜகரன்' என்றாரம்பித்து. வகையாயிர

ச்வர விண்ணகரத்தில் பல்லவன் என்பான் ஒருத்தன் வகையாயிரமாக அடிமை செய்ததும், அந்தப் பதியை உகந்த பரமேச்வரன் மல்லையர் கோனை அவன் செய்த அடிமைகளை உகந்து கொண்டருளினதும் தமக்கு இனிதாக நெஞ்சில் பட்டதாகையாலே தாம் இனிதாக அத்தை எல்லாம் அனுபவித்தபடியே நாமும் அனுபவித்து க்ருதார்த்தராம்படி அருளிச்செய்கிறார்.

சொல்லப்படுமதான சப்தார்த்தங்கள் அவைகளுக்கெல்லாம் தானே நிர்வாஹகனாய், ரஸம் ஸ்பர்சம் சப்தம் கந்தம் ரூபம் இதுக்கெல்லாம் தானே நிர்வாஹகனாய், மோக்ஷப்ரதனை ரக்ஷகனாய்

---

*மாக* — *ஒரு வகையிலே ஆயிரமாக, அதாவது எண்ணிறந்தவைகளாக.* அந்தப் பதியை - *அந்த க்ஷேத்திரத்தை.* மல்லையர்கோனை — *திருக்கடல்மல்லையில் வஸிப்பவர்களுக்கு அரசனை.* உகந்து — *ஸந்தோஷித்து,* கொண்டருளினதும் — *அங்கீகரித்தருளினதுவும்.* இனிதாக — *போக்யமாக.*

*இப்படி ஸங்கதியை நிரூபித்தருளி, மேலே பாட்டிற்கு க்ரமேண அர்த்தம் அருளிச்செய்கிறார்* — 'சொல்லப்படுமதான' *என்றாரம்பித்து. இத்தால் ஒருவனுக்கு ஒரு அர்த்தத்தைத் தெரிவிப்பதற்காக மற்றொருவனால் வ்யவஹரிக்கப்படுமது இப்படி நிரூபிக்கப்பட்டிருக்கிறது என்பதும், அர்த்தத்தைத் தெரிவிக்க யோக்யதையில்லாதவைகளான ஓசைகளும் அபசப்தங்களும் விலக்கப்படுகின்றன என்பதும் த்யோதிதம்.*

*'சுபெஞா விஷ்ணு ப்ரியம் வாணீ:'*

*என்று அர்த்த போதகமான சப்தமிறே இவனுக்கு விபூதியாக நிரூபிக்கப்பட்டது. இந்த ஸாமாநாதிகரண்யம் விபூதி விபூதிமத்பாவ நிபந்தனமென்று காட்டியருளுகிறார்* — 'அவைகளுக்கெல்லாம்' *என்றாரம்பித்து.* 'சுவை' *இத்யாதி பதங்களுக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்* — 'ரஸம்' *என்றாரம்பித்து.* சப்தம் *என்றது அர்த்தமில்லாத ஓசையை.* அரண் *என்றால் ரக்ஷகன், ரக்ஷகனுக்கு அஸாதாரணமாவது ஸர்வாதிசாயியான (எல்லாவற்றிற்கும் மேற்பட்டதான) புருஷார்த்தத்தைக் கொடுக்கை என்கிற திருவுள்ளத்தினால்* 'நல்லரண்' *என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்* — 'மோக்ஷப்ரதனை' *என்றாரம்பித்து.*

சதுர் முகனில் இருந்து ஸ்ருஷ்டிப்பானும் ப்ரவ்ருத்தி தர்மங்களை ப்ரவர்த்திப்பிப்பானுமாயுள்ள ஸர்வ ஜகத் பரிபாலகனை நிவ்ருத்தி தர்ம ப்ரவர்த்தகனுக்கு,

1 ‘ ஸ்ருஷ்டிம் ததஃ கரிஷ்யாமி த்வாமாவிஶ்ய ப்ரஜாபதே ’, 2 ‘ ப்ரவ்ருத்தி லக்ஷணம் தர்மம் ப்ரஜாபதிரபாஷத ’, 3 ‘ ந ஹி பாலந ஸாமர்த்யம்ருதே ஸர்வேஶ்வரம் ஹரிம் ’, 2 ‘ நிவ்ருத்தி லக்ஷணம் தர்மம் ருஷிர் நாராயணோப்ரவீத் ’

என்று ப்ரஸித்தமிறே, அவனுக்கு இடமானது தான் சுற்றும் தடாகம் சூழ்ந்திருந்தது கொண்டு அழகு பெற்ற கச்சியிலே உலகில் பல வகைப்பட்ட ராஜாக்களான பல்லவன் வில்லவன் என்னப்பட்டவர்களால் வணங்கப்பட்ட அடிகளையுடையவனாய், திருக்கடல்மல்லைக்கு அரசனாகிய பல்லவராயனால் ஆராதிக்கப்பட்டவன் உக

---

‘ ஸக்தி கைவல்ய ப்ராவ்ருத்திஃ ’

*என்று ஸ்ரீ ஶ்ருத ப்ரகாஶிகையில் நிரூபிக்கப்பட்டிருப்பதினால் கைவல்யம் பரமபுருஷார்த்தமாகாது.* ப்ரஜாபதே - *ஓ !* *ப்ருஹ்மாவே,* தத: —*பிறகு,* த்வாம் — *உம்மை,* ஆவிஶ்ய — *அநுப்ரவேஶித்து,* ஸ்ருஷ்டிம் — *ஸ்ருஷ்டியை,* கரிஷ்யாமி — *செய்யப்போகிறேன்.* அத - *பிறகு,* ப்ரவ்ருத்தி லக்ஷணம் தர்மம் - *ப்ரவ்ருத்தி தர்மத்தை,* ப்ரஜாபதி: — *ப்ருஹ்மா,* அப்ரவீத் - *சொன்னார்.* ஸர்வேஶ்வரம் - *எல்லோருக்கும் யஜமானனான,* ஹரிம் ரிதே — *விஷ்ணுவைத்தவிர மற்றவர்களுக்கு,* பாலனஸாமர்த்யம் - *ரக்ஷிக்கும்படியான ஶக்தி,* நஹி — *இல்லையல்லவா.* நிவ்ருத்தி லக்ஷணம் தர்மம் — *நிவ்ருத்தி தர்மத்தை,* நாராயண: - *நாராயணனென்ற,* ரிஷி: - *ரிஷியானவர்,* அப்ரவீத் — *சொன்னார்.* ‘ இடம் ’ *இத்யாதிக்குத் தாத்பர்யார்த்தம் அருளிச்செய்கிறார்*—‘ அவனுக்கு ’ *என்றாரம்பித்து.* ‘ பல்லவன் ’ *இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்*—‘ உலகில் ’ *என்றாரம்பித்து.* ‘ மல்லையர் கோன் பணிந்த ’

1. *விஷ்ணு தர்மம்* — 68 - 51. 2. *பாரதம், ஶாந்தி* — 219 - 4.
3. *விஷ்ணுபுராணம்* - 1 — 22 - 21.

ந்த இடம் அந்தப் பரமேச்வர விண்ணகரமே, அங்கு சென்று அடிமை செய்யவும் ஆச்ரயிக்கவும் அனுபவிக்கவும் போங்கோள் என்று திருவுள்ளம். 1

கார் மன்னு நீள் விசும்புங் கடலுஞ்
சுடருந் நிலனும் மலையுந் தன் உந்தித்
தார் மன்னு தாமரைக் கண்ணனிடந்
தடமா மதில் சூழ்ந்தழகாய கச்சி
தேர் மன்னு தென்னவனை முனையில் செருவில்
திறல் வாட்டிய திண் சிலையோன்
பார் மன்னு பல்லவர் கோன் பணிந்த
பரமேச்சுர விண்ணகரமதுவே. 2

ப — ரை.] கார் — மேகங்கள், மன்னு - ஸ்திரமாக இருக்கும் இடமான, நீள் - நீண்ட, விசும்பும் — ஆகாசமும், கடலும் — ஸமுத்திரமும், சுடரும் — தேஜஸ்ஸுக்களான ஸூர்ய சந்திரர்களும், நிலனும் — பூமியும், மலையும் — குல பர்வதங்களும், தன் உந்தித் தார் — தன்னுடைய திருநாபீ கமலத்திலே, மன்னு - உண்டாகும்படியான, தாமரைக் கண்ணனிடம் — புண்டரீகாக்ஷனான பகவானுடைய இடம், தடம் - தடாகங்கள், மா மதில் — பெரிய மதில்கள் இவைகளால், சூழ்ந்து அழகாய கச்சி, தேர் மன்னு — ரதத்திலே நிர்ப்பயமாய்ப் போகக்கூடிய, தென்னவனை — பாண்டியனை, முனையில் - யுத்தத் தலையிலேயே, செருவில் — யுத்தத்தில், திறல் — மிடுக்கை, வாட்டிய — அழித்த, திண் - த்ருடமான, சிலையோன் - வில்லையுடையவனாய், பார் - பூமியில், மன்னு — ஸ்திரமாய் இருந்த, பல்லவர் கோன் - பல்லவர்களுக்கு அரசனான பல்லவன், பணிந்த பரமேச்சுர விண்ணகரமதுவே. 2

மேகங்கள் நிலை பெற்று வாழுமிடமான மஹாகாசமும், ஸமுத்திரங்களும், சந்திர ஆதித்யர்களும், பூமியும், அது நெகிழாமைக்கு

---

என்பதற்குப் பதிநார்த்தம் அருளிச்செய்கிறார் — 'திருக்கடல் மல்லைக்கு' என்றாரம்பித்து. 1

அடித்த ஆணி போன்ற மலைகளும் எல்லாம் தன் திரு நாபியில் தானே பிறக்கும்படியான செந்தாமரை போன்ற கண்ணையுடையவனுக்கு இடம் சூழ்ந்த தடாகங்களாலும் மதில்களாலும் அழகு பெற்ற கச்சியில் தேர் ஏறி நிர்ப்பயனுய்ப் போக வல்ல பாண்டியனை தூசித் தலையிலேதானே யுத்தத்தில் மிடுக்கை அழித்த ஸத்ருடசாபமுடையனுய் தொண்டை மண்டலமான பூமியை எல்லாம் முறை முறையாக பஹு நாள் ஆண்ட பல்லவர்க்கெல்லாம் அரசுமானவன் பணி செய்த இடமான பரமேஸ்வர விண்ணகரமதுவே என்கிறுர். 2

*உரம் தரு மெல்லணைப் பள்ளி கொண்டான்*
*ஒரு கால் முன்னம் மாவுருவாய்க் கடலுள்*
*வரந்தரு மா மணி வண்ணனிடம்*
*மணி மாடங்கள் சூழ்ந்தழகாய கச்சி*
*நிரந்தவர் மண்ணையில் புண்ணுகர் வேல்*
*நெடு வாயிலுகச் செருவில் முன நாள்*
*பரந்தவன் பல்லவர் கோன் பணிந்த*
*பரமேச்சுர விண்ணகரமதுவே.* 3

---

'கார் மன்னு' *இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறுர்*—'மேகங்கள்' *என்றுரம்பித்து.* 'மலையும்' *என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறுர்*—'அது' *என்றாரம்பித்து.* 'தார்' *என்பது புஷ்பமாய், அது தாமரை புஷ்பத்தைச் சொல்லுகிறது என்று கொண்டு* 'தன் உந்தி' *இத்யாதிக்குப் பலிதார்த்தம் அருளிச்செய்கிறுர்*—'தன் திரு நாபியில்' *என்றுரம்பித்து.* 'இடம்' *இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறுர்*—'இடம்' *என்றுரம்பித்து. இப்படியே மேலே எங்கும் கண்டுகொள்வது.* 'தேர் மன்னு' *இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறுர்*—'தேர்' *என்றுரம்பித்து.* 'முனையில்' *இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறுர்*—'தூசித்தலையில்' *என்றுரம்பித்து.* 'பார் மன்னு' *இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறுர்*—'தொண்டைமண்டலமான' *என்றுரம்பித்து.* 2

ப — ரை. ] உரம்தரும்—வளருகிறபலத்தையுடைய, மேல்—ம்ருதுவான, அணை — திருவனந்தாழ்வான் மேலே, பள்ளி கொண்டான் — ஶயனித்துக்கொண்டவன், முன்னம், ஒரு கால் — வேதங்களுக்கு நாஶம் ஏற்பட்டபொழுது, மா உருவாய் — ஸ்ரீ ஹயக்ரீவ ரூபியாய், கடலுள் — ஸமுத்ரத்தில், வரம் தரு - வரத்தைக் கொடுத்த, அதாவது ப்ரும்மாவினால் ப்ரார்த்திக்கப்பட்ட வேதத்தை மீட்டுக் கொடுக்கையாகிற வரத்தைக் கொடுத்த என்றபடி, மா மணி - பெரிய ரத்தினத்தைப் போன்ற, வண்ணன் — ஸ்வபாவத்தையுடைய பகவான், இடம் — வஸிக்கும் இடம், மணி மாடங்கள் - ரத்ன மயமான மாடங்களால், சூழ்ந்தழகாய கச்சி, மண்ணையில் — படை வீட்டில், நிரந்தவர் — சத்ருக்களுடைய, புண் — மாம்ஸத்தை, நுகர் - புஜிக்கிற, வேல் - வேல் என்னும் ஆயுதத்தினுடைய, நெடு — தீர்க்கமான, வாயில் - வாயிலே, உக — நசிக்கும்படி, முன நாள் — முன் காலத்தில் செய்யப்பட்ட, செருவில் — யுத்தத்தில், பரந்தவன் — வ்யாபித்தவனை, பல்லவர்கோன் பணிந்த பரமேச்சுர விண்ணகரமதுவே. 3

பிராட்டிமார்க்கும் ஏறித் துகைத்தும் கிடந்தும் விஹரிக்கலாம்படியான தாரண ஸாமர்த்தியம் வளரா நின்றுள்ள மார்த்தவாதியுக்தனை திருவனந்தாழ்வானில் பள்ளிகொண்டவனாய் முற்காலத்

---

'உரம்' என்பது பலமாய் அது தாரண ஸாமர்த்தியத்தைச் சொல்லுகிறது என்கிற காரணத்தினால் அதற்குத் தாத்பர்யம் அருளிச் செய்கிறார்—'பிராட்டிமார்க்கும்' என்றாரம்பித்து. 'தரும்' என்பதற்குஅர்த்தம் அருளிச்செய்கிறார்—'வளராநின்றுள்ள' என்று. அணை—படுக்கை, இங்கு திருவனந்தாழ்வானைச் சொல்லுகிறது என்று காட்டுகிறார்—'திருவனந்தாழ்வானில்' என்று. 'முன்னம் ஒருகால்' என்று அந்வயித்து அர்த்தம் அருளிச்செய்கிறார்—'முற்காலத்தில்' என்றாரம்பித்து. முற்காலத்தில் - ஜகத் ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில். அதாவது 'தன் நாபி வலயத்துப் பேரொளி சேர் மன்னிய தாமரை மாமலர் பூத்து அம்மலர் மேல் முன்னம் திசைமுகனைத் தான் படைக்க மற்றவனும் முன்னம் படைத்தனன் நான் மறைகள்' என்கிறபடியே ஜகத் ஸ்ருஷ்டிக்கு வழிகாட்டியாக உபதேசிக்கப் பெற்ற வேதங்கள் மதுகைடபர்களினால் அபஹ்ருதங்களான காலத்தில் என்றபடி. 'மாவுருவாய்' என்பதற்கு 'மாவாகி ஆமையாய்' இத்யாதி

தில் பரிமுகனாய்க் கடலில் வேதங்களைத் தந்தருளின நீல மணி வண்ணனுக்கு இடம் மணி மயமான மாடங்கள் சூழ இருந்தது கொண்டு அழகியதான கச்சியில், அரசாய் இருப்பானாய், நிரந்தவர் என்று சத்ருக்களாய்த்து, அவர்களுடைய படை வீட்டில், மண் ஆளுகைக்கு உறுப்பாகக் கட்டின படை வீடு மண்ணையாய்த்து, அதுகளிலுள்ள நிரந்தவர்களுடைய புண்ணுண்டு தேஹங்கள், அதுகளைப் பக்ஷிக்க வல்ல வேலினுடைய தீர்க்க தாரை பெற்ற

---

ப்ரயோகங்களை அநுஸரித்து அர்த்தம் அருளிச்செய்கிறார்—'பரிமுகனாய்' என்று. 'கடலுள் வரந்தரு' என்று யதா க்ரமம் அந்வயித்து அர்த்தம் அருளிச்செய்கிறார்—'கடலில்' என்றாரம்பித்து. இந்த வேதாபஹார வ்ருத்தாந்தம்

'உஊரமா தெZா விநுஸம் ஸுஹாணஉஜிதஸுஸ்ு | ஸு ஜஞ்ம ஸுயஉம வெஉாமஸுதாா ஸுாாவிகுஉள || ... ஊய தள ஊாநவ ஜெஷுள ஒரஹீகவா தாநு ஸநா ஆநாநு | ாஸாம விவிமதா ஸுலுண உஊவலுணெ உஹொாஉயள || ... ணதஷிஞஞொ ாாஜநு ஒவொ ஹ யமிரொ யாஃ | ஜஹாஹ வெஉாநவிமாநு ாஸாதஜு மதாநு ஹமிஃ || ஸுாஉாஹ ஸுஹெணெ ாாஜநு ததஃஸுாம ஸுகூரதிம யயள ||'

இத்யாதியாக அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. இதின் விஸ்தாரத்தை ஸ்ரீ ஸ்தோத்ர பாஷ்யத்தில் கண்டு கொள்ளுவது. இப்படி ஸமுத்திரத்திற்குள்ளே கொண்டு போய் வைக்கப்பட்ட வேதங்களை மீட்டுக் கொடுத்து ப்ரும்மாவை அனுக்ரஹித்தருளியது இங்கு 'கடலுள் வரந்தரு' என்று அருளிச்செய்யப்பட்டது என்று திருவுள்ளம். 'நிரந்தவர்' என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'நிரந்தவர்' என்றாரம்பித்து. 'மண்ணையில்' என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'படை வீட்டில்' என்று. இதையே விவரிக்கிறார்—'மண்ணை' இத்யாதியால். 'புண் நுகர்' இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'அதுகளை' இத்யாதியால். தாரை – நுனி. அலகு

பெரிய அலகில் நசித்துப் போகும்படி யுத்தத்தில் முற்காலத்தில் விஜ்ரும்பித்தவன் பல்லவர்க்கெல்லாம் அரசான பல்லவனுய்த்து, அவன் பணி செய்யப் பணிகொண்ட பரமேஶ்வரனுக்கு விண்ணோடொத்த நகரம் அதுவே, அங்கு நடமினோ நமர்கள் உள்ளீர் என்று கருத்து. 3

---

— வாய். 'பரந்தவன்' என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்— 'விஜ்ரும்பித்தவன்' என்று. 'பல்லவர்' இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'பல்லவர்க்கெல்லாம்' இத்யாதியால். 'பரமேச்சுர விண்ணகரமதுவே' என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'பரமேஶ்வரனுக்கு' இத்யாதியால்.

இந்தப் பாட்டிற்கு பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யானம் பின்வருமாறு:—

(உரம் இத்யாதி) — 'ப்ரக்ருஷ்டவிஜ்ஞான பலைகதாமனி' என்கிறபடியே பிராட்டிமாரும் தானும் கூட ஏறித் துகையா நின்றால் பொறுக்கைக்கீடான தாரண ஸாமர்த்யத்தையும், வேண்டின இடங்களிலே திருவுள்ளக் கருத்தறிந்து குழைந்து கொடுக்கைக்கீடான மென்மையையுமுடைய திருவனந்தாழ்வான் மேலே, முன்பொரு நாளிலே ஶ்லாக்யமான வடிவையுடையனாய்க் கொண்டு கடலிலே கண் வளர்ந்தருளினான். (வரம் இத்யாதி) அருளாளப் பெருமாளாய் நின்று ஸர்வாபேக்ஷிதங்களையும் தருகிறவனுக்கு வாஸஸ்தானம்.

ரத்ன மயமான மாடங்கள் சூழ்ந்து தர்ஶநீயமாயிருக்கிற கச்சியில். (நிரந்தித்யாதி) 'மண்ணை' என்று ஆற்றுக்கும், படைவீட்டுக்கும் பேர், 'திருச்சிற்றாறு' என்று ஆற்றுக்கும் திருப்பதிக்கும் பேராகிறாப்போலே. ... ...

இதின் அரும்பதத்தில் '(உரமித்யாதி) முதற் பாட்டில் அர்த்தமான பாலந தர்மத்தை, திருப்பாற்கடலில் கண் வளர்ந்தும், ஹஸ்திகிரியில் அருளாளராயும் நடத்தின படியை அநுஸந்திக்கிறார் என்று ஸங்கதி. . . . [கடலிலே திருவனந்தாழ்வான் மேலே கண் வளர்ந்தருளினான்] என்றநுவதித்து, இதுக்கீடாக மூலத்தையும் அந்வயித்துக் கொள்வது. வரந்தருமவனாய் - 'வரதஸ் ஸர்வ பூதாநாம் அத்யாபி பரித்ருஶ்யதே' என்கிற வரதனாய், மாமணி — சிந்தாமணி போலே ஸ

வாபேக்ஷிதங்களையும் தருகையே ஸ்வபாவமாக உடையவனென்று ஸப்தார்த்தம் திருவுள்ளம் பற்றி அருளிச்செய்கிறார் (அருளாளப் பெருமாள் இத்யாதி) அருளாளப் பெருமாளென்று தேப்பெருமாளுக்கு ப்ரஸித்தமான திருநாமமிறே. எம்பெருமானார் யஜ்ஞ மூர்த்திக்கு அருளாளப் பெருமாள் என்று தேப்பெருமாளுடைய திருநாமம் சாத்திற்றும் ப்ரஸித்தமிறே.' இத்யாதி.

இந்தப் பாட்டில் 'வரம் தரு மாமணி வண்ணனிடம் . . பரமேச்சுர விண்ணகரமதுவே' என்று அருளிச்செய்யப்பட்டிருக்க, 'வரம் தரு' என்பதை மாத்திரம் கொண்டு ஸ்ரீ தேவப்பெருமாளுக்கு வரதன் என்கிற அஸாதாரணமான திருநாமமாதலால் இது அவர் விஷயமான மங்களா ஸாஸனம் என்று சிலர் நிருபிக்கப் பார்க்கிறார்கள்.

இது உசிதமல்ல. ஏனெனில் ஆழ்வார்களுடைய மங்களாஸாஸனம் அந்தந்தத் திவ்ய தேஸத்தைப் பற்றி இருக்கிறதேயன்றி திவ்ய தேஸத்தைச் சொல்லாமல் எம்பெருமானுடைய திருநாமத்தைக் கொண்டு ஓரிடத்திலும் செய்யப்படவில்லை. ஆகையினால் இந்தப் பாட்டும் இத்திருமொழியிலுள்ள மற்றப் பாட்டுக்களைப்போல இதில் கண்டோக்தமான திருப்பரமேஸ்வர விண்ணகரம் என்னும் திருப்பதி விஷயம் என்பதே உசிதம். இப்படியே ப்ராசீன திவ்ய ப்ரபந்த ஸ்ரீ கோஸங்களில் திவ்ய தேஸங்களையும், அவற்றை மங்களா ஸாஸனம் செய்தருளிய ஆழ்வார்களையும், அந்த மங்களா ஸாஸன பாசுரங்களையும் குறிப்பிட்டிருக்கிறது. அதில் இப்பதிகம் முழுவதும் திருப்பரமேஸ்வர விண்ணகர விஷயம் என்று நிரூபிக்கப்பட்டிருக்கிறதேயல்லாமல் 'உரம் தரு' என்றாரம்பிக்கும் பாசுரம் ஸ்ரீ ஹஸ்திகிரியில் ஸேவை ஸாதிக்கும் ஸ்ரீ தேவப்பெருமாள் விஷயம் என்று நிரூபிக்கப்படவில்லை. மேலும் இந்த நிரூபணத்தின் இறுதியில் ஸ்ரீ தேவப்பெருமாளுக்கு ஆழ்வார்களின் மங்களா ஸாஸனம் இல்லை என்பதை எம்பெருமானார் அப்யுபகமம் செய்திருக்கிறார் என்பதும் அவர் 'உயர்வற உயர் நலம்' என்னும் திருவாய்மொழியை ஸ்ரீ தேவப்பெருமாள் விஷயமாய் இருக்கட்டும் என்று ஸமர்ப்பித்தார் என்று நிரூபித்திருப்பதினால் ஸ்பஷ்டமாய் ஏற்படுகிறது. நாமும் இவற்றை அனுஸரித்தே நாம் சிறிது காலத்திற்கு முன்பு வெளியிட்ட ஸ்ரீ ஹஸ்திகிரி மாஹாத்ம்ய வ்யாக்யானத்தில் ஸ்ரீ தேவப்பெருமாளுக்கு இந்த ஏற்ற

மில்லையே யாயினும் அவர் நமக்குப் பரமோத்தேஶ்யர் என்பதற்குக் காரணங்களை நிரூபித்தோம். தத்வார்த்தம் இப்படியிருக்க, சிலர் தங்களுடைய புல்லறிவாண்மையைத் தாங்களே வெளியிட்டுக்கொண்டு நாம் ஸ்ரீ தேவாதி ராஜனைத் தூஷித்ததாகவும், அவருக்கு ஆழ்வார்களின்மங்களா ஶாஸனம் இல்லை என்பது தவறு என்றும், பெரியவாச்சான்பிள்ளையின் வ்யாக்யானத்தில் இந்தப் பாட்டு ஸ்ரீ தேவ்ராஜன் விஷயமாக நிர்வஹிக்கப்பட்டிருக்கிறது என்றும், இப்புடைகளில் தங்கள் மனம் போன போக்காக ப்ரமாண ஸரணியை ஈஷத்தும் கவனிக்காமல் சில விஷயங்களைச் சொல்லுகிறார்கள். அவை இங்கு கொஞ்சம் விசாரிக்கப் படுகின்றன.

இந்தப் பாட்டிற்குப் பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யானத்திலிருந்து ப்ரக்ருதத்திற்கு உபயோகமான பாகம் கீழே உதாஹரிக்கப்பட்டிருக்கிறது. கீழ் நிரூபித்தபடியே அத்திகிரியின் ப்ரஸ்தாவம் மூலக்ரந்தத்தில் செய்யப்படாமல் இருக்க இங்கு அதற்கு விருத்தமாக வ்யாக்யானம் இருந்ததேயாகில் அது தவறு என்று சொல்ல வேண்டுமேயன்றி மூல க்ரந்தத்தை வ்யாக்யானத்திற்கு அனுகுணமாக மாற்றமுடியாது. ஆகையினாலேயிறே பூர்வ மீமாம்ஸா ஸூத்ரங்களுக்கு ஜைமினியினுடைய அபிப்ராயத்திற்கு மாறுதலாக வ்யாக்யானம் செய்தது தவறு என்று

‘ கஷிவெஷு கஷூ௱ஷெஷை கஷிெதாயெ௷ விரொயஃ ’

என்று ஸ்ரீ தேஶிகன் அருளிச்செய்தது. ஆனாலும் கீழ் உதாஹரிக்கப்பட்ட வ்யாக்யானத்தில் இந்தப் பாட்டு ஸ்ரீ தேவ ராஜன் விஷயம் என்று ஸ்பஷ்டமாக நிரூபிக்கப்படவில்லை—‘ வரம் தரு ’ என்னும்பதத்திற்கு அர்த்தமாய் ‘ அருளாளப்பெருமாளாய் நின்று ’ இத்யாதியே அருளிச்செய்திருப்பதினாலும், அதற்கு அருளினால் ஆளப்படுமவனாய் என்று அர்த்தம்சொல்லுவது பொருந்துமாகையினாலும். இப்படி நிரூபித்தால் தான் இது மேல் பதத்துடன் அந்வயிக்கும். இல்லாவிட்டால் மேல் பதங்களுடன் சேர்த்து ஸ்வரஸமாக அர்த்தம் சொல்லமுடியாது. ஏனெனில் இங்கு ‘ அருளாளப்பெருமாளாய் நின்று ... தருகிறவனுக்கு வாஸஸ்தானம் ’ என்று நிரூபிக்கப்பட்டிருப்பதினாலே அந்த வாஸஸ்தானம் பரமேஶ்வர விண்ணகரம் என்றே ஏற்படுகிறபடியினால். ஆக அத்திருநாமம் அந்த க்ஷேத்திரத்து எம்பெருமானுடைய திருநாமம் என்றாகுமேயொழிய அருளாளப்பெருமாள் என்கிற ஒரு

திருநாமமுடைய தேவப்பெருமாள் வஸிக்கும் இடமான அத்திகிரி என்கிற அர்த்தம் ஸித்திக்காது. கீழ் உதாஹரிக்கப்பட்ட பெரியவாச்சான் பிள்ளையின் வ்யாக்யானத்தின் அரும் பதத்தில் 'வரம் தரு' என்பதற்கு அருளாளப்பெருமாளாய் நின்று என்றும், 'மாமணிவண்ணனிடம்' என்பதற்கு ஸர்வாபேக்ஷிதங்களையும் . . வாஸஸ்தானம் என்றும் அர்த்தம் ஏற்படுகிறது என்று நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இது உசிதமல்ல. ஏனெனில் 'வரம் தரு' என்னும் பதம் வரத்தைக் கொடுக்கிற என்கிற அர்த்தத்தைச் சொல்லுமேயொழிய வரத்தைக் கொடுக்கிறவன் என்கிற அர்த்தத்தைச் சொல்லாது. அதாவது 'வரம் தரு' என்னும் பதம் வரதன் என்னும் பதத்திற்கு ஒரு பொழுதும் பர்யாயமாகாது. வரதன் எழுந்தருளுகிறார் என்று வ்யவஹரிக்கிறோமே ஒழிய வரம் தரு எழுந்தருளுகிறார் என்று ஒருவரும் சொல்லுவதில்லையல்லவா. மேலும் இங்கு 'வரம் தரு' என்பது மேல் 'மா மணி வண்ணன்' என்பதுடனே விசேஷணமாக (எச்சமாக) அந்வயிக்கிறபடியினாலும் அந்த இடம் பரமேசுவர விண்ணகரம் என்று ஏற்படுகிறபடியினாலும் இது ஸ்ரீ ஹஸ்திகிரி விஷயம் என்பது உசிதமல்ல. மேலும் மணி என்கிற பொதுவான பதத்தை சிந்தாமணியாகிற ஒரு மணி என்றதும் யுக்தமல்ல—ஸர்வ பல ப்ரதஞன ஸர்வேஸ்வரனை த்ரைவர்க்கிகமான பலத்தை மட்டும் கொடுக்கக்கூடிய சிந்தாமணிக்கு ஸத்ருசம்என்பதுஉசிதமல்லவாகையினால். மேலும் இங்கு பதங்களுக்கு யதாக்ரமம் அந்வயித்து ஸ்வரஸமான அர்த்தம் ஏற்படும்பொழுது தூராந்வயமாகவும் ஒரு கால் என்னும் பதத்திற்கு ஸ்வரஸமல்லாத அர்த்தமாகவும் வ்யாக்யானம் செய்திருப்பதும் யுக்தமல்ல. ஏனெனில் மூலத்தில் உரம் தரு மெல்லணைப்பள்ளி கொண்டான் ஒருகால் முன்னம் மாஉருவாய்கடலுள் வரம்தரு மாமணிவண்ணனிடம் என்றிருப்பதை மாற்றி உரம்தரு மெல்லணைமுன்னம் ஒருகால் மா உருவாய் கடலுள் பள்ளிகொண்டான் வரம்தரு மாமணி வண்ணனிடம் என்று அந்வயித்தல்லவோ பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யானமிட்டிருப்பது. திருப்பாற்கடலில் எப்பொழுதும் சயனித்துக்கொண்டே இருக்கும் பகவானை ஒருகால் பள்ளிகொண்டான் என்று சொல்லுவதும் ஸ்வரஸமான அர்த்தமில்லையல்லவா. மேலும் வாதிகேஸரி அழகிய மணவாளஜீயருடைய வ்யாக்யானத்தில் 'திருவனந்தாழ்வானைப் படுக்கையா

கக் கொண்டு அதிலே பள்ளி கொண்டான் ஒரு காலத்திலே விலக்ஷண மான வடிவுடனே திருப்பாற்கடலிலே ‘ வரம்தரும் பெருமாள் ’ என்று விருது பிடித்து ஸர்வர்க்கும் ஸர்வாபேக்ஷிதங்களையும் கொடுத்தருளுகி றவனுக்கு இடம் ’ இத்யாதியே நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இதில் ‘ கடலுள் வரம்தரு ’ என்கிற அந்வயமே அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. இப்படியே பெரிய பரகால ஸ்வாமியும் அந்வயித்து கடலுள் வரம்தரு என்பதற்கு ஸ்வரஸமான அர்த்தம் அருளிச்செய்திருக்கும் ப்ரகாரம் கீழே நிரூபிக்கப்பட்டிருக்கிறது. ஆகையினால் ஸ்ரீ ஹஸ்திகிரி என்கிற திவ்ய தேசம் ப்ரஸ்தாவிக்கப்படாமையினாலும், இப்பாட்டில் ப்ரயோகி க்கப்பட்டிருக்கும் வரம் தரு என்பதற்கு வரத்தைக் கொடுக்கிற என் கிற அர்த்தமே மிகவும் ஸ்வரஸமானதாகையாலும் இப்பாட்டு ஸ்ரீ தே வராஜன் விஷயம் என்பதை ஶாஸ்திரஜ்ஞர்கள் அங்கீகரிக்கமாட்டார் கள்.

ஆனாலும் சிலர் பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யானத்தில் அரு ளாளப்பெருமாளாய் என்று நிரூபிக்கப்பட்டிருப்பதினாலும், அத் திரு நாமம் யோக ரூடியினால் ஸ்ரீ தேவப்பெருமாளையே சொல்லுவது ப்ர ஸித்தமாகையினாலும் இப்பாட்டு அவர் விஷயமாகத் தட்டில்லையே என் பார்கள். இதுவும் உசிதமல்ல. ஏனெனில் வரம் தரு என்பதை வரத ஶப்தத்திற்குப் பர்யாயம் என்று க்லிஷ்டமாகக் கல்பித்தாலும் இங்கு அந்தப் பதம் விஶேஷணமாக ப்ரயோகிக்கப்பட்டிருப்பதினால் அது தன் ரூடி ஶக்தியை இழந்து யோக ஶக்தியினால் வரத்தைக் கொடுக் கிற என்கிற அர்த்தத்தையே சொல்லுமாகையினாலே இது ஸ்ரீ தேவப் பெருமாள் விஷயம் என்பது ஶாஸ்திரஜ்ஞர்களுக்கு ஸம்மதமாகாதா கையினால். அப்படியே ஸ்ரீமத் தத்வ டீகையில் ப்ருந்மணி ஸ்ரீநிவா ஸௌ என்னும் பதங்களின் வ்யாக்யானவஸரத்தில்

‘ 𑌯𑌥𑌾 𑌬𑍃𑌹𑌸𑍍𑌪𑌤𑍇𑌃 𑌶𑌕𑍍𑌰𑌾𑌦𑌿𑌭𑌿𑌰𑍍𑌦𑍇𑌵𑍈𑌶𑍍𑌚 𑌤𑌥𑍈𑌵 𑌶𑍍𑌰𑍀𑌨𑌿𑌵𑌾𑌸 𑌶𑌬𑍍𑌦𑍇𑌨 𑌵𑌿𑌶𑍇𑌷𑍍𑌯𑌤𑍇 । 𑌯𑌾 𑌸𑌰𑍍𑌵𑍈𑌰𑌾𑌶𑍍𑌰𑍀𑌯𑌤𑍇 𑌸𑌾 𑌚 𑌤𑌦𑌾𑌶𑍍𑌰𑌯𑍇𑌤𑌿 ’

என்றும்,

‘ 𑌶𑍍𑌰𑍀𑌨𑌿𑌵𑌾𑌸𑌸𑍍𑌯 𑌵𑌾 𑌵𑌾𑌚𑌕𑌵𑌿𑌨𑍍𑌯𑌾𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌾𑌕𑌾𑌰𑌬𑍍𑌰𑍃𑌹𑌕𑌵 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑍇 𑌬𑍃𑌹𑌸𑍍𑌪𑌤𑌿𑌵𑌾𑌚𑌸𑍍𑌯𑌕𑌵𑍈 𑌵𑌿𑌶𑍇𑌷𑌣𑍀𑌕𑌾𑌯𑍁𑌜𑌿𑌤𑌿 ’

என்றும் அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. இதின் கருத்து—யோக ரூடி ஶக்தியினால் ஒரு அர்த்தத்தைக் குறிக்கும் பதங்கள் மற்றொரு பதத்திற்கு விஶேஷணமாக ப்ரயோகிக்கப்படும்பொழுது அவை தங்களுடைய ரூடி ஶக்தியை இழந்து யோக வ்யுத்பத்தியினால் ஏற்படும் அர்த்தத்தையே சொல்லும் என்பது ப்ரஸித்தம். ஆகையினால் ப்ரும்ம ஸ்ரீநிவாஸ என்கிற பதங்கள் தங்களுடைய ரூடி ஶக்தியினால் பரமாத்மாவைக் குறித்தாலும் இங்கு ஸ்ரீநிவாஸ என்னும் பதம் ப்ரும்மணி என்கிற பதத்திற்கு விஶேஷணமாகும்பொழுது அது தன் ரூடி ஶக்தியை இழந்து எவள் எல்லோராலும் ஆஶ்ரயிக்கப்படுகிறாளோ அவள் அவனை ஆஶ்ரயித்திருக்கிறாள் என்கிற யோக வ்யுத்பத்தியினால் ஏற்படுகிற அர்த்தத்தையே குறிக்கிறது. இப்படியே ப்ரும்மணி என்னும் பதத்தை ஸ்ரீநிவாஸ ஶப்தத்திற்கு விஶேஷணமாகக்கொண்டால் அது தன் ரூடி ஶக்தியை இழந்து லக்ஷணையினால் ப்ரும்ம ஶப்தத்தினால் சொல்லப்படுகிற ஸ்ரீநிவாஸன் இடத்தில் என்கிற அர்த்தத்தையே சொல்லுகிறது—என்பது. இப்படியே அரும்பதத்தில் உதாஹரிக்கப்பட்டிருக்கும் வசனத்தில் வரத: என்னும் பதம் ஸர்வபூதாநாம் என்னும் மற்றொரு பதத்துடன் சேர்த்து ப்ரயோகிக்கப்பட்டிருப்பதினால் அது தன் ரூடி ஶக்தியை இழந்து யோக வ்யுத்பத்தியினால் வரத்தைக் கொடுக்கிற என்கிற அர்த்தத்தையே சொல்லுகிறது என்று ப்ரமாணஶரணர்கள் அங்கீகரிக்கவேண்டும். அப்படியே வேதாந்த கௌஸ்துபத்தில்

'श्रुतिसम्बन्धापेक्षैव योगरूढितापि स-
वृत्ता तद्भावाभावं तन्निवारं प्रसज्यते । त-
स्मात् तदाश्रयत्वस्यैव [illegible]
[illegible] यथाशक्त्येवेति सम्भव [illegible]:'

என்று நிரூபிக்கப்பட்டதிறே. ஆகையினால் பூர்வர்களுடைய ஸூக்திகள் ஒன்றிலும் ஸ்ரீ தேவப்பெருமாளுக்கு ஆழ்வார்களின் மங்களாஶாஸனம் உண்டு என்று நிரூபிக்கப்படாமையினாலும், அது இல்லை என்று நிரூபிக்கிற ப்ரமாணங்கள் இருக்கிறபடியினாலும், திருப்பரமேஶ்வர விண்ணகர விஷயமான இந்தப் பாட்டை ஸ்ரீ தேவப்பெருமாள் விஷயமாக பெரியவாச்சான் பிள்ளை வ்யாக்யானத்தை நிர்வஹித்தால் அவருக்கு வ்யாக்யானம் செய்யத் தெரியவில்லை என்கிற தோஷம் ஏற்படுகிறபடியினாலும், மூலத்திலுள்ள வரம் தரு என்பது கீழே

அண்டமும் எண் திசையும் நிலனும்
அலை நீரொடு வான் எரி கால் முதலா
உண்டவன் எந்தை பிரானது இடம்
ஒளி மாடங்கள் சூழ்ந்தழகாய கச்சி
விண்டவர் இண்டைக் குழாமுடனே
விரைந்தார் இரியச் செருவில் முனிந்து
பண்டொரு கால் வளைத்தான் பணிந்த
பரமேச்சுர விண்ணகரமதுவே. 4

ப - ரை. ] அண்டமும், எண் திசையும் — எட்டு திக்குகளும், நிலனும்—பூமியும், அலை நீரோடு - அலையும்படியான ஜலத்துடன்கூடிய ஸமுத்திரத்துடன், வான் — ஆகாஶமும், எரி - அக்னியும், கால் - காற்றும், முதலா — இவை முதலாக எல்லாவற்றையும், உண்டவன்- விழுங்கினவனான, எந்தை — தந்தையும், பிரானது — உபகாரகனுமான பகவானுடைய, இடம், ஒளி — ப்ரகாசிக்கிற, மாடங்கள் சூழ்ந்துஅழகாயகச்சி, செருவில் - யுத்தத்தில், விரைந்தார் — வேகமாய் எதிர்

---

நிரூபித்தபடியே ஒருகாலும் ஸ்ரீ தேவ ராஜனைக் குறிக்காதாகையினாலும் இப்பாட்டினால் ஸ்ரீ தேவப்பெருமாளுக்கு மங்களாஶாஸனம் ஏற்படாது. ஆகையினால் அஸத் தர்க்கங்களினால் இல்லாத பெருமையை இருப்பதாக நிரூபிக்கப் பார்ப்பது பண்டித க்ருத்யமன்று. ஆகையினால் இவ்விஷயத்தில் சிலர் ஶாஸ்திர மர்யாதையைக் கைவிட்டுத் தங்கள் மனம்போனபோக்கில் சொல்லுவதை நாம் அநாதரித்துநிற்கிறோம். ‘கொள்ளத் துணியினும் கோதென்றிகழினும். எள்ளத்தனையுகவாது இகழாதென் எழில் மதியே’ என்று ஆசார்ய ஸார்வபௌமன் பணித்தருளிய நிலையில் நிற்கிறோம்.

‘ ஸாம்ஸ்வ தசேவ ந ஊர்ஷெ ஸாநாவி ந ஸமா ஹ்ரா ணீதா ஷாணாதாதி: ’

என்கிறபடியே இவ்விஷயத்தில் எவர் எவ்வளவு நூதன யுக்திகளைச்சொன்னாலும் தத்வ ஸ்திதியில் மாறுட்டம் ஒரு பொழுதும் உண்டாகாதாகையினால் அந்தத் தத்வ ஸ்திதியை மட்டும் நிரூபித்து நாம் இத்துடன் உபரதராகிறோம்.

*த்து வந்தவர்களும்,* விண்டவர் – *சத்ருக்களுடைய,* இண்டை – *திரண்ட,* குழாம்உடனே - *கூட்டத்துடனே,* இரிய – *சிதைந்து ஓடும்படி,* முனிந்து – *கோபித்து,* பண்டொரு கால் - *முன் ஒரு காலத்தில்,* வளைத்தான் - *வில்லைவளைத்த பல்லவராயன்,* பணிந்த பரமேச்சுரவிண்ணகரமதுவே. 4

மஹா ப்ரளயத்தில் அண்டத்தோடு கூடின எட்டுத் திக்குகளும் ஸமுத்திரங்களோடு பூமியும் ஆகாஶ அக்னி வாயுக்களும், இது முதலானதுகளை எல்லாம் உபஸம்ஹரித்தவனுனது கொண்டு என்னுேடு கூடின இஜ்ஜகத்துக்கு ஶிக்ஷகனுன தந்தையும் பரமோபகாரனுமானவனுக்கதான அவ்விண்ணுன இடம் ஒளிபெற்ற மாடங்கள் சூழ இருந்ததால் அழகு பெற்ற கச்சியில் பரமேஶ்வர விண்ணகரமது என்று காட்டுகிறுர். ஶத்ருக்களுடைய குழாமுடனே முற்தூசி ஏறினவர்களும் சிதறி ஓட யுத்தத்தில் சீறி முற்கா

---

மேலே ‘ உண்டவன் ’ *என்று அருளிச்செய்திருப்பதைக் கடாக்ஷித்து அது செய்தருளிய காலத்தை நிரூபித்தருளுகிறுர்*—‘ மஹா ப்ரளயத்தில் ’ *என்று.* ‘ அண்டமும் ’ *இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறுர்*—‘ அண்டத்தோடு ’ *இத்யாதியால்.* ‘ அலைநீரோடு நிலனும் ’ *என்று அந்வயித்து அர்த்தம் அருளிச்செய்கிறுர்*—‘ ஸமுத்திரங்களோடு ’ *இத்யாதியால்.* ‘ உண்டவன் ’ *என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறுர்*—‘ உபஸம்ஹரித்தவன் ’ *என்று.* ‘ கூடின’ *என்பது* ஜகத்துக்கு *விஶேஷணம். அதாவது தான் உள்பட* இந்த *உலகங்களுக்கு என்றபடி.* ஶிக்ஷகனுன *என்பதுடன் முன் கெட்ட காரியங்களில் ப்ரவ்ருத்தித்தால் என்று சேர்த்துக்கொள்ளவேண்டும்.* ‘ எந்தை ’ *இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறுர்*—‘ தந்தையும் ’ *என்றுரம்பித்து.* அவ்விண்ணுன – *அந்தப் பரம பதத்திற்கு ஸத்ருஶமான.* ‘ விண்டவர் ’ *இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறுர்*— ‘ ஶத்ருக்களுடைய ’ *என்றுரம்பித்து.* ‘ விரைந்தார் ’ *என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறுர்*—‘ முற்தூசி ’ *இத்யாதியால். அதாவது யுத்தத்தில் முதலில் வந்து நின்ற என்றபடி.* ‘ பணிந்த ’ *இத்*

லத்தில் வில் வளைத்தவன் அடிமை செய்த இடமானது இந்தப் பரமேஸ்வர விண்ணகரமே என்கிறார். 4

*தூம்புடைத் திண் கை வன் தாள் களிற்றின்*
*துயர் தீர்த்து அரவம் வெருவ முன நாள்*
*பூம்புனல் பொய்கை புக்கானவனுக்கிடம் தான்*
*தடம் சூழ்ந்தழகாய கச்சி*
*தேம்பொழில் குன்றெயில் தென்னவனைத்*
*திசைப்பச் செருமேல் வியந்தன்று சென்ற*
*பாம்புடைப் பல்லவர் கோன் பணிந்த*
*பரமேச்சுர விண்ணகரமதுவே.* 5

*ப – ரை.* ] தூம்புடை – *துளையையுடைய,* திண் - *த்ருடமான,* கை – *துதிக்கையையும்,* வன் - *வலியதான,* தாள் – *தாளையுமுடைய,* களிற்றின் – *யானையின், அதாவது ஸ்ரீ கஜேந்த்ராழ்வானுடைய,* துயர் - *துக்கத்தை,* தீர்த்து - *போக்கடித்து,* அரவம் - *பாம்பாகிய காளியன்,* வெருவ - *பயப்படும்படியாக,* முன நாள் - *முன் ஒரு காலத்தில்,* பூம் - *அழகிய,* புனல் – *ஜலமுள்ள,* பொய்கை - *தடாகத்திலே,* புக்கானவனுக்கு – *புகுந்தவனுக்கு,* இடம், தடம் சூழ்ந்தழகாய கச்சி, தேன் - *தேனையுடைய,* பொழில் – *தோப்புக்களையும்,* குன்று – *பர்வதம் போன்ற,* எயில் - *மதில்களையுமுடைய,* தென்னவனை – *பாண்டியனை,* திசைப்ப - *திகைக்கும்படி,* அன்று - *அக்காலத்தில்,* செரு மேல் – *யுத்தத்திலே,* வியந்து - *ஆஶ்சர்யப்பட்டு,* சென்ற - *கிட்டினவனை,* பாம்புடை - *பாம்பைக் கொடியாகவுடைய,* பல்லவர் கோன் பணிந்த பரமேச்சுர விண்ணகரமதுவே. 5

---

*யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—*‘ அடிமை செய்த ’ *என்றாரம்பித்து.* 4

பெரிய துளையையுடைய திண்ணிதான கையையும், பனைபோல் வலிய தாளையுமுடைய ஸ்ரீ கஜேந்திரனுடைய க்ராஹ க்ரஸன துக்கத்தைத் தீர்த்தும், காளியனானவன் அஞ்சி ஓடும்படியாக முன நாள் அழகிய ஜலமாம்படியாக காளியனால் விஷமயமான பொய்கையில் புக்கும் ப்ரஸித்தனான அவனுக்கு இடமானது தான் சூழ்ந்த தடாகங்களால் அழகு பெற்ற கச்சியில் என்றந்வயம், தேன் பிறைகளையுடைய சோலைகளையே வளைய உடையதாய் குன்று போன்ற ப்ராகாரத்தையுடைத்தான படைவீட்டையுள்ள பாண்டியனை யுத்தத்திலே அறிவு கெடப் பண்ண, அத்தசையில் விஸ்மயப்பட்டு பெரிய ஆதரத்தோடு சென்று கிட்டின ஸப்த பண ஸர்ப்பத்தைக் கண்டுகந்து, ததாக்ருதியை ஸ்வ விஜய த்வஜ சின்னமாக உடையவனான பல்லவராயன் அடிமைப்பட்ட இடமான பரமேச்வர விண்ணகரமதுவே, ஸேவியுங்கோள் என்கிறார். 5

*திண் படைக் கோளரியினுருவாய்த்*
*திறலோனகலம் செருவில் முன நாள்*
*புண் படப் போழ்ந்த பிரானதிடம்*

---

'தூம்புடை' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்— 'பெரிய' இத்யாதியால். 'துயர்' என்பதை விவரித்தருளுகிறார்— 'க்ராஹ' இத்யாதியால். அதாவது முதலை பிடித்துக் கொண்டதினால் உண்டான துக்கத்தை என்றபடி. 'அரவம்' இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'காளியனானவன்' இத்யாதியால். 'பூம்புனல்' இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'அழகிய' இத்யாதியால். அதாவது முன்பு காளியனுடைய விஷத்தினால் கெடுக்கப்பட்டு ப்ராணிகளுக்கு அணுகவும் ஒண்ணாதபடியிருந்த ஜலமானது ஸர்வோபஜீவ்யமாவதற்காக என்றபடி. 'தேம் பொழில்' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'தேன்' இத்யாதியால். 'தென்னவனை' என்பது வியந்து என்பதுடனாவது சென்ற என்பதுடனாவது அந்வயிக்கிறது. 'பாம்புடை' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'ஸப்த பண' இத்யாதியால். 5

பொரு மாடங்கள் சூழ்ந்தழகாய கச்சி
வெண் குடை நீழல் செங்கோல் நடப்ப
விட வெல் கொடி வெல் படை முன்னுயர்த்த
பண்புடைப் பல்லவர் கோன் பணிந்த
பரமேச்சுர விண்ணகரமதுவே. 6

ப — ரை. ] திண் — ( தன்னுடைய நகங்களாகிற ) த்ருடமான, படை — ஆயுதத்தையும், கோள் - மிடுக்கையுமுடைய, அரியின் உருவாய் — ஸ்ரீ நரஸிம்ம ரூபியாய்க்கொண்டு, திறலோன் — பராக்ரமஶாலியான ஹிரண்யனுடைய, அகலம் — மார்பை, முன நாள் — முன்காலத்தில், செருவில் — யுத்தத்தில், புண் — வ்ருண மயமான ஶரீரம், பட — நசிக்கும்படி, போழ்ந்த — பிளந்த, பிரானது - உபகாரகனான பகவானுக்கு, இடம், பொரு — ஒன்றுக்கொன்று ஶத்ருஶங்களாயிருக்கும், மாடங்கள் சூழ்ந்தழகாயகச்சி, வெண் குடை நீழல் - வெள்ளைக் குடையின் நிழலின் கீழே, செங்கோல் நடப்ப — ராஜ்ய பரிபாலனத்தைச் செய்யும்படி, வேல்—ஜயிக்கக்கூடிய, விடக்கொடி - ஸர்ப்ப த்வஜத்தை, வெல் — ஜயத்தைத் தரக்கூடிய, படை முன் — ஸைந்யங்களுக்கு முன்பே, உயர்த்த — உயர எடுத்த, பண்புடை — பராக்ரமத்தையுடையவனான, பல்லவர்கோன் பணிந்த பரமேஶ்வரவிண்ணகரமதுவே. 6

தன் உகிரைத் திண்ணிய படையாம்படி மிடுக்கையுடைய ந்ருஸிம்மமாய் மிடுக்கனான ஹிரண்யனுடைய அகன்ற மார்பை யுத்தத்தில் முன நாள் புண் நிறைந்த உடம்பு படும்படியாகப்

---

' திண்படை ' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் —' தன் ' இத்யாதியால். இத்தால் திருவாழியாழ்வான் முதலான திவ்யாயுதங்கள் படையவைகளாய்ப் போய் விட்டபடியினாலே அவைகளை அநாதரித்து விட்டுத் தன்னுடைய திருநகங்களையே பெரிய ஆயுதமாகக் கருதினான் என்பது த்யோதிதம். இங்கு
' ஹதாஶிஷ வாஶாதந ஹஸ்தாண ம்ருது தீக்ஷ்ணம் வாணிஜெ: '
என்று ஸ்ரீ தஶாவதார ஸ்தோத்திரத்தில் ஆசார்யன் அருளிச்செய்ததை அநுஸந்தேயம். ' திறலோன் ' இத்யாதிக்குத் தாத்பர்யம் அரு

பிளந்த மஹோபகாரகனுக்கு இடம் ஒன்றுக்கொன்றே ஒப்பான மாடங்களால் சூழ்ந்தழகு பெற்ற கச்சியில் மஹா ராஜ சின்னமான ஶ்வேத சத்ரத்தினுடைய நிழல் பெற்றவனாய் தன் ஆஜ்ஞை நடக்கும்படி ஸப்த பண ஸர்ப்பாங்கித விஜய த்வஜத்தை விஜயஶ்ரீயை உடைத்தான ஸ்வஸேநா முகத்தில் எடுத்த ஸாமர்த்தியத்தையுடைத்தான பல்லவராயன் அடிமைப்பட்ட பரமேஶ்வர விண்ணகரமதுவே என்கிறார். 6

இலகிய நீள் முடி மாவலி தன் பெரு
வேள்வியில் மாணுருவாய் முன நாள்
சலமொடு மா நிலம் கொண்டவனுக்கு
இடம் தான் தடம் சூழ்ந்தழகாய கச்சி
உலகுடை மன்னவன் தென்னவனைக்
கன்னி மா மதில் சூழ் கருவூர் வெருவப்
பல படை சாய வென்றான் பணிந்த
பரமேச்சுர விண்ணகரமதுவே. 7

ப—ரை.] இலகிய—ப்ரகாஶிக்கிற, நீள்—நீண்ட, முடி—கிரீடத்தையுடைய, மாவலி—மஹாபலிசக்ரவர்த்தியினுடைய, தன்-தன்விஷயமான, பெரு – பெரிய, வேள்வியில் – யாகத்தில், மாண் உருவாய் – வாமன

---

ளிச்செய்கிறார் —' மிடுக்கனை ' இத்யாதியால். ' புண் ' என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—' புண் ' இத்யாதி. ' போரு ' என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—' ஒன்றுக்கொன்றே ' இத்யாதியால். ' வெண் குடை ' இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார் —' மஹாராஜ ' இத்யாதியால்.

' வாணஜ்ஞ ஸஹாதவத்ரஸஹ ஹாயாயாம் ஜாஸிதம் உயா '

என்றதைப் போல வெண் குடையின் நிழலிலிருந்தே ராஜ்ய பரிபாலனம்செய்தவன் என்று கருத்து. ' விடவேல் கோடி ' என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—' ஸப்த ' இத்யாதியால். ' வேல் படை ' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் – ' விஜய ' இத்யாதியால். 6

ரூபியாய்ச் சென்று, முன நாள், மா – பெரியதான, நிலம் – பூமி யை, சலமொடு – உதக பூர்வகமாக, கொண்டவனுக்கு – அங்கீகரித் தவனுக்கு, இடம் தான் தடம் சூழ்ந்து அழகாய கச்சி, கன்னி – கன்னிகைகள் போல் அழகான, மா – பெரிய, மதில் – மதில்களி னால், சூழ் - சூழப்பட்ட, கருவூர் – கருவூர் என்னும் ஊர், வெருவ – பயப்படும்படியாக, பலபடை - அனேகம் வகைப்பட்டதான அதாவது சதுரங்க ஸேனை, சாய - நசிக்கும்படி, உலகுடை - லோகத்திற்கு உடையவனான, மன்னவன்–ராஜாவாகிய, தென்னவனை–பாண்டியனை, வென்றான் – ஜயித்தவன், பணிந்த பரமேச்சுர விண்ணகரமதுவே. 7

ஒளி விட்டு விளங்குகிற நீண்ட கிரீடமுள்ள மஹா பலி செய்யுமதான ஸ்வ விஷயக ஆராதன ரூப மஹா யஜ்ஞத்தில் வாமனனாய் முற்காலத்தில் அவன் தாரை வார்த்த ஜலத்தைக் கைப் பற்றினவுடனே பெரிய நிலத்தை அளந்து கொண்டவனுக்கு இட மானது தான் சூழ்ந்த தடாகங்களால் அழகு பெற்ற கச்சியில் அதி ராஜனாய் பஹு ஸேனையையுடைய ராஜாவான பாண்டியனை அழகு பெறத் தழைத்த கன்னிகைகள் போன்ற கோத்தளங்களுள்ள

---

'இலகிய' இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார் – 'ஒளி விட்டு' இத்யாதியால். இலகுதல் – ஒடி ப்ரகாசித்தல். 'தன்' என்பதை 'பெரு வேள்வி' என்பதுடன் அந்வயித்து அர்த்தம் அரு ளிச்செய்கிறார் – 'ஸ்வ விஷயக' இத்யாதியால். அதாவது பகவா னுடைய ஆராதன ரூபமாகச் செய்யப்பட்ட யஜ்ஞத்தில் என்றபடி. 'மாண் உருவாய்' என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் - 'வாமனனாய்' என்று. பொதுவில் ப்ரும்மசாரியைச் சொல்லும் மாண் என்னும் பதம் இங்கு வாமன ப்ரும்மசாரியைக் குறிக்கிறது என்று திருவுள்ளம். 'சலமொடு மா நிலம்' என்கிற பதங்களின் சேர்க்கையினால் ஸித்திக்கும் அர்த்தத்தை அருளிச்செய்கிறார்— 'அவன்' இத்யாதியால். 'கைப்பற்றினவுடனே' என்றது அவன் தானம் செய்வதற்காக விட்ட ஜலம் பகவானுடைய கையில் பட்டதோ இல் லையோ அப்பொழுதே பூமியையும் அளந்துகொண்டான் என்றபடி. அதாவது வாமனனாய் நின்றவனே த்ரிவிக்ரமனாய் நீண்டு வளர்ந்த த்வராதிசயம் தெரிவிக்கப்பட்டதாகிறது. 'கன்னி' இத்யாதிக்குத்

பெரிய மதில் சூழ்ந்த கருவூராகிற படை வீடானது நடுங்கும்படி, அதாவது அவன் படையானது பல் வகையாக முறிந்தோடும்படி ஜயித்தவனை பல்லவராயன் பணி செய்து உஜ்ஜீவித்த இடமான பரமேச்சுர விண்ணகரமதுவே என்கிறார். 7

குடைத் திறல் மன்னவனாயொரு கால்
குரங்கைப் படையா மலையால் கடலை
அடைத்தவன் எந்தை பிரானதிடம்
மணி மாடங்கள் சூழ்ந்தழகாய கச்சி
விடைத்திறல் வில்லவன் நென்மெலியில்
வெருவச் செரு வேல் வலம் கைப் பிடித்த
படைத் திறல் பல்லவர் கோன் பணிந்த
பரமேச்சுர விண்ணகரமதுவே. 8

ப — ரை. ] குடை — மஹா ராஜ சின்னமான, வெள்ளைக் குடையையும், திறல் - பராக்ரமத்தையுமுடைய, மன்னவனாய் — சக்ரவர்த்தித் திருமகனாய், ஒரு கால் - ஒரு ஸமயத்தில், குரங்கை — வானரங்களை, படையா — ஸைந்யமாகக்கொண்டு, மலையால் - மலைகளினால், கடலை - ஸமுத்திரத்தை, அடைத்தவன் — அணை போட்டவனாகிய, எந்தை பிரானது — என்னுடைய ஸ்வாமிக்கு, இடம், மணி மாடங்கள் சூழ்ந்து அழகாய கச்சி, விடை — வ்ருஷபம் போல, திறல் - பராக்ரமத்தையுடையவனான, நென் மெலியில் — நென் மெலி என்கிற படை வீட்டில், வில்லவன் — வில்லவன் என்கிற ராஜா, வெருவ — பயப்படும்படியாக, செரு — யுத்தத்திற்குப் பரிகரமான, வேல் - வேலாயுதத்தை, வலம் கைப் பிடித்த — வலக்கையில் பிடித்தவனாய், படை - ஆயுதங்களைத் தரிப்பதில், திறல் - மிடுக்கனான, பல்லவர் கோன் பணிந்த பரமேச்சுர விண்ணகரமதுவே. 8

---

தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—' அழகு பெற ' இத்யாதியால். கொத்தளங்கள் - கோட்டை மதில்களில் பாதுகாப்புக்காகக் கட்டப்பட்ட கட்டிடங்கள். அதாவது கோட்டைச் சுவரின் நடுவில் அங்காங்கு கட்டப்பட்ட கொத்தளங்கள் கன்னிகைகளின் ப்ரதிமைகள் செய்துவைத்தாப் போலே இருக்கின்றன என்றபடி. 7

ராஜாதி ராஜ சின்னமான மஹா ஸ்வேத சத்ரத்துடனே பெரு மிடுக்குள்ள மஹா ராஜனாய் ஒரு காலத்தில் குரங்குகளையே படையாக்கிக் கொண்டு மலைகளைப் பிடுங்கிக் கடலை அணை செய்து லங்கா த்வாரத்தை அடை மதில் படுத்தினவனாய் எனக்குத் தந்தையுமாயும் உபகாரகனுமானவனுக்கு அது போன்றவிடம் மணிகசித மாடங்களால் சூழ்ந்தது கொண்டு அழகியதான கச்சியில் மஹா வ்ரு

---

‘ குடை மன்னவனாய் ’ இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—‘ ராஜாதி ராஜ ’ இத்யாதியால். அதாவது ராஜர்களுக்கும் ராஜனானமைக்கு அடையாளமாவது பெரிய வெண் கொற்றைக்குடையுடனே இருப்பது என்று தாத்பர்யம். சக்ரவர்த்தியும்

‘ வாஞ்ஞ ரவஸ்ராதவதூவஸ் ஸாயாயாம் ஜஸிதம் ஐயா ’

என்றானிறே. ‘ திறல் ’ என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—‘ பெரு மிடுக்குள்ள ’ என்று. ‘ ஒரு கால் ’ இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—‘ ஒரு காலத்தில் ’ இத்யாதியால். தான் ஸங்கல்பித்த கார்யத்திற்கு ஸாதகமாக எந்த வஸ்துக்களையும் உபகரணமாக்கிக் கொள்ளக் கூடிய அகடித கடனா ஸாமர்த்தியம் இங்கு ‘ குரங்குகளையே ’ இத்யாதியால் தெரிவிக்கப்படுகிறது. குரங்குகள் சஞ்சல புத்தியையுடையவைகள் என்று ப்ரஸித்தமாயிருந்தபோதிலும் அவைகளைத் தன் விஷயத்தில் ஏகாக்ர சித்தமுள்ளவைகளாகச் செய்தது விவக்ஷிதம். ஜலத்தில் முழுகுவதையே ஸ்வபாவமாகவுடைய மலைகளினால் அணை கட்டினமையும் இந்த ஸாமர்த்தியத்தையே காட்டுகிறது. இது ஹேது கர்ப்ப விசேஷணம் என்றும், இதனால் பலிதமான அர்த்தம் ‘ எந்தை பிரான் ’ என்று அருளிச்செய்யப்பட்டது என்றும் கொண்டு தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—‘ எனக்கு ’ இத்யாதியால். ‘ அது இடம் ’ என்பதற்கு தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—‘ அது போன்ற ’ இத்யாதியால். அந்தச் சக்ரவர்த்தித் திருமகனாய் அவதரித்த காலத்தில் தனக்கு ராஜதானியாயிருந்த திருவயோத்யை போன்ற என்று தாத்பர்யம். ‘ அடைத்தவன் ’ இத்யாதியால் பலிதமான அர்த்தத்தை அருளிச்செய்கிறார்—‘ லங்கா த்வாரத்தை ’ இத்யாதியால். கேவலம் ஒரு அணையைப்போட்டு நின்று விடாமல் அதின் மேல் தன் ஸைந்யத்தை நடத்தி ஒருவராலும் ஜயிக்க முடியாதது என்று ராவணன் எண்ணியிருந்த லங்கா பட்டணத்தை

ஷபத்தோடு ஒத்த மிடுக்குள்ளவனும் வில் வல்லவன் இவன் என்கிற பேர் பெற்றவனுமானவனுடைய நென்மேலி என்றே பெயருள்ள படை வீடானது நடுங்கும்படியாக யுத்த பரிகரமான வேலை வலக் கையில் பிடித்த ஸாமர்த்தியத்தைப் படைத்த ஸேனையாண்ட பல்லவராயன் பணி செய்த பரமேஶ்வர விண்ணகரமதுவே என்கிறார். 8

பிறையுடை வாணுதல் பின்னை திறத்து முன்னே
ஒரு கால் செருவில் உருமின்
மொறையுடை மால் விடை ஏழடர்த்தார்க்கு
இடம் தான் தடம் சூழ்ந்தழகாய கச்சி
கறையுடை வாள் மறைமன்னர் கெடக்
கடல் போல் முழங்கும் குரல் கடு வாய்
பறையுடைப் பல்லவர் கோன் பணிந்த
பரமேச்சுர விண்ணகரமதுவே. 9

ப - ரை.] பிறையுடை - சந்திரனுடைய பிறையைப்போன்ற, அதாவது அதைப்போன்ற ஆபரண விசேஷத்தையுடைய, வாள் - ப்ரகாசத்துடன் கூடிய, நுதல் — நெற்றியையுடையவளான, பின்னை திறத்து - நப்பின்னைப் பிராட்டிக்காக, அதாவது அவளைத் திரு மணம் புரிவதற்காக, முன்னே — முன் ஒரு காலத்தில், செருவில் - யுத்தத்தில், உருமின்—இடி போன்ற குரலையும், மொறையுடை—மொறைச்சலையுமுடைத்தான, மால் — பெரிய, விடை — வ்ருஷபங்கள், ஏழு — ஏழையும், அடர்த்தார்க்கு — கொன்றவர்க்கு, இடம் தான் தடம் சூழ்ந்தழகாய கச்சி, கறையுடை - சத்ருக்களுடைய ரத்தத்தினால் உண்டான கறை

---

ஆக்ரமித்தான் என்றதாயிற்று. ‘ விடைத் திறல் ’ இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—‘ மஹா ’ இத்யாதியால். ‘ வில்லவன் ’ என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—‘ வில் ’ என்றாரம்பித்து. ‘ நென்மேலியில் ’ இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார் —‘ நென்மேலி ’ இத்யாதியால். 8

யை உடையதான, வாள் – வாள் ஆயுதத்தையுடைய, மறை மன்னர் – வேதங்களை அறிந்த ராஜாக்கள், கெட - யுத்தத்தில் கெட்டு ஓடிப் போகும்படி, கடல் போல் – ஸமுத்திரம் போல், முழங்கும் – ஸப்திக்கிற, குரல் – த்வனியையுடையதாய், கடு – பயங்கரமான, வாய் - முகத்தையுடைய, பறையுடை - பறை என்னும் வாத்யத்தையுடைய, பல்லவர் கோன் பணிந்த பரமேச்சுர விண்ணகரமதுவே. 9

தலையில் சந்திர கலையையுடையளாய் ஒளி பெற்ற நுதலையுமுடையளான நப்பின்னையை லபிக்கைக்காக முன் ஒரு காலத்தில் யுத்தத்தில் இடி போன்ற குரலையும் மோறைச்சலையு முடையதான பெரிய வ்ருஷபங்கள் ஏழையும் மேல் விழுந்து கொன்றவனுக்கு இடமானது சுற்றும் சூழ்ந்த தடாகங்களால் அழகு பெற்ற கச்சியில் சத்ருக்களை வெட்டிக் குத்தினது கொண்டு பெற்ற கறைகளையுடைத்தான கட்கங்களையுள்ள வேதாபிஜ்ஞ க்ஷத்ரியர் கெட்டோடும்படியாக அடித்தால் பெரும் கடல் போல் முழங்கும்படியான நாதத்தில் கொடியதாம்படி விஸாலதையும் வாய்ப்புமுடைத்தான பெரிய வாத்யத்தையுடைய பல்லவராயன் அடிமைப்பட்ட பரமேஶ்வர விண்ணகரமதுவே என்கிறார். 9

‘பிறையுடை’ என்பதற்கு அர்த்தம் அருளிச் செய்கிறார்— ‘தலையில்’ என்றாரம்பித்து. ‘வாள் நுதல்’ என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—‘ஒளி பெற்ற’ என்றாரம்பித்து. ‘பின்னை திறத்து’ என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—‘நப்பின்னையை’ என்றாரம்பித்து! ‘உருமின்’ இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—‘இடி’ என்றாரம்பித்து. ‘விடை’ இத்யாதிக்குத் தாத்பர்யமருளிச்செய்கிறார்—‘வ்ருஷபங்கள்’ என்றாரம்பித்து. ‘கறையுடை’ என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—‘சத்ருக்களை’ என்றாரம்பித்து. ‘கடல்’ இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—‘அடித்தால்’ என்றாரம்பித்து. ‘குரல்’ இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—‘நாதத்தில்’ என்றாரம்பித்து. ‘வாய் பறை’ என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—‘விஸாலதையும்’ என்றாரம்பித்து. ‘வாய்’ என்பதற்கு இடம் என்று பொரு

பார் மன்னு தொல் புகழ்ப் பல்லவர் கோன் பணிந்த
    பரமேச்சுர விண்ணகர் மேல்
கார் மன்னு நீள் வயல் மங்கையர் தம் தலைவன்
    கலிகன்றி குன்றாதுரைத்த
சீர் மன்னு செந்தமிழ் மாலை வல்லார்
    திருமாமகள் தன்னருளால் உலகில்
தேர் மன்னராய் ஒலி மா கடல் சூழ்
    செழு நீர் உலகாண்டு திகழ்வர்களே. 10

ஒன்பதாம் திருமொழி முற்றிற்று.

திருமங்கையாழ்வார் திருவடிகளே ஶரணம்.

ப - ரை. ] பார் — பூமியில், மன்னு — ஸ்திரமாக இருக்கிற, தொல் — அநாதியான, புகழ் — கீர்த்தியையுடைய, பல்லவர் கோன் பணிந்த, பரமேச்சுர விண்ணகர் மேல், கார் - கறுத்த நிறமுள்ள நெல் பயிர், மன்னு — நிலை பெற்றிருக்கிற, நீள் - நீண்ட, வயல் - வயல்களையுடைய, மங்கையர் தம் தலைவன் — மங்கையில் வஸிப்பவர்களுக்குத் தலைவனை, கலி கன்றி — கலிக்கு ஶத்ருவாகிய ஆழ்வார், குன்றாது — கூச்சமில்லாமல், மன்னு - த்ருடமான, சீர் - கல்யாண குணங்களை, உரைத்த — சொன்ன, செம் — ருஜுவான, தமிழ் மாலை — மாலை போலே போக்யமான இந்த ப்ரபந்தத்தை, வல்லார் - அப்யஸிக்கக் கூடியவர்கள், திரு மா மகள் தன் — லக்ஷ்மீ என்று சொல்லப்படும் பெருமை பொருந்திய பிராட்டியினுடைய, அருளால் - க்ருபையினால், ஒலி — ஶப்தியா நிற்கிற, மா — பெரிய, கடல் - ஸமுத்திரத்தினால், சூழ் - சூழப்பட்டதும், செழு நீர் — ஶ்லாக்யமான நீரை உடைத்தாயுமிருக்கிற, உலகு — இந்த லோகத்தை, ஆண்டு - அநுபவித்து, உலகில்— பொன்னுலகத்தில் தேர் மன்னராய் — தேரில் ஏறிச் செல்லுகிற அரசர்களாய், திகழ்வர்கள் - ப்ரகாஶிப்பார்கள். 10

ளாய் வாயையுடைய பறை என்றும், வாய்த்த பறை என்றும் அந்வயித்து அர்த்தம் அருளிச்செய்தபடி என்றறியத்தக்கது. 9

1 ‘ கடமா களி யானை வல்லான் ’ 2 என்றும், ‘ ஆடல்மா வலவன் ’ என்றும், 3 ‘ மருவலர் தமுடல் துணிய வாள் வீசும் பரகாலன் ’ என்றும், சொல்லிப் புகழலான ஆண் பிள்ளைத் தனமுடைய திருமங்கை மன்னன் தன் வாயால் முதலடியில் திருமாலையும்; பின்னடியால் பல்லவனையும் ஸரியிட்டுப் புகழும்படியான பக்தி பராக்ரமங்களைப் பெற்றது கொண்டு பல்லவர் கோன் பார் மன்னு தொல் புகழ் படைத்தவனாய், தொல்லையார்கள் எத்தனைவர் என்பதில் இவர் கூட்டல்லவாய்

4 ‘ யாவச்சந்த்ரஸ ’

என்றபடியே பாருள்ள நாளைக்கெல்லாம் ஸ்திரமான புகழ் படைத்த பல்லவர் கோன் அடிமை செய்து உஜ்ஜீவிக்கப்பெற்ற பரமேஶ்வர விண்ணகர் மேல் 5 ‘ க ரு நெ ல் சூ ழ் க ண் ண மங்கை ’ என்றபடியே கண் கொண்ட இடமெங்கும் நீல தாந்ய ங்களே நிலை பெற்று விளையும்படியான வயலுள்ள திருமங்கையிலு

---

‘ பார் மன்னு ’ இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் ‘ கட மா ’ என்றாரம்பித்து. கட — தாடையிலிருந்து பெருகுகிற, மா அதிகமான, களி - மதத்தையுடைய, யானை - யானையை, வல்லான் -ஆளக்கூடிய ஶக்தியுடையவன். ஆடல்மா—ஆடும்படியான குதிரையை. வலவன். மருவலர் தம் - சத்ருக்களுடைய, உடல்-ஶரீரம், துணிய—துண்டு துண்டாகும்படியாக, வாள் வீசும் — வாள் ஆயுதத்தை வீசுகிற, பரகாலன் - திருமங்கையாழ்வார். புகழலான - புகழும்படியான. ஸரியிட்டு — ஸத்ருஶமாக வைத்து. தொல்லையார்கள்-முன்பிருந்தவர்கள். எத்தனைவர் என்பதுடன் தோன்றிக் கழிந்தொழிந்தார்கள் என்று சேர்த்துக் கொள்ளவும். யாவத் — எது வரையில், சந்திரஸ்ச - சந்திரன் இருக்கிறானோ அது வரையில், அதாவது இந்தப் பூமி உள்ளவரையில். ‘ கார் மன்னு ’ இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—‘ கரு நெல் ’ என்றாரம்பித்து. நீல தாந்யங்களே — நீல நிற

1. பெரிய திருமொழி - 2-4-10. 2. பெரிய திருமொழி — 5-8-10
3. ஷை 3-9-10. 4. 5. ஷை 10-1-1.

ள்ளார்க்கு முதல்வரான திருமங்கை மன்னன் பல்லவன் பக்திம தக்ரகண்யனுகையாலே அவனைத் திருமாலோடொக்கப் புகழக் கூசாமைக்கு உறுப்பான ஸ்த்ருட பகவத் பக்தி பராக்ரமங்களாகிற கல்யாண குணங்களை ப்ரகாஶிப்பித்த செந்தமிழ் மாலையான இத் திருமொழியை அத்யந்த பகவத் பக்திமான் பகவத் துல்ய ஸ்துத்யன் என்னுமத்தை நெஞ்சில் படுத்திக் கொண்டு பாட வல்லவர்கள் திருவருளால் இந்த ஒலியுள்ள பெரிய கடலால் சூழப்பட்டு தானும் செழு நீருள்ளதான இந்த லோகத்தை

1 ‘ ஜஹாதெ்ஹநாம் ’

என்றபடியே த்யஜிக்கைக்கு உடலாக அனுபவிக்கப்பெற்றுப் பொன்னுலகில் தேர் மன்னராய்த் திகழ்வர்களே என்கிறார். 10

ஒன்பதாம் திருமொழி முற்றிற்று.

பெரிய பரகால ஸ்வாமி திருவடிகளே ஶரணம்.

---

முள்ள நெல் பயிர்களே. ‘ நீள் வயல் ’ இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—‘ வயலுள்ள ’ என்றாரம்பித்து. ‘ குன்று து ’ என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—‘ பல்லவன் ’ என்றாரம்பித்து. பக்திமதக்ரகண்யன் - பகவானிடத்தில் பக்தியுள்ளவர்களுக்குள் சிறந்தவன். ‘ மன்னு சீர் உரைத்த ’ என்று அந்வயித்து அர்த்தம் அருளிச்செய்கிறார்—‘ ஸ ரு இத்யாதியால். ‘ ஸ்த்ருட ’ என்பது பக்தி பராக்ரமம் இரண்டிலும் அந்வயிக்கிறது. ‘ வல்லார் ’ என்பதற்கு அர்த்தாத் ஸித்தமான அர்த்தத்தை அருளிச்செய்கிறார்—‘ அத்யந்த ’ இத்யாதியால். அத்யந்த – மிகவும் அதிகமான. பகவத் துல்ய ஸ்துத்யன் - பகவானுக்கு ஸமமாக ஸ்தோத்திரம் செய்யத் தகுந்தவன். அதாவது ‘ நின் தனக்கு நிகர் நின்னடி அடைவார் ’ என்று ஆசார்ய ஸார்வபௌமன் அருளிச்செய்த படியே பகவத் பக்தர்கள் பகவானுக்கு ஸத்ருஶர்களிறே என்றபடி. ‘ திரு மா மகள் ’ இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்— ‘ திருவருளால் ’ என்று. ‘ ஒலி மா ’ இத்யாதிக்குத் தாத்பர்யம்

அருளிச்செய்கிறார்—' ஒலியுள்ள ' என்றாரம்பித்து. ஜஹாத்யேநாம் – தன்னால் அனுபவிக்கப்பட்ட இந்த ப்ரக்ருதியை ஜீவாத்மா விட்டு விடுகிறான். த்யஜிக்கைக்கு – விட்டு விடுவதற்கு. ' உலகில் தேர் மன்னராய்த் திகழ்வர்களே ' என்று அந்வயித்து அர்த்தம் அருளிச் செய்கிறார்—' பொன்னுலகில் ' என்றாரம்பித்து. பொன்னுலகில் – பரமபதத்தில். 10

ஒன்பதாம் திருமொழி முற்றிற்று.

## பத்தாம் திருமொழி—மஞ்சாடு.

[ திருக்கோவலூர் ஆயனார் விஷயம், ]

மஞ்சாடு வரையேழும் கடல்களேழும்
வானகமும் மண்ணகமும் மற்றுமெல்லாம்
எஞ்சாமல் வயிற்றடக்கி ஆலின் மேல்
ஓரிளந்தளிரில் கண் வளர்ந்த ஈசன் தன்னை
துஞ்சா நீர் வளம் சுரக்கும் பெண்ணைத் தென் பால்
தூய நான் மறையாளர் சோமுச் செய்ய
செஞ்சாலி விளை வயலுள் திகழ்ந்து தோன்றும்
திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே. 1

ப — ரை. ] மஞ்சு — மேகங்கள், ஆடு — ஸஞ்சரிக்கிற, வரை — மலைகள், ஏழும் — ஏழையும், கடல்கள் — ஸமுத்திரங்கள், ஏழும் — ஏழையும், வானகமும் — ஆகாசத்தில் ஸஞ்சரிப்பவைகளையும், மண்ணகமும் — மண்ணை இடமாகக் கொண்ட வஸ்துக்களையும், மற்றுமெல்லாம் — மற்ற எல்லா வஸ்துக்களையும், எஞ்சாமல் — இழவாதபடி, வயிற்றடக்கி — தன் வயிற்றுக்குள்ளே அடக்கிக் கொண்டு, ஆலின் மேல் - ஆல மரத்தின் மேல், ஓர் — ஒப்பற்றதான, இளம் தளிரில் - முகிழ் விரியாத தளிரில், கண் வளர்ந்த — நித்ரை செய்தருளின, ஈசன் தன்னை — பகவானை, துஞ்சா - நீர் ஊற்று மாறாத, நீர் — ஜலம் முதலிய, வளம் — எல்லா வித ஸம்பத்துக்களையும், சுரக்கும் — வ்ருத்தி அடையச் செய்யும், பெண்ணை — பெண்ணையாற்றின், தென் பால் — தென் கரையில், தூய — பரிசுத்தர்களான, நான் மறையாளர்கள் — நாலு வேதங்களையும் நிர்வஹிக்கக் கூடியவர்கள், செஞ்சாலி — சிவந்த நெல் விளைகிற, வயலுள் - வயல்களின் மத்தியில், சோமுச் செய்ய - ஸோம யாகத்தைப் பண்ண, திகழ்ந்து - ப்ரகாசித்துக் கொண்டு, தோன்றும் - விளங்கும், திருக்கோவலூரதனுள் - திருக்கோவலூர் என்னும் திவ்ய தேசத்தில், நானே கண்டேன். 1

## பத்தாம் திருமொழி.

ஸ்வ வர்ண ஸ்வாஶ்ரம ஸ்வாதிகாரோசித அநந்ய ப்ரயோஜந பக்தி கார்ய மஹத்தர கைங்கர்ய நிஷ்டனான பல்லவனால் ஆராதிக்கப்பட்ட படியைக் கீழ் அநுஸந்தித்தார். மேல் ஸ்வ வர்ணோ‌சித அநந்ய ப்ரயோஜந பக்தி கார்ய ஷடங்க வேத தத் போதித இஷ்டி பஶு ஸோம பஞ்ச மஹா யஜ்ஞாதி நிஷ்டா கரிஷ்டராய், ப்ரும்ம விதாம் வரிஷ்டரான ஶுத்தயாஜி பரமைகாந்தி ப்ரபன்னரால் ஆராத்யனாகைக்காக அவர்களுக்குப் போக்யதம திவ்ய மங்கள விக்ரஹனாய் பிராட்டிமாரோடு கூட பகவான் திகழ்ந்து தோ

---

## பத்தாம் திருமொழி.

*கீழ்த் திருமொழியுடன் இத்திருமொழிக்கு ஸங்கதி காட்டுகிறார்* —' ஸ்வவர்ண ' *என்றாரம்பித்து.* ஸ்வ வர்ண — *தன்னுடைய வர்ணத்திற்கும் ( ஜாதிக்கும் ),* ஸ்வாஶ்ரம — *தன்னுடைய ( ப்ரும்மசர்யம் முதலிய ) ஆஶ்ரமத்திற்கும்,* ஸ்வாதிகாரோசித — *தன்னுடைய அதிகாரத்திற்கும் தகுந்ததான,* அநந்ய ப்ரயோஜந — *வேறு ஒரு பலத்திற்காகவும் செய்யப்படாததான,* பக்திகார்ய - *பக்தியினால் உண்டாக்கப்பட்ட,* மஹத்தர கைங்கர்ய - *மிகவும் அதிகமான கைங்கர்யத்தில்,* நிஷ்டனான — *நிஷ்டையையுடையவனான.* கீழ் — *கீழ்த் திருமொழியில்.* ஷடங்க — *ஆறு அங்கங்களையுடைய,* வேத — *வேதம்,* தத் போதித - *அத்தால் தெரிவிக்கப்படும்,* இஷ்டி — *தர்ஶ பூர்ணமாஸம் முதலிய இஷ்டிகள்,* பஶு — *பஶு யாகங்கள்,* ஸோம — *ஸோம யாகங்கள்,* பஞ்சமஹாயஜ்ஞாதி—*ப்ரும்ம யஜ்ஞம் தேவ யஜ்ஞம் பித்ரு யஜ்ஞம் மனுஷ்ய யஜ்ஞம் பூத யஜ்ஞம் என்கிற ஐந்து யஜ்ஞம் முதலிய,* நிஷ்டா கரிஷ்டராய் — *இவைகளை அநுஷ்டிப்பதில் மேன்மை பெற்றவர்களாய்,* ப்ரும்மவிதாம் — *ப்ரும்மத்தை அறிந்தவர்களுக்குள்,* வரிஷ்டரான - *சிறந்தவர்களான,* ஶுத்தயாஜி - *பகவானையே ஆராதிப்பவர்களாய்,* பரமைகாந்தி — *பகவானையே ப்ராப்யமாயும் ப்ராபகமாயும் உடையவர்களான,* ப்ரபன்னரால்-*பரந்யாஸத்தைச் செய்தவர்களினால்.* திவ்ய மங்கள விக்ரஹனாய் — *அப்ராக்ருதமாயும் ஶுபாஶ்ரயமாயும் இருக்கும் விக்ரஹத்தையுடையவனாய்க்*

ன்றும்படியைத் திருக்கோவலூரிலே கண்ணாரக்கண்டுசோல்ல அதை நான் கேழ்ப்பதன்றிக்கே நானே கண்டேன் என்று சரம ஶ்லோகார்த்தத்தில் நாம் ப்ரமியாதபடியாக அருளிச்செய்தருளுகிறார்.

---

கொண்டு. பிராட்டிமாரோடு கூட - லக்ஷ்மீ முதலிய மஹிஷிகளுடனே. 'திருக்கண்டேன்' என்றாரம்பித்து 'சார்வு நமக்கென்றும் ...தேனமரும் பூமேல் திரு' என்றும், 'திருவில்லாத் தேவரைத் தேறேன்மின்' என்றும் செந்தமிழ் பாடுவார் அனுஸந்தித்ததைத் திருவுள்ளம்பற்றி மேல் பாட்டில் 'சந்தணி மென் முலை மலராள் தரணி மங்கை தாமிருவர் அடிவருடும்' என்று அருளிச்செய்திருப்பதைக் கடாக்ஷித்து இங்கு இப்படி நிரூபித்தாராயிற்று.

'ஹிதெக்ஷாவிதம் ஹுகடயநு ஹுயசாஹுஜிகவம் கூஹுஷணாஜி ஹுo யவஹிகாo கூஜதவாநு ஹியாயாஃ'

என்கிறபடியே அகலகில்லேன் இறையும் என்று அலர்மேல் மங்கை உறை மார்பனும் ஒரு ஸமயத்தில் அவளைத் தன்னுடைய க்ருஷ்ணாஜினத்தினால் மறைக்க வேண்டி நின்ற தசையை பக்திமான்களாகிய ஆழ்வார்களுக்குக் காட்டும்பொழுது

'வஹுக்ஷாகூஜதெ ஷவ வஶீக்ஷஹு ஹுஜாஷெர தாo கவா ஜெவ ஶெவ ஹுஶீஶ ஜஹு விஜுஷெ'

என்கிறபடியே அந்தப் பிராட்டியின் ஸம்பந்தத்தை வ்யக்தமாகக் காட்ட வேண்டியிருந்ததிறே. அது மஹா பலியின் யஜ்ஞ வாடமாய் அஸுரமயமாய் இருந்த படியினால் அப்பொழுது மறைக்கவேண்டியிருந்தது. இப்பொழுது அவளுடைய ஸம்பந்தமில்லாவிட்டால் அவனையே அலக்ஷ்யம் செய்யும் ஆழ்வார்களுக்கு ஸேவை ஸாதிக்கும் ஸந்தர்ப்பமாகையினால் அவளுடைய ஸம்பந்தத்தை ப்ரகாஶமாகக் காட்டினான் என்பதைத் தெரிவிக்கிறார்—'திகழ்ந்து தோன்றும்படியை' இத்யாதியால். 'பொய் கலவாது என் மெய் கலந்தானே' என்கிறபடியே தன்னை எடுத்து வளர்த்த யஶோதையிடம் செல்லும்பொழுது தான் திருடி அமுது செய்த வெண்ணெயின் சுவடுகளைத் துடைத்துக் கொண்டு சென்றவன் ஆழ்வாருடன் ஸம்ஶ்லேஷிக்கும்பொழுது அவற்றை ஒன்றையும் மறைக்காமல் தோன்றினானிறே. திருக்கோவலூரிலே என்பது மேலே நானே கண்டேன் என்பதுடன் அந்வயி

மேகங்கள் உலாவும்படி உயர்ந்த மலை ஏழையும் ஸமுத்திர ங்கள் ஏழையும் வானை இடம் கொண்டதுகளையும் மண்ணை இடம் கொண்டதுகளையும் சொல்லிச் சொல்லாதவற்றையும் தான் இழவாதபடியாகத் தன் வயிற்றில் அடக்கிக் கொண்டவனாய், முகிழ் விரியாத ஓர் வட தளத்தில் கண் வளருகையால் ஈசனானவனே, இத்தால் சிவனை ஈசன் என்பது தந்நாமகரண க்ருதம் என்றதாய்

---

க்கிறது. 'சரம ஶ்லோக' இத்யாதி—சிலர் சரம ஶ்லோகத்திற்கு ஸர்வ தர்ம பரித்யாகம் அர்த்தம் என்றிவை முதலியபடிகளிலே அபார்த்தம் செய்தார்கள். அது சரம ஶ்லோகார்த்தமல்ல. மேல் பாட்டுக்களில் 'தூய நான்மறையாளர் சோமுச் செய்ய' என்றும், 'சீரணங்கு மறையாளர் நிறைந்த' என்றும் வேத வேதாங்கங்களையும் தத் ப்ரதிபாதிதங்களான வர்ணாஶ்ரமோசித தர்மங்களையும் ப்ரதிபாதித்திருக்கிறபடியினால் அது விஷயத்தில் நமக்கு ஸந்தேஹம் உண்டாகாதபடி தாம் நேரில் ப்ரத்யக்ஷீகரித்த அர்த்தத்தையே உபதேஶிக்கிறார் என்று தாத்பர்யம்.

'மஞ்சாடு' என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'மேகங்கள்' இத்யாதியால். 'வானகமும்' என்றது வானை அகமாக உடையவைகள் என்பதைத் தெரிவிக்கிறது என்று அதின் அர்த்தத்தை அருளிச்செய்கிறார்—'வானை' இத்யாதியால். 'மற்றும் எல்லாம்' என்பதற்கு தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'சொல்லி' இத்யாதியால். 'எஞ்சாமல்' என்பதற்குத் தாத்பர்யம் அருளிச் செய்கிறார்—'தான் இழவாதபடியாக' என்று. அதாவது எஞ்சுதல் நஶித்தல், அவைகள் நஶித்துப் போனால் உண்டாகும் இழவு ஸர்வேஶ்வரனுடையதாகையினால் 'இழவாதபடி' என்று அருளிச்செய்யப்பட்டது என்றபடி. 'இளம் தளிரில்' என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'முகிழ்' இத்யாதியால். 'கண் வளர்ந்த' என்பது ஹேதுகர்ப்ப விஶேஷணம் என்று காட்டுகிறார்—'கண் வளருகையால்' என்று. இப்படி ஸர்வ லோகத்தையும் உண்டு ஆலிலைமேல் ஶயனித்திருப்பதே பரம புருஷ லக்ஷணம் என்று நிருவுள்ளம். இத்தைக் கணிசித்தேயிறே பெரிய முதலியாரும்

'[illegible]

த்து. ஊற்று மாறுமலே ப்ரவஹிக்கும் நீர் வழியே ஸகல வித ஸம்பத்தும் அபிவ்ருத்தமாம்படியான பெண்ணைத் தென் கரையிலே மாயிகள் மாத்வாதிகளாகிற ப்ராம்மணுபாஸரன்றிக்கே ஸ்ாத்த யாஜித்வ க்ருத பாரமைகாந்த்யமுள்ள வகையால் பெற்ற ந்யாஸ வித்யா நிஷ்டையால் தூய்மை பெற்ற நாலு வேதத்துக்கும் வ்யாஸ பதத்தைச் செலுத்த வல்லவர்கள் ஸோம யாகத்தைப் பண்ண, இஷ்டி பஸ்வநந்தரம் அனுஷ்டேயமிறே அது, சிவந்த சாலிகளான நெல்கள், அது விளைகிற வயலிலே சோமுச் செய்ய என்று அந்வயம், அவர்கள் அப்போது அந்த சாலே வழி எங்கும் தன்னுளியேயாம்படி ப்ரத்யக்ஷீகரிக்கப்படுமவனை அந்தத் திருக்கோவலூருக்குள்ளே நானே கண்டேன், ஆகையால் ப்ரபன்னனுக்கு ஸர்வ தர்ம ஸ்வரூப த்யாகமே ஸித்தாந்தம் என்று ப்ரமியாதேயுங்கள் என்று பத்தும் பத்தாகச் சோல்லுகிருர். 1

---

*ஸௌஷ வாஸவா நிதி ஸகூ ஸஜு:'*

*என்று அனுஸந்தித்தது. அதாவது தன்னுடைய ஸௌத்தாகையினுல் தானே தன் வயிற்றில் வைத்து ரக்ஷித்தானுயிற்று என்றபடி. 'ஈசன்' என்கிற பதம் வேறு இடத்தில் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறதே என்னில் அதற்கு ஸமாதானம் அருளிச்செய்கிருர்—'இத்தால்' என்றுரம்பித்து. தந்நாமகரணமாவது தாஸ்ய சின்னமாக அவனுடைய திருநாமத்தை வைத்துக்கொள்ளுவது. 'துஞ்சா' என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிருர்—'ஊற்று' என்றுரம்பித்து. 'சுரக்கும்' என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிருர்—'அபிவ்ருத்தமாம்படியான' என்று. 'தூய' என்கிற விஸேஷணத்திற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிருர்—'மாயிகள்' என்றுரம்பித்து. மாயிகள் - அவைதிகள். அவர்களைக் காட்டிலும் இவர்களுக்குள்ள விஸேஷத்தை நிருபித்தருளுகிருர்—'ஸாத்தயாஜித்வ' இத்யாதியால். உள்ளவகையால் - உண்டான ப்ரகாரத்தினுல். தூய்மை பெற்ற — தேவதாந்தர ப்ரயோஜனுந்தர உபாயாந்தர ஸம்பந்தமில்லாத பாரிஸுத்யத்தையடைந்த.*

*'ஸாஙாநாம் தூ ஞஹெஉஹி ஷிரயியாம் ஸாஙாஞ ஷிஙாஞிநாம்'*

கொந்தலர்ந்த நறுந் துழாய் சாந்தம் தூபம்
 தீபம் கொண்டு அமரர் தொழப் பணங்கொள் பாம்பில்
சந்தணி மென் முலை மலராள் தரணி மங்கை
 தாமிருவர் அடி வருடும் தன்மையானை
வந்தனை செய்து இசையேழ் ஆறங்கம் ஐந்து
 வளர் வேள்வி நான் மறைகள் மூன்று தீயும்
சிந்தனை செய்து இரு பொழுது மொன்றும் செல்வத்
 திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே. 2

ப — ரை. ] கொந்து — கொத்தில், அலர்ந்த — மலர்ந்ததான, நறும் — பரிமளத்துடன் கூடிய, துழாய் - திருத்துழாய் மாலையையும், சாந்தம் - சந்தனத்தையும், தூபம் — தூபத்தையும், தீபம் — தீபத்தை யும், கொண்டு — கைகளில் ஏந்திக்கொண்டு, அமரர் — ப்ரும்மாதி தே வதைகள், தொழ — ஸேவிக்க, பணம்கொள் — படங்களுடன் கூடிய, பாம்பில் — திருவனந்தாழ்வான் மேல், சந்து — சந்தநத்தினால், அணி — அலங்கரிக்கப்பட்ட, மென் முலை — ம்ருதுவான ஸ்தன தடங்களையு டைய, மலராள் — லக்ஷ்மீ, தரணி மங்கை — பூமிப்பிராட்டி, இருவர் — இவர்கள் இருவரும், தாம் — தாங்களே, அடி வருடும் — திருவடிக

என்றது இங்கனுஸந்தேயம். ‘மறையாளர்’ என்பதற்குத் தாத்பர் யம் அருளிச்செய்கிறார்—‘வ்யாஸ பதத்தை’ இத்யாதியால். அதா வது வ்யாஸர் வேதங்களை வகுத்து நிரூபித்தாப்போலே இவர்களும் செய்யக் கூடியவர்கள் என்றபடி. ‘நன்மையால் மிக்க நான் மறையா ளர்கள்’ என்கிறபடியே நான்மறைகள் நன்மையால் மிகும்படி அவை ற்றை நிர்வஹிக்கக் கூடிய தன்மையும் இங்கு விவக்ஷிதம். ‘சோமு ச்செய்ய’ என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—‘ஸோம’ இத்யாதியால். இது இதற்கு முன் அநுஷ்டிக்கப்படவேண்டிய இஷ் ட்யாதிகளுக்கு உபலக்ஷணம் என்று காட்டியருளுகிறார்—‘இஷ்டி’ இத்யாதியால். ‘செஞ்சாலி விளை வயலுள் சோமுச் செய்ய’ என்று அந்வயித்துத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—‘சிவந்த’ இத்யாதி யால். ‘திகழ்ந்து தோன்றும்’ என்பதற்கு அர்த்தம் அருளிச் செய் கிறார்—‘அந்த’ இத்யாதியால். பாட்டுக்குப் பரம தாத்பர்யம் அரு ளிச்செய்கிறார்—‘ஆகையால்’ என்றாரம்பித்து. ]

கொப் பிடிக்கும்படியான, தன்மையானை – ஸ்வபாவத்தையுடையவனை, வந்தனை செய்து - நமஸ்காரம்செய்து, இசையேழ் - ஸப்த ஸ்வரங்கள், ஆறங்கம் – ஆறு அங்கங்கள், ஐந்து – ஐந்துகளான, வளர் - வளர்ந்து கொண்டு வருகிற, வேள்வி – யஜ்ஞங்கள், நான் மறைகள் – நாலுவேதங்கள், மூன்று தீயும் – மூன்று விதமான அக்னி, இவைகளையும், இங்கு அக்னி என்றது அதில் செய்யப்படும் அக்னி ஹோத்திரத்தைக் குறிக்கிறது, இரு பொழுதும் – இரண்டு ஸந்த்யா காலங்களிலும், சிந்தனைசெய்து - த்யானம் செய்து கொண்டு, ஒன்றும் - அவர்களுடன்ஏகிபவித்திருக்கும், செல்வ – ஸம்பத்தையுடைய, திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே. 2

வழிக்கு வழியே ப்ராம்மணர்க்கு ஆஶ்ரயணீயர் என்னுமவர்கள் பலாபிஸந்தி ரஹிதமாகச் செய்தாலும் பகவதபிப்ராயத்தாலே ஒரு பலம் வரத் தவிராது என்றும், கட்டோடு ஸர்வ தர்ம ஸ்வரூப த்யாகம் பண்ணினார்க்கே அத்தைப் பற்றலாம் என்றும் சொல்லு

---

கீழ்ப் பாட்டுக்கு வ்யாக்யானமிட்ட சிலர், சில விரோதமான அர்த்தங்களை நிரூபித்திருப்பதினால் அவற்றை நிராகரிப்பதாக அவதாரிகை அருளிச்செய்கிறார்—'வழிக்கு' என்றாரம்பித்து. வழிக்கு வழியே– வழிப்படி, அதாவது தங்கள் வர்ணாஶ்ரம தர்மத்தை அநுஷ்டித்துக் கொண்டு. என்னுமவர்கள் – என்று வ்யாக்யானம் செய்தவர்கள், அதாவது 'ஸ்வ வர்ணத்திற்கும் ஸ்வாஶ்ரமத்திற்கும் உசிதமான கர்மங்களை பலாபிஸந்தி ரஹிதமாக பகவத் ஸமாராதன புத்யா அநுஷ்டித்து ஶம தமாத்யுபேதராய் இருக்கும் ப்ராம்மணர்க்கு ஆஶ்ரயணீயனாய்க் கொண்டு பிராட்டிமாரும் தானுமாகத் திருக்கோவலூரிலே வந்து நின்றான்' என்றிறே அவர்கள் வ்யாக்யானம் செய்திருப்பது. இப்படி முதலில் வ்யாக்யானமிட்ட தாங்களே அதற்கு விருத்தமாக மேலே 'அவர்கள் பலாபிஸந்தி ரஹிதமாகச் செய்தாலும் ... செய்தவற்றுக்கு பகவதபிப்ராயத்தாலே ஒரு பலம்வரத் தவிராதிறே. ஆகையால் த்ருஷ்டபலங்கள் ஸம்ருத்தமாய்ச் செல்லா நிற்கும்' என்று வ்யாக்யானம் செய்திருப்பது உசிதமல்ல என்று திருவுள்ளம். கட்டோடு – முழுமையும். 'ஸர்வ' இத்யாதி—எல்லாத் தர்மங்களின் ஸ்வரூபத்தை விடுவது. அத்தை - அந்த த்ருஷ்ட பலத்தை. பரம்பும்படி – வ்யாபிக்கும்படி. இதற்குக் காரணம் நிரூபித்தருளுகிறார்—'கீழ்' என்றாரம்பி

கிற துஸ்ஸித்தாந்தமே எங்கும் பரம்பும்படி சிலர் செய்த கீழ்ப் பாட்டின் வ்யாக்யானம் தலை எடாதபடி கோந்தலர்ந்த பாட்டு உதிக்கிறதாய்த்து. கீழ் ‘ தூய நான் மறையாளர் ’ என்று சோமுச் செய்யுமவர்களை விசேஷித்திருக்க அங்ஙனே தெளிந்த தங்கள் அறிவைக் காட்டும் வ்யாக்யானம் உதித்தால் என் செய்வோம் யாம் ? தாங்கள் இசைந்த அடிமைகளை அமரர்கள் செய்து கொண்டு தொழவும், தூய நான் மறையாளர்கள் அக்னிஷோம ஸம்ஸ்தையோடு சோமு நிறைவேற்றின மேல் நாள்களில் வந்தனை முதலாக வேதானுவசன பஞ்ச மஹா யஜ்ஞாத்யனுக்ரஹீத ஸந்த்யா த்வயானுஷ்டேய பல பக்தி ரூப நிதி த்யாஸனத்தைச் செய்வதும், அவர்களோடு மலராள் தரணி மங்கை தாமிருவர் அடி வருடும் தன்மையான

1 ‘ கஃ ஸ்ரீஃ ஸ்ரியஃ ’

என்றபடியான செல்வமாய் ஒன்றுமதுவும், அது அஸாக்ஷிகமாகாமல் பரகாலநாயகியே அவ்வகையுடையனைத் திருக்கோவலூரதனுள் நானே கண்டேனே என்றும் வெளியிடுகிறாளிறே. ஆகையால் அவர்கள் உகந்தபடி அவர்கட்கேயாய் அவர்கள் இழந்தபடியையே நாம்

---

த்து. விசேஷித்திருக்க — விசேஷமாகச் சொல்லியிருக்க. அதாவது ஸோமயாகத்தைச் செய்யுமவர்கள் கேவலம் மறையாளர் மாத்திரம் என்னாமல் தூய நான் மறையாளர் என்று தூய என்கிற ஒரு விசேஷணத்துடன் நிரூபித்திருப்பதினால் என்றபடி. பலாபிஸந்தி ரஹிதமாகச் செய்யுமவர்கள் ப்ரஹ்மவித்யா நிஷ்டர்களிறே. என்செய்வோம் யாம் என்றது தங்கள் வார்த்தைக்குத் தாங்களே விருத்தமாக வ்யாக்யானம்செய்தார்களேயாகில் அதற்கு நாம் என் செய்வது என்றபடி. இத்தையே விஸ்தரித்தருளுகிறார் —‘ தாங்கள் ’ இத்யாதியால். தங்கள் தங்கள் வர்ணாஶ்ரம தர்மங்களை அநந்ய ப்ரயோஜனமாக அனுஷ்டிக்கும் பரமைகாந்திகளோடு தானே தனக்கு இவர்களுடைய சேர்க்கை அலப்ய லாபமாக நினைத்து பிராட்டிமாரோடு வந்து சேரும் ஸ்வபாவமுடையவன் என்று இந்தப் பாட்டில் நிரூபித்திருப்பதினாலே வர்ணாஶ்ரம தர்மங்களை பகவத் ப்ரீதிகரங்கள் என்று வ்யக்தமாக ஏற்படுகிறபடியினால் என்று தாத்பர்யம். அவர்கட்கேயாய் - அந்த வ்யாக்யா

1 ஸ்ரீ ஆளவந்தார் ஸ்தோத்திரம் — 12.

உகக்கக் கடவது. கொழுந்து ஸ்தானத்தில் வளரா நின்றுள்ள பரிமள முள்ள செவ்வித் திருத்துழாய் மாலைகளையும் பூசும் சாந்துகளையும் தூப தீபங்களையும் ஏந்திக் கொண்டு ப்ரும்மாதிகள் அடிமை செய்ய, தன்னோட்டை ஸ்பர்ஶத்தாலே விகஸித பணனை திருவநந்தாழ் வான் மேலே, அவன் தங்களைத் தாங்கள் வேண்டினபடி தனக்கே யான அடிமை கொள்ளாத போது மெலியத் தக்கதான தங்கள் முலை களில் குங்குமாதி சாந்தை அப்பி ஒப்பித்த ஸ்ரீ பூமிகள் இருவரும் தாங்களாகவே திருவடியைப் பிடிக்கும்படியான ப்ரணயித்வாதி ஸ்வ பாவனை சிந்தனை செய்து என்று அந்வயம். அது செய்யும்படியை ‘வந்தனை’ இத்யாதியால் அருளிச்செய்கிறார். முற்பட மனோபுத்யபி மானங்களோடே வந்தனை செய்தவர்களாய் ஸப்த கானம் என்ன, ஶீக்ஷாதி ஷடங்கம் என்ன, பஞ்ச விதமான உத்ஸவாத்மக யஜ்ஞங் கள் என்ன, வேத சதுஷ்டயோபநிஷத்துக்கள் என்ன, இதுகளோடு

---

னம் செய்தவர்கட்கே அங்கீகரிக்கத் தக்கதாய். ‘கொந்தலர்ந்த’ இத் யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—‘கொழுந்து’ என்றாரம்பி த்து. ‘பணம் கொள்’ என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்— ‘தன்னோட்டை’ இத்யாதியால். பகவானுடைய திருமேனியிலுள்ள ஸௌகந்த்ய ஸௌகுமார்யங்களாலே திருவனந்தாழ்வானுடைய பணங் கள் விஸ்த்ருதமாயிற்று என்றபடி. ‘மென் முலை’ என்பதற்குத் தா த்பர்யம் அருளிச்செய்கிறார்—‘அவன்’ இத்யாதியால். ‘தாம் அடி வருடும்’ என்று அந்வயித்து அர்த்தம் அருளிச்செய்கிறார்—‘தாங்க ளாகவே’ என்றாரம்பித்து. அதாவது அவனுடைய ப்ரணயித்வாதி குணங்களையும் திருமேனியின் ஸௌகுமார்யாதிகளையும் அநுபவித்து அந்த ப்ரீதியினால் தாங்களே அடிவருடுகிறார்கள் என்று தாத்பர்யம். அது செய்யும்படியை — அந்த த்யானம் செய்யும் ப்ரகாரத்தை. அதா வது வேதாநுவசனாதிகள் வர்ணாஶ்ரம தர்மங்கள் முதலிய எல்லாம் மன தின் நைர்மல்யத்தை உண்டாக்கி அதின் மூலமாய் த்யானத்திற்கு உப காரகங்கள் ஆகின்றன என்பது வேதாந்த ஶாஸ்திரத்தில் நிர்ணீதமிறே. இது பர பக்தியிலும் துல்யம் என்று திருவுள்ளம். ஸப்த கானம் — ஏழு ஸ்வரங்களையுடைய கானம். ஶீக்ஷாதி — ஶீக்ஷை, வ்யாகரணம், சந்தஸ்ஸு, நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம், என்கிற. மூன்று தீயும் —

கூடின நித்யாக்னி ஹோத்திரம் என்ன, இதுகளால் உபசிதாதிஶய மநஸ்ஸில் அவனை இரண்டு ஸந்தியிலும் பல பக்தி ரூப நிதி த்யாஸனத்தைச் செய்து கோண்டிருக்கவே, அவர்கள் நினைவின் படியே 1 ‘ கஃ ஶ்ரீஃ ஶ்ரியஃ ’ என்ற வகையால் அவர்களோடு ஒன்றியிருக்கும் செல்வமுடைய திருக்கோவலூர் என்னப்பட்ட திருப்பதியில் நானே கண்டேன் என்றருளிச்செய்கிறார். 2

கொழுந்தலரும் மலர்ச்சோலைக் குழாங்கொள்பொய்கைக்
கோள் முதலை வாளெயிற்றுக் கொண்டற்கு எள்கி
அழுந்திய மா களிற்றினுக்கு அன்று ஆழி ஏந்தி
அந்தரமே வரத் தோன்றி அருள் செய்தானை
எழுந்த மலர்க் கரு நீலம் இருந்தில் காட்ட
இரும் புன்னை முத்தரும்பிச் செம் பொன் காட்ட
செழுந்தட நீர்க் கமலம் தீவிகை போல் காட்டும்
திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே. 3

---

த்ரேதாக்னியில் செய்யப்படும் அக்னி ஹோத்திரம். இதில் காம்யாக்னி ஹோத்திரம் ப்ரபன்னனுக்கு த்யாஜ்யமாகையால் ‘ நித்யாக்னி ஹோத்திரமென்ன ’ என்று அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. உபசிதாதிஶய - வ்ருத்தி செய்யப்பட்ட பரிஶுத்தியாகிற மேன்மையையுடைய. பல பக்தி - ஒரு பலத்தைக் குறித்து அதற்கு உபாயமாகச் செய்யப்படும் உபாய பக்தியன்றியே ஸ்வயம் ப்ரயோஜனமான பக்தி என்றபடி. நிதி த்யாஸனம் – த்யானம். ஶ்ரிய: – ஸைந்யமிக்கும், ஶ்ரீ: – ஸைந்யமியாக ( ஸம்பத்தாக ) இருப்பவன், க: - யார் ? இந்தப் பாட்டில் பரமைகாந்தி ஸார்வபௌமர்களான முதலாழ்வார்களைத் தானென்று கிட்டி, அத்தால் தனக்கு விஶேஷ ஸம்பத்து உண்டானதாக நினைத்திருக்கும் எம்பெருமானுடைய வாத்ஸல்யாதிஶயமும், முதலாழ்வார்களினுடைய சரித்திர ஸங்க்ரஹமும் ஸூசிப்பிக்கப்பட்டதாகின்றன. 2

1 372 - ம் பக்கம் பார்க்க.

ப — ரை. ] கொழுந்து — கொழுந்துகளையும், அலரும் — விகஸிக்கிற, மலர் - புஷ்பங்களையுமுடைய, சோலை — தோப்புக்களின், குழாம் - ஸமூஹங்களால், கோள் — வ்யாபரிக்கப்பட்ட, அன்றிக்கே குழாங்களைச் சுற்றிலும் உடையதான, பொய்கை — தடாகத்தில், கோள் - தன் கையில் அகப்பட்டாரைக்கொல்லும் வ்யாபாரத்தையுடைய, அன்றிக்கே பரம பக்தனான கஜேந்திராழ்வானைக் கொல்ல யத்தனித்த மிடுக்கையுடைய, முதலை - முதலையினுடைய, வாள் - வாள் போன்ற, எயிற்று — கோரைப் பற்களால், கொண்டற்கு — பிடித்துக் கொண்டதற்கு, எள்கி - சிதிலமான அவயவங்களையுடையதாய், இளகி என்று பாடாந்தரம், அப்பொழுது இளகின நெஞ்சையுடையதாய் என்றர்த்தம், அழுந்திய - ஜலத்தில் முழுகிப் போன, மா — பெரிய, களிற்றினுக்கு - ஸ்ரீ கஜேந்திராழ்வானுக்கு, அன்று - அவன் மனதினால் நினைத்த ஸமயத்திலே, ஆழி — சக்ரத்தை, ஏந்தி - கையில் தரித்துக்கொண்டு, அந்தரமே - ஆகாஶ மார்க்கத்திலேயே, வரத் தோன்றி — வந்து தோன்றி, அருள் செய்தானை - க்ருபை செய்தவனை, எழுந்த — அப்பொழுது முளைத்ததாய், மலர் — மலர்ந்ததான, கரு நீலம் - கரு நெய்தல் புஷ்பமானது, இருந்தில் காட்ட - கறுத்த நிறத்தைக் காட்ட, இரும்—விஸ்தாரமான, புன்னை - புன்னைமரம், முத்து — முத்துக்கள் போலும், செம் பொன் - சிவந்த பொன்னைப் போலும், அரும்பி — மொக்குகளை, காட்ட, செழும் - செழுமையான, தட — விஶாலமான, நீர் — ஜலங்களில் இருக்கிற, கமலம் — தாமரைப் பூக்கள், தீவிகை போல் — தீபங்களைப்போலே, காட்டும் திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே. 3

கொழுந்தையும் அலருகிற மலர்களையுமுடைய குழாம்கொண்ட சோலைகளால் ஆக்ரமிக்கப்பட்ட பொய்கையிலுள்ள முடிக்க ஒருப்பட்ட முதலை க்ரஸித்து, தன்னுடைய தேளி வாள் போன்ற கோரைப் பல்களைக் கொண்டு அராவுகைக்கு இளகின நெஞ்சுடைய

---

'கொழுந்து' இத்யாதிக்கு தாத்பர்யம் அருளிச்செய்கிறார்— 'கொழுந்தையும்' என்றாரம்பித்து. 'குழாம்கோள் சோலை' என்று அந்வயித்து அர்த்தம் அருளிச்செய்கிறார்—'குழாம்கொண்ட' என்றாரம்பித்து. 'கோள்' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் —'முடிக்க' என்றாரம்பித்து. 'அழுந்திய' இத்யர்த்திக்கு அர்த்தம்

தாய் துதிக்கை அளவாக ஆழ்ந்த மஹா கஜேந்திராழ்வானுக்காக அவன்

1 ‘ மநஸாசிந்தயத்ஹரிம் ’

என்றபடியே மானஸிகமாக ஸ்வ ரக்ஷண பர ஸமர்ப்பணம் பண்ணினவன்று கையிலுள்ள திருவாழியை ஏவி ரக்ஷிப்பதும் அவனை ரக்ஷித்ததல்ல என்றருளி, அது ஏந்தி வந்த அழகையும் த்வரையையும் காட்டி நாம் அவனை உபசரித்து ரக்ஷிக்க வேணுமென்றே திரு

---

*அருளிச்செய்கிறார்—‘ துதிக்கை ’ என்றாரம்பித்து. ‘ அன்று ’ என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—‘ அவன் ’ இத்யாதியால். ஹரிம் - பகவானை, மநஸா — மனதினால், அசிந்தயத் — நினைத்தான். திருவாழியினாலே முதலையை ஸம்ஹரித்தபடியினால் பகவான் தோன்றியது அநாவஶ்யம் தானே என்கிற ஶங்கைக்குப் பரிஹாரம் அருளிச்செய்கிறார்—‘ கையிலுள்ள ’ என்றாரம்பித்து. ‘ தொழும் காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே ’ என்கிறபடியே அந்த ஸ்ரீ கஜேந்திரன் தன்னுடைய ப்ராணனுக்காகப் பகவானை ஶரணமடைந்திருந்தால் பகவானும் தம்முடைய திருவாழியை ஏவி அந்த ஆபத்தை நீக்கியிருப்பான். அப்படியன்றியே பகவானுடைய திருவடிகளில் தான் பறித்த தாமரை புஷ்பங்களை ஸமர்ப்பிக்க வேண்டுமென்றல்லவோ ஆசைப்பட்டது. அதற்காகப் பகவான் நேரில் வந்து ஸேவை ஸாதிக்கும்படி நேர்ந்தது.*

*‘ த்ருடி யுகாய தே ஸ்வாஸேவஸ்ரந்தாம் ’*

*என்கிறபடியே ஒரு க்ஷண காலம் பகவத் ஸேவை இல்லாவிடில் அதை ஒரு யுகமாக நினைப்பவர்களில் இவரும் ஒருவரிறே. ஸ்ரீ கீதாசார்யனும் தன்னுடைய அவதாரத்திற்கு ஸாது பரித்ராணமே முக்ய ப்ரயோஜனம் என்று அருளிச்செய்தான். இவர்கள் பகவானைப் பார்ப்பதற்கு முன் கொஞ்ச காலம் கண்ணை மூடிக்கொண்டு பொறுப்பார்களேயானால் பகவானும் அப்படிப்பட்ட தசையைப் பொறுப்பான். அப்படியன்றியே ஒரு க்ஷண காலத்தையும் ஆயிரம் கல்ப காலத்திற்கு ஸமியாக எண்ணிக் கொண்டவர்களாய் சிதறிப் போன எல்லாக் காத்திரங்களையும் உடையவர்களாய்விடுகிறபடியினால் பகவானும் மிகுந்த த்வரையுடன் தானே நேரில் எழுந்தருளுகிறான் என்று திருவுள்ளம். அப்ப*

1.

வாழி ஏந்தி

1 ‘ 𑌅𑌤𑌨𑍍𑌦𑍍𑌰𑌿𑌤 𑌚𑌮𑍂𑌪𑌤𑌿 𑌪𑍍𑌰𑌹𑌿𑌤 𑌹𑌸𑍍𑌤 𑌮𑌸𑍍𑌵𑍀𑌕𑍃𑌤 𑌪𑍍𑌰𑌣𑍀𑌤 𑌮𑌣𑌿𑌪𑌾𑌦𑍁𑌕𑌂 𑌕𑌿𑌮𑌿𑌤𑌿 𑌚𑌾𑌕𑍁𑌲𑌾𑌨𑍍𑌤𑌃𑌪𑍁𑌰𑌂 । 𑌅𑌵𑌾𑌹𑌨 𑌪𑌰𑌿𑌷𑍍𑌕𑍍𑌰𑌿𑌯𑌂 𑌪𑌤𑌗𑌰𑌾𑌜 𑌮𑌾𑌰𑍋𑌹𑌤𑌃 𑌕𑌰𑌿 𑌪𑍍𑌰𑌵𑌰 𑌬𑍃𑌂𑌹𑌿𑌤𑍇 𑌭𑌗𑌵𑌤 𑌸𑍍𑌤𑍍𑌵𑌰𑌾𑌯𑍈 𑌨𑌮𑌃 ॥ ’

என்று அறிவுடையார் ஈடுபடும்படிக்கு ஆகாஶ மார்க்கத்தால் வந்த உடனே அவன் அழகையும் வரவையும் தனக்காகக் கொண்டதாக அவன் அனுபவித்து உஜ்ஜீவிக்கும்படி முன் நின்று தன் திருக்கையால் தடவியும் தன் திருப் பரியட்டத்தைச் சுருட்டித் தன் திருப்பவளத்தால் உஷ்ணிப்பித்துப் புண் பட்ட இடத்தை ஒற்றியும் வீடு

படித் தோன்றின த்வராதிஶயத்தில் ஈடுபட்ட அபியுக்தரின் அனுஸந்தானத்தை உதாஹரித்தருளுகிறார்—‘ அதந்த்ரித ’ என்றாரம்பித்து. அதாவது விஷ்வக்ஸேனரால் நீட்டப்பட்ட கைகளை அங்கீகரிக்காமலும், கொண்டு வந்து ஸமர்ப்பிக்கப்பட்ட ரத்ன மயமான திவ்ய பாதுகைகளை தரித்துக்கொள்ளாமலும், அந்த:புர திவ்ய மஹிஷிகளும் இது என்ன அவஸரம் என்று கலங்கும்படியாகவும், வாஹனத்திற்குச் செய்யவேண்டிய அலங்காரத்தைச்செய்யாமலும் கருடனை நடத்தின பகவானுடைய த்வரையை ஶ்லாகிக்கிறேன் என்றபடி. தம்முடைய ஸங்கல்பத்தைக்காட்டிலும் வேகமாய்ச் செல்லக் கூடிய கருடனுடைய கதியும் அன்று பகவானுக்கு த்ருப்தியைக் கொடுக்காமையினால் அவரை அடித்து உதைத்து நடத்தும்படியாயன்றோ இருந்தது.

‘ 𑌉𑌕𑍍𑌷𑌾 𑌚𑌕𑍍𑌷𑌾𑌣𑌕𑌸𑍍𑌯 𑌸𑍍𑌵𑌰𑌤𑌿 𑌵𑌚𑌿𑌤𑌃 𑌕𑌾𑌮𑌠𑌃 𑌵𑌜𑍍𑌰𑍀 𑌤𑍍𑌰𑌿𑌃 𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌯𑌾𑌤𑌾𑌃 𑌭𑍋𑌗𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌦𑍍𑌯𑌾 𑌇𑌤𑌿 𑌭𑌯𑌾 𑌸𑌾𑌰𑌥𑍀𑌸𑍍𑌯𑍋𑌷𑌿 । 𑌮𑍃𑌗𑍀𑌹 𑌮𑍃𑌗𑌸𑍍𑌤 𑌦𑌿𑌶𑍇𑌤𑌿 𑌕𑍍𑌷𑌿𑌤𑌿𑌭𑌯 𑌚𑌕𑌿𑌤𑌾 𑌕𑌾𑌣𑍍𑌵 𑌵𑍈𑌕𑌾𑌣𑍍𑌵𑌿𑌕𑌾 𑌨𑌾𑌵𑌰𑍋𑌹𑌾 𑌰𑍋𑌹𑌤𑌿 𑌨𑍃𑌪𑌕𑌵𑌿𑌹𑌤𑌯𑍇 𑌸𑍍𑌤𑌾𑌦𑌿𑌹𑍇𑌜𑍍𑌵𑌰𑌾 𑌨𑌮𑌃 ॥ ’

என்றிறே ஆசார்ய ஸார்வபௌமனும் அனுஸந்தித்தது. ‘ தோன்றினவனை ’ என்னாமல் ‘ தோன்றி அருள் செய்தானை ’ என்று அருளிச் செய்திருப்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—‘ தன் திருக்கையால் ’ இத்யாதியால். தன்னுடைய பக்தனுக்குத் தான் உடனே

1. பட்டர்

பேறுத்துமளவான அருள் செய்தவனை திருக்கோவலூர் உபசரிக்கிற படியை அருளிச்செய்கிறார்—' எழுந்த ' இத்யாதியால். கறுத்த நெய்தல் அப்போது எழுந்து அலர்ந்ததாய் தன்னுடைய இலகின பெரு நீல ஜ்யோதிஸ்ஸை அவ்விருவர்க்கும் கண் குளிரும்படி காட்டியும், பெரிய வெண் புன்னை ஸுர புன்னைகள் முத்துப் போலும் செம்பொன் போலும் அரும்பிக் காட்டியும், தடங்களில் நீர் மேல் செழித்து உதித்த செங்கமலங்கள் கை விளக்குப் போல் காட்டியுமாய்த்து உபசரித்தது. அப்போது திருக்கோவலூரதில் அவனை அங்ஙனே அவனுக்குத் தான் உபசரிக்குமவனாய் அவ்வூர் செய்யும் உபசாரங்களைக் கைக்கோள்ளுமவனாய் நானே கண்டேன் என்கிறார். 3

*தாங்கரும் போர் மாலி படப் பறவை ஊர்ந்து*
*தராதலத்தோர் குறை முடித்த தன்மையானை*
*ஆங்கரும்பிக் கண்ணீர் சோர்ந்து அன்பு கூரும்*
*அடியவர்கட்கு ஆரமுதமானான் தன்னை*
*கோங்கரும்பு சுர புன்னை குரவார் சோலைக்*
*குழா வரி வண்டு இசை பாடும் பாடல் கேட்டு*
*தீங்கரும்பு கண் வளரும் கழனி சூழ்ந்த*
*திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே.* 4

ப — ரை. ] தாங்கு — *தாங்குவதற்கு*, அரும் - *அஸஹ்யமான*, போர் — *யுத்தத்தைச் செய்ய வல்லனான*, மாலி — *மாலி என்பவன்*,

---

*தோன்றி அருள் செய்யாத குறையைத் தீர்ப்பதற்காகச் செய்த வ்யாபாரங்கள் இவை என்று திருவுள்ளம். இப்படிப்பட்ட பகவானை இந்த க்ஷேத்திரம் உபசரிக்கும்படியை நிரூபித்தருளுகிறார்—'* திருக்கோவலூர் *' இத்யாதியால். '* எழுந்த *' இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'* கறுத்த *' என்றாரம்பித்து.* அவனுக்கு — *அந்த ஸ்ரீ கஜேந்திராழ்வானுக்கு. அதாவது ஆஸ்ரிதர்க்குத் தான் உபசரிக்குமவன் ஆஸ்ரிதர்கள் தனக்குச் செய்யும் உபசாரத்தைக் கைக்கொள்ளுகிறான் என்றபடி.* 3

பட - முடிந்து போகும்படி, பறவை — கருடனை, ஊர்ந்து — நடத்தி, தராதலத்தோர் — பூமியிலுள்ளவர்களுடைய, குறை - அவனால் பட்ட துக்கத்தைப் போக்கடிப்பவர் இல்லை என்கிற குறையை, முடித்த — தீர்த்த, தன்மையானை - ஸ்வபாவத்தையுடையவனை, ஆங்கு — அந்த ஆஶ்ரித விரோதி நிரஸன ஸ்வபாவத்தை அநுஸந்தித்தவாறே, அரும்பி கண்ணீர் சோர்ந்து - கண்களில் ஜலம் பெருகி, அன்பு கூரும் — ப்ரீதியைச் செய்கிற, அடியவர்கட்கு — தாஸ பூதர்களுக்கு, ஆர் - பூர்ணமான, அமுதமானன் தன்னை - அம்ருதம் போல் போக்யமானவனை, கோங்கு — கோங்கு மரங்களும், சுர புன்னை, குரவு, இவைகளின், அரும்பு - அரும்புகள், ஆர் — நிறைந்த, சோலை — உத்யான வனங்களில், குழா - ஸமூஹமாகச் சேர்ந்த, வரி - வரிகளோடு கூடிய, அதாவது ரேகைகளுடன் கூடிய, வண்டு - வண்டுகள், இசை பாடும் - கானங்களைப்பாடுகிற, பாடல் கேட்டு - பாட்டுக்களைக் கேட்டு, தீம் - ஶ்லாக்யமான, கரும்பு — கரும்புகள், கண் வளரும் — ஒவ்வொரு கணுவாக வளரா நின்றுள்ள, கழனிசூழ்ந்த — வயல்களால் சூழப்பட்ட, திருக்கோவலூரதனுள்கண்டேன் நானே. 4

யுத்தத்தில் எதிர்த்து நிற்க அரிதாம்படி போர் வல்ல மாலியானவன் பட்டு விழும்படியாகப் பறக்கும் கருடனை ஏறித் துரத்தி தராதலத்தில் புக்கு அதிலுள்ள ஸ்வ பக்தர்களுடைய விரோதியான மாலி நஶிக்கவும், நம் ஸ்வாமியையும் காண்போமோ என்கிற குறையைத் தீர்த்த ஸ்வபாவமுடையவனை, அந்த ஸ்வபாவத்தை அநுஸந்தித்தவுடனே கண்ணீர் அரும்பித்தாகில் அது சோரிந்துப்ரேம பக்திகள் துற்று அத்தால் அவன் அடிமையில் ஈடுபடுமவர்களுக்கு

---

'தாங்கரும்' இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'யுத்தத்தில்' என்றாரம்பித்து. 'தராதலத்தோர் குறை' என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'தராதலத்தில்' இத்யாதி 'காண்போமோ' என்னுமளவாக. ஸாது பரித்ராணமே அவதாரத்திற்குப் பரம ப்ரயோஜனம் என்றும் துஷ்க்ருத் விநாஶம் ஆநுஷங்கிகம்என்றும் ஸ்ரீ கீதாசார்யன் வெளியிட்டபடியைத் திருவுள்ளம் பற்றி இப்படி அர்த்தம் நிரூபித்தபடி என்றறியத்தக்கது. அன்பு கூரும் அடியவர்கட்கு என்கிற பதங்களின் சேர்க்கையினால் ஏற்பட்ட அர்த்தத்தை அருளிச்செய்கிறார்—'அத்தால்' என்றாரம்பித்து. கோங்கு சுரபுன்னை

ஆராத அமுதமானவனை, சுர புன்னை கோங்கு மரங்களில் என்றும் அரும்பு குறை படாதபடி ஸம்ருத்தமான சோலையிலே ஸங்கீபவித்துப் படிந்து தேனுண்ட வண்டுகளானவை கீழ்ச் சொன்னபடி அவனை அனுபவித்து அந்த ஹர்ஷத்தால் இசைகளையே பாட அந்தப் பாட்டுக்களையே கேட்டு அதி மதுர ரஸபரிதமான வெண் கரும்புகளானவை தூங்கித் தூங்கி ஒவ்வோர் கணு வளரும்படி அதுக்குத் தக்க கழனிகளை வளைய உடைத்தான திருக்கோவலூர் என்கிற அந்நகரியில் நானே கண்டேனே என்கிருர். 4

*கறை வளர் வேல் கரன் முதலாக் கவந்தன் வாலி*
*கணையொன்றினால் மடிய இலங்கை தன்னுள்*
*பிறை எயிற்று வாளரக்கர் சேனை எல்லாம்*
*பெருந்தகையோடு உடன் துணித்த பெம்மான் தன்னை*
*மறை வளரப் புகழ் வளர மாடம் தோறும்*
*மண்டபமொண் தொளியனைத்தும் வாரமோத*
*சிறையணைந்த பொழிலணைந்த தென்றல் வீசும்*
*திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே.* 5

ப - ரை. ] கறை - சத்ருக்களை யெறிந்ததினால் உண்டான அடையாளம், வளர் - மேன்மேலென வளர்கிற, வேல் — வேலைத் தரித்தவர்களான, கரன் முதலா - கரன் முதலிய ராக்ஷஸர்கள், கவந்தன் - கபந்தன், வாலி, இவர்கள், கணை ஒன்றினால் - ஒரு பாணத்தினால், மடிய — நசிக்கும்படி செய்து, இலங்கை தன்னுள் — லங்கைக்குள்

---

குரவு அரும்பு ஆர் சோலை என்று அநுவதித்து அர்த்தம் அருளிச்செய்கிருர்—‘ சுர புன்னை ’ என்றாரம்பித்து. ‘ திங்கரும்பு ’ இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிருர்—‘ அந்த ’ என்றாரம்பித்து. இந்த நகரக் கரும்பு இந்தப் பாட்டுக்களைக் கேட்டு வளருகின்றன போலும்.
‘ [illegible] ’
என்றிறே ஆசார்யனும் இந்த எம்பெருமான் விஷயமாய் அநுஸந்தித்தருளியது. 5

ளே, பிறை எயிற்று - *சந்திரகலை போன்ற பற்களையுடைய,* வாள் — *வாள்களையுடைய,* அரக்கர் - *ராக்ஷஸர்களின்,* சேனை எல்லாம் — *ஸேனை முழுவதும்,* பெரும் தகையோடு- *அதற்கு நிர்வாஹகனான ராவணனுடன்,* துணித்த — *இரு பிளவாகத் துண்டித்த,* பெம்மான் தன்னை - *ஸ்வாமியானவனை,* மறை - *வேதங்கள்,* வளர - *ஓங்கும்படி,* புகழ் - *கீர்த்தி,* வளர - *வ்ருத்தியடைய,* மாடம்-*வீடுகள்,* மண்டபம்,ஒண் - *அழகிய,* தோளி - *ஒழுங்கைகள்,* தோறும்—*இவைகளில்,* அனைத்தும் — *எல்லா இடங்களிலும்,* வாரம் ஓத - *மறையையும் புகழையும் ஸாதரமாக அப்யஸிக்க,* சிறை - *ஜல துர்க்கம், அதாவது அகிழ், அதை,* அணைந்த - *தழுவி நிற்கிற, அதாவது ஸமீபத்தில் இருக்கிற,* பொழில் - *உத்யான வனங்களை,* அணைந்த — *தழுவிக் கொண்டு வருகிற,* தென்றல் - *தென்னல் காற்று,* வீசும் — *வீசுகிற,* திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே. 5

பரஹிம்ஸைக ஶீலதையாலே கறை கழுவான், அத்தால் மேல் மேல் வளர்ந்த கறையுள்ள வேலையுடைய கரன் முதலாக ஸிம்ம வ்யாக்ராதிகளை ஆக்ரமித்து நலியும் வாலியானவனை ஒரே பாணத்தால் முடித்தவனாய், லங்கையில் சந்திர கலை போன்ற எயிற்றையும் பெரிய கட்கங்களையுமுள்ள ராக்ஷஸ ஸேனையை எல்லாம் நிர்வஹிக்குமவனோடே, நிர்வாஹகனை பெரும் தகை என்னக்கடவது, ஆக ராவணனோடே கூட துண்டிட்டுக் கொன்ற பெருத்த நம் ஸ்வாமியானவனை வாரம் ஓத என்று அந்வயம், அங்ஙனே ராவணாதிகளைத் துணித்ததின் பலம் இதாய்த்து, அவனுக்கும் இவர்க்கும் கோவலூரில் வேதங்கள் வளரவும், இராமன் புகழானது

---

'கறை வளர்' இத்யாதிக்குத் *தாத்பர்யம் அருளிச்செய்கிறார்*— 'பரஹிம்ஸைக ஶீலதையாலே' *என்றாரம்பித்து.* 'பர' இத்யாதி—*அயலாரை ஹிம்ஸை பண்ணுவதையே ஸ்வபாவமாக உடைத்தாயிருக்கையாலே.* கறை கழுவான் - *அழுக்கை அலம்பமாட்டான்.* 'கணை' *இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்*—'ஒரே' *என்றாரம்பித்து.* 'இலங்கை' *இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்*—'லங்கையில்' *என்றாரம்பித்து.* பலம் இதாய்த்து—*தண்டகாரண்ய வாஸிகளான ரிஷிகளைப் போலே வேதங்களையும் அவன் புகழையும்*

வளரவும், அவ்விரண்டையும் செங்கல் கொண்டே எடுத்து முடிக்கக் கட்டின க்ருஹங்கள் தோறும், கல்லால் கட்டின மண்டபங்கள்தோ றும், ஶ்லாக்யமான ஒழுங்கைகள் தோறும், தோளி என்னுமதைக் குறைத்து தோளி என்று சொல்லலாய்த்து ப்ரதோளியை, க்ருத்ஸ்ந ப்ரதேஶங்களிலும் வேதம் ஓதுவார் சிலர், புகழ் ஓதுவார் சிலராய்த் தான், அன்றிக்கே ஒருக்கால் அதாய், ஒருக் கால் இதாய்த் தான் ஓது மது வாரம் ஓதுவது, அங்ஙனே அவர்கள் ஓதும்போது ராமனை உட் கொண்டாய்த்து ஓதுவது, அன்று ஆயாஸப்பட்ட ராமனுக்கும் இன் றேதி ஶ்ரமப்படும் இவர்களுக்கும் ஶ்ரமம் தீரும்படி திருக்கோவ லூரை வளைத்துக்கொண்டிருக்கிற நீர்ச்சிறையை, சிறை அகிழ்களாய் த்து, அதை அணைந்ததாய், அத்தைச் சூழ்ந்திருந்த பொழிலையும் அணைந்ததான தென்றல் வீசுமாய்த்து, அவ்வகையால் அவர்களை

---

திருக்கோவலூரில் ஓதுவதாய்த்து. ‘ மறை வளர ’ இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—‘ வேதங்கள் ’ என்றாரம்பித்து. ‘ மா டம் தோறும் ’ இத்யாதிக்கு அர்த்தம்அருளிச்செய்கிறார்—‘ செங்கல்’ என்றாரம்பித்து. ‘ வாரம் ஓத ’ என்பதற்கு முறை முறையாக ஓத என்று பொருளாய் அதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—‘வே தம் ஓதுவார்’ இத்யாதியால். ‘ புகழ் வ ள ர ’ என்கிற இடத்தில் புகழ் என்பது கல்யாண குணங்களாய் அதை விஷயமாக ப்ரதிபாதிக் கும் அருளிச்செயல்கள் வளர என்றதாய், ஆக உபய வேதாந்தங்களை யும் அத்யயனம் செய்ய என்றதாயிற்று. ‘ செந்தமிழும் வடகலையும் திகழ்ந்த நாவர் ’ என்னப்பட்டதிறே. அன்றிக்கே மறை வளரும்படி யாக புகழ் வளரும்படி என்றபடியாகவுமாம். ‘ செய்ய தமிழ் மாலை கள் நாம் தெளியஓதித் தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே ’,

‘ வகாஹயா தநஸ்வம் ஸம்ஹிதாம் யாசேஷ ; ப்ருதி வரிஷஜி துவஸ்ரா: ஸஹாஹா யொஜய ந்தி ’

என்றிவை முதலியவைகளிற்படியே அருளிச்செயல்களை அதிகரித்தன் றே மறை நிலங்கள் தெளியலாம் என்றபடி. அதுவுமன்றிக்கே வே தங்கள் கண் வளர புகழ் வளர என்றபடியாகவுமாம். அதாவது

‘ யஸ்ய ஸார ஸ்வத ஸ்ரோதோ வகுளாமோத வாஸி

யும் அத்தேன்றலையும் அடிமை கொண்டு உகக்குமவனை திருக்கோவலூராகிற திருப்பதியில் நானே கண்டேன் என்கிறார். 5

உறியார்ந்த நறு வெண்ணெயொளியால் சென்றங்கு
 உண்டானைக் கண்டு ஆய்ச்சி உரலோடார்க்க
தறியார்ந்த கருங்களிறே போல நின்று
 தடம் கண்கள் பனி மல்கும் தன்மையானை
வெறியார்ந்த மலர் மகளாம் மங்கையோடு
 வியன் கலை எண் தோளினுள் விளங்கு செல்வச்
செறியார்ந்த மணி மாடம் திகழ்ந்து தோன்றும்
 திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே. 6

ப - ரை. ] உறியார்ந்த — உறியிலே நிறைந்திருந்த, நறு — நல்ல வாஸனையையுடைய, வேண்ணெய் - வெண்ணெயை, ஒளியால் - ப்ரகாஶத்தினால், அன்றிக்கே ஒளிந்து செய்யும் கார்யமாகிற களவினால், அங்கு — அந்த இடத்திலே, சென்று — போய், உண்டானை - அமுது செய்தவனை, ஆய்ச்சி — யஶோதை, கண்டு — பார்த்து, உரலோடு, ஆர்க்க - கட்ட, தறியார்ந்த - கட்டுத் தறியில் அகப்பட்டு நிற்கும், கரும் களிறே போல - கறுத்த நிறமுள்ள யானையைப் போல, நின்று — அவ்விடத்தை விட்டுப் போக முடியாதவனைப் போல நின்று, தடம் கண்கள் — விஶாலமான கண்களில், பனி மல்கும் - கண் ஜலம் ப்ரவஹிக்கும், தன்மையானை - ஸ்வபாவத்தையுடையவனை, வேறி - பரிமளம், ஆர்ந்த -- நிறைந்த, மலர் மகளாம் — லக்ஷ்மியாகிற, மங்கையோடு — ஸ்த்ரீயுடன், வியன் — ஆஶ்சர்யப்படத்தக்க, கலை — கலையை வாஹனமாக உடையவளாய், அதாவது வித்யா விஶேஷத்தால் ஆகாஶத்தில் ஸஞ்சரிக்குமவளாய், எண் தோளி - எட்டுத் தோள்களையுடைய துர்க்கை, நாள் - நாள்தோறும், விளங்கு - ப்ரகாஶிக்கும், சேல்வ - ஸம்பத்தினுடைய, சேறி — சேர்ந்திருக்கையினால், ஆர்ந்த — பூர்ணமான, மணி

---

தං | ஶ்ருதீநாං விஶ்ராயாஞ்ச ’

என்னப்பட்டதிறே. ‘ சிறையணைந்த ’ இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார் —‘ : திருக்கோவலூர் ’ என்றாரம்பித்து. 5

ம்மாடம் — *மணிமயமான மாடங்கள்,* திகழ்ந்து—*ப்ரகாசித்துக் கொண்டு,* தோன்றும்—*காணப்படுகிற,* திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே.

உறி கோள்ளாத மணத்த புது வெண்ணெயை [1] 'நாள் இளம் திங்களைக் கோள் விடுத்து' என்றபடியே தன் திரு முத்து ஒளியால் அங்கு சென்றே, நாளும் ஒளி களவால் என்னுமாம், ஒளியா உண் டானை என்னுமாம், இப்போது நிச்சேஷமாக என்றபடி, அங்கு கண்ட யசோதை

2 '𑌦𑌾𑌮𑍍𑌨𑌾 𑌚𑍋𑌦𑌰𑍇 𑌬𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌬𑌧𑍍𑌨𑌾𑌦𑍁𑌲𑍂𑌖𑌲𑍇' என்றபடியே உரலோடே பிணைத்துக்கட்ட, தன்னில் ப்ரீதியுடையா ருடைய த்ரவ்யமே தனக்குத் தாரகமாய் இவன் இப்படி உண்டது, ஆய்ச்சி அங்ஙனே கட்டினது ப்ரேமத்தால், நானையும் இங்ஙனே திருடி உண்டால் பிழையான் என்று எண்ணி ப்ரேம ஜனித கோபத்தால் அங்ஙனே கட்டினளாய்த்து, தறியைப் பிடுங்கிக் கொண்டு ஊரை

---

'உறியார்ந்த' *இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்* — 'உறி கோள்ளாத' *என்றாரம்பித்து.* மணத்த — *வாஸனையையுடைய.* 'ஒளியால் சென்று' *என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்* — 'நாள்' *இத்யாதியால்.* நாள் — *புதிதான,* இளம் திங்களை - *பால சந்திரனை,* கோள்விடுத்து — *ப்ரகாசிக்கச்செய்து.* திருமுத்து - *பற்கள்.* 'ஒளியால் சென்று' *என்று அந்வயித்து அர்த்தம் அருளிச் செய்கிறார்*—'நாளும்' *இத்யாதியால்.* 'ஒளியாச் சென்று' *என்று பாடமாக்கி அர்த்தம் அருளிச்செய்கிறார்*—'ஒளியா' *என்றாரம் பித்து. அதாவது ஒன்றையும் மிகுதியில்லாமல் உண்டான் என்றபடி.* 'ஆய்ச்சி' *இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்*—'யசோதை' *என்றாரம்பித்து.* தாம்நா - *கயிற்றினால்,* உதரே — *வயிற்றில்,* பத்வா - *கட்டி,* உலூகலே — *உரலில்,* ப்ரத்யபத்நாத் - *கட்டினாள். இப்படி வெண்ணெ உண்டதற்குக் காரணம் நிரூபித்தருளுகிறார்*—'தன்னில்' *இத்யாதியால். ஆய்ச்சி கட்டினதும் தன் வெண்ணெ போயிற்றே என் கிற காரணத்தினாலல்ல, குழந்தைக்குத் தீங்கு வராமல் இருப்பதற் காகப் பரிவினால் என்று நிரூபித்தருளுகிறார்*—'ஆய்ச்சி' *என்றாரம் பித்து.* 'தறியார்ந்த' *இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்* —'தறியை' *என்றாரம்பித்து.* அபலே — *ஸ்திரீ.* உரலிடை - *வயிற்*

1. *திருவாய்மொழி* — 3 — 8 — 3    2.

அழித்துத் திரியும் மதத்தைப் பெற்ற கறுத்த யானை யாத்ருச்சிகமாகக் கட்டுப்பட்டு நின்றாற் போலே பெரிய தூர்த்தனாய் ஊரிலுள்ள பெண்களையும் வெண்ணெய்களையும் களவு கொண்டே புஜித்துத் திரிந்தவன் ஓர் அபலையால் உரலிடை ஆப்புண்டு உரலினோடு இணைந்திருந்து கண்ணில் பரப்பெல்லாம் கண்ணீர் மல்கி எத்திறம் என்று ப்ரதிக்ரியை யற்றிருக்கும்படியான ஆஶ்ரித பாரதந்த்ர்யமுடையவனை, இவனுக்கு இந்த ஸ்வபாவத்துக்கு ஊற்றுவாய் ஈஶ்வரீத்வ பூர்த்தியுள்ளவளான கடி மிக்க மலர் மகளோடு சேர்த்தியாய்த்து, அவ்வூரில் இச்சேர்த்திக்கு ஒரு தீங்கு வராதபடி பரிந்து காக்குமவள் விஸ்மயநீயமான கலையை வாஹனமாக உடையவளாய் எட்டுத் தோள்களையுடைய துர்க்கை, இங்ஙனே இவள் காவலாலும் அவள் பரிவாலும் அந்த ஸ்வபாவத்தாலும் நாள் தோறும் விளங்குகிற செல்வச் செறி மிக்க மணி மயங்களான பெரிய மாடங்களிலே தன்னொளியாலும் விளங்கித் தோன்றுமவனை அந்தத் திருக்கோவலூரில் நானே கண்டேன் என்கிறார். 6

*இருங்கைம்மா கரி முனிந்து பரியைக் கீறி*
*இனவிடைகளேழடர்த்து மருதம் சாய்த்து*

---

*றின்நடுவில்,* ஆப்புண்டு — *கட்டப்பட்டு, உதரம் என்பது ஓர் எழுத்துக் குறைவாய் உரம் என்றுகிடக்கிறது,* இணைந்து - *ஒன்றாகச் சேர்ந்து, அதற்கு ஸத்ருஶமாக நின்று என்றபடியாகவுமாம், உரல் சலிக்காமல் இருந்தாப் போலே தானும் ஒரு வித சேஷ்டையும் இல்லாதவனாயிருந்து என்றபடி,* பரப்பெல்லாம் - *வைஶால்யம் எல்லாம், அதாவது முழுமையும்.* ப்ரதிக்ரியையற்று — *பதில் கார்யம் செய்யாமல். இப்படிப்பட்ட ஸ்வபாவம் இவனுக்கு உண்டானதற்குக் காரணம் பிராட்டியின் ஸம்பந்தம் என்று கொண்டு அவதரிப்பிக்கிறார்—‘* இவனுக்கு *’ என்றாரம்பித்து.* ஊற்றுவாய் — *உத்பத்தி ஸ்தானம். ‘* மலர்மகளாம் மங்கையோடு *’ என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—‘* ஈஶ்வரீத்வ *’ என்றாரம்பித்து. ‘* நாள் விளங்கு *’ என்று அந்வயித்து அர்த்தம் அருளிச்செய்கிறார்—‘* நாள் தோறும் *’ என்றாரம்பித்து.* செறி மிக்க — *ஒன்றோடொன்று சேர்ந்திருக்கை மிகுந்திருக்கிற.* 6

வரும் சகடமிற உதைத்து மல்லையட்டு
வஞ்சம் செய் கஞ்சனுக்கு நஞ்சானானை
கருங்கமுகு பசும் பாளை வெண் முத்தீன்று
காயெல்லாம் மரதகமாய்ப் பவளம் காட்ட
செருந்தி மிக மொட்டலர்த்தும் தேன்கொள் சோலைத்
திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே. 7

ப — ரை. ] இரும் — பருத்து நீண்ட, கை — துதிக்கையுடைய, மா - பெரிய, கரி — யானையை, அதாவது குவலயாபீடத்தை, முனிந்து — கோபித்து, அதாவது கோபத்தினால் கொன்று, பரியை — குதிரை ரூபமாய் வந்த கேஶி என்னும் அஸுரனை, கீறி — இரண்டு பிளவாகக் கிழித்து, இன — ஸமூஹமான, விடைகள் — வ்ருஷபங்கள், ஏழு-ஏழு களையும், அடர்த்து — ஹிம்ஸித்து, மருதம் — மருத மரங்களை, சாய்த்து— கீழே விழும்படி செய்து, வரும் — தன்னைக்கொல்லுவதற்காக உருண்டு வந்த, சகடம், இற - இற்றுப் போகும்படி, உதைத்து, மல்லை — மல்லர்களை, அட்டு - ஹிம்ஸித்து, வஞ்சம் செய் — வஞ்சனை செய்தவனை, கஞ்சனுக்கு — கம்ஸனுக்கு, நஞ்சானானை — விஷமானவனை, அதாவது அவனைக் கொன்றவனை, கரும் — கறுத்த, கமுகு — பாக்கு மரங்களுடைய, பசும் - பச்சை நிறமுள்ள, பாளை — பாளைகள், வெண்— வெளுத்த, முத்து - முத்துக்கள் போன்ற புஷ்பங்களை, ஈன்று — உண்டாக்கி, காயெல்லாம் — அந்தக் கமுகு மரத்தின் காயெல்லாம், மரதகமாய் - மரதக மணிக்கு ஸத்ருஶமாய், அவைகள் பழுத்ததும், பவளம் காட்ட — பவழத்தைப் போல் சிவந்து காட்ட, செருந்தி — ஒன்று சேர்ந்து, மொட்டு — மொக்குகளை, மிக — அதிகமாக, அலர்த்தும் — மலரச் செய்கிற, தேன் கொள் — தேனைக் கொண்டிருக்கிற, சோலை — சோலைகளையுடைய, திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே. 7

பெருத்தும் நீண்டுமுள்ள கையுண்டான பெரிய குவலயாபீடத்தைக் கொன்று, குதிரையாய் வந்த கேஶியை அங்காந்த வழியே

---

'இரும்' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'பெருத்தும்' என்றாரம்பித்து. 'முனிந்து' என்பதற்குப் பர்யவஸிதார்த்

கிழித்துக் கொன்று, கூட்டமாய் எதிர்த்த வ்ருஷபங்கள் ஏழையும் மேல் பாய்ந்து கொன்று, இணை மருதத்தை வேர்ப் பிடுங்கலாக விழவிட்டு, தன்னை அஸுராவேஶத்தால் கொல்ல வருகிற சகடம் பொடிப் பொடியாம்படி உதைத்து, மல்ல வர்க்கத்தை முடித்து, வில் விழாவுக்காக வரப்பண்ணி வஞ்சித்துக் கொல்லவும், 'ஐயோ! யானையால் பிடியுண்டு போனானே உன் மகன்' என்று தேவகிப் பிராட்டியை வஞ்சிக்கவும் நினைத்த கம்ஸனுக்கு அப்போதே பட்டு விழும்படி பண்ண வல்ல விஷமானவனைக் கண்டேன் என்றந்வயம். அது எங்ஙனே என்ன அங்குத்தைக்கு விஶேஷணம் 'கரும் கமுகு' இத்யாதி. நிலவளத்தாலும் குளிர்த்தியாலும் ஶ்ரத்தை பெற்றுக் கறுத்த நிறம் பெற்ற கமுகானது முற்பட பசுமையுடைத்தான பாளையைத் தள்ள, அந்தப் பாளையானது வெண் முத்தை ஈன்று, அது காய்த்தவாறே மரதகமாய், அது பக்வமானவாறே பவளத்தைக் காட்ட, அதைக் கண்டு விஸ்மயப்பட்டு சோலையிலுள்ள மரங்கள் ஒன்றோடொன்று சேர்ந்து மொட்டுக்களை மிகவும் மலர்த்தி

---

தம் அருளிச்செய்கிறார்—'கொன்று' என்று. 'கீறி' என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'அங்கார்ந்த' என்றாரம்பித்து. 'மருதம்' இத்யாதிக்கு தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'இணை' என்றாரம்பித்து. இணை – ஒன்றோடொன்று சேர்ந்திருக்கிற. வேர்ப்பிடுங்கலாக – வேருடன் பிடுங்கி. 'வரும்' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'தன்னை' என்றாரம்பித்து. 'மல்லையட்டு' என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'மல்ல' என்றாரம்பித்து. 'வஞ்சம் செய்' என்பதை விவரித்தருளுகிறார்—'வில்' இத்யாதியால். வில் விழா – தனுர்யாகம். 'நஞ்சானானை' என்பதை உரைக்கிறார்—'அப்போதே' இத்யாதியால். அங்குத்தைக்கு – அந்தஇடத்திற்கு. 'கருங்கமுகு' இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'நிலவளத்தாலும்' இத்யாதியால். விஸ்மயப்பட்டு – ஆஶ்சர்யப்பட்டு. அதாவது ஒன்றே அனேக ரத்னங்களைப் போல மாறி மாறிக் காட்டுகிறது என்று ஆஶ்சர்யப்பட்டு என்றபடி. அன்றிக்கே கார்ய வஸ்துக்கள் காரணங்களோடு ஸஜாதீயங்களாயிருக்கும் என்கிற நியமம் தவறிப்போயிற்றே என்று ஆஶ்சர்யப்பட்டு என்றபடியாகவு

ணதாய் ஸ்மிதம் பண்ணவும் அந்த ஹர்ஷத்தால் பெற்ற மதுவால் மதுபங்களை ஆகர்ஷிக்கவுமான சோலையால் அழகிய திருக்கோவலூராகிற அந்தத் திருப்பதியில் நானே கண்டேன் என்கிறார். 7

*பாரேறு பெரும் பாரம் தீரப் பண்டு*
*பாரதத்துத் தூதியங்கி பார்த்தன் செல்வத்*
*தேரேறு சாரதியாய் எதிர்ந்தார் சேனை*
*செருக் களத்துத் திறலழியச் செற்றான் தன்னை*
*போரேறொன் றுடையானும் அளகைக்கோனும்*
*புரந்தரனும் நான்முகனும் பொருந்துமூர் போல்*
*சீரேறு மறையாளர் நிறைந்த செல்வத்*
*திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே.* 8

ப — ரை. ] பார் - *பூமியில்,* ஏறு — *ஏறின, அதாவது ஸர்வம் ஸஹையான பூமிக்கும் பொறுக்க முடியாத,* பெரும் பாரம் — *பெரிய பாரமானது,* தீர — *நிவ்ருத்தி அடையும்படி,* பண்டு — *முன்னொருநாள்,* பாரதத்து — *பாரத யுத்தத்திற்கு முன்பே,* தூது - *தூத க்ருத்யத்தில்,* இயங்கி - *ஸஞ்சரித்து,* பார்த்தன் — *அர்ஜுநனுடைய,* செல்வ — *ஸம்பத்தையுடைய,* தேரேறு — *தேரில் ஏறும்படியான,* சாரதியாய், எதிர்ந்தார் — *எதிர்த்து வந்தவர்களுடைய,* சேனை, செருக்களத்து - *யுத்த பூமியில்,* திறல் — *அவர்களுடைய ஸாமர்த்தியம்,* அழிய - *அழியும்படி,* செற்றான் தன்னை - *நிரஸித்தவனை,* போரேறு — *யுத்தோன்முகமான வ்ருஷபம்,* ஒன்றுடையானும் — *ஒன்றையுடையவனாகிய ருத்திரனும்,* அளகைக் கோனும் — *அளகாபுரிக்கு ராஜாவாகிய குபேரனும்,* புரந்தரனும் — *தேவேந்திரனும்,* நான் முகனும் - *ப்ரும்மாவும்,* பொருந்தும் - *நித்ய வாஸம் செய்யும்,* ஊர் போல் - *பட்டணங்களைப் போல,* சீரேறு- *கல்யாணகுணங்கள் நிறைந்த,* மறையாளர் - *ப்ராம்மணர்கள்,* நிறைந்த, செல்வ - *ஸம்பத்தையுடையதான,* திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே. 8

---

*மாம்.* 'மொட்டு மிக அலர்த்தும்' *என்று அந்வயித்து அர்த்தம் அருளிச்செய்கிறார்—*'மொட்டுக்களை' *இத்யாதியால்.* 'தேன்' *இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—*'மதுவால்' *இத்யாதியால்.* 7

மிகவும் பொறுமையுள்ள பூமியே பொறுக்க மாட்டாதபடி ஏறின பெரிய பாரமானது, அதுக்குக் கழியும்படியாக அந்நாள் இந்நாளாகில் பிழைப்போம் என்பது தோற்ற ' பண்டு ' என்றது, முற்காலத்தில் பாரத யுத்தத்திற்கு முன்னாக

1 ' ந ஸூச்யக்ரம் ப்ரதாஸ்யாமி '

என்ற துர்யோதனாதிகளையும்,

2 ' கிம் நோ ராஜ்யேந '

என்ற அர்ஜ்ஜுனாதிகளையும் பொருந்த விடுகைக்காகப் போவது வருவதான தூத க்ருத்யத்திலே அதிகரித்தும், அவர்கள் உக்தி

1 ' ந ஸூச்யக்ரம் '

என்றதேயாக, அப்போதே பார்த்தனுடைய

3 ' மஹதி ஸ்யந்தநே '

என்னலான அழகிய தேரில் பார்த்தனை ரதியாக்கித் தான் ஸாரதி

---

' பாரேறு ' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'மிகவும் ' என்றாரம்பித்து. ' பண்டு ' என்பதற்கு தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—' அந்நாள் ' இத்யாதியால். ' பாரதத்து ' என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்— ' ந ஸூச்யக்ரம் ' இத்யாதியால். ஸூச்யக்ரம்—ஒரு ஊசி நுனி குத்த இடம் கூட, ந ப்ரதாஸ்யாமி—கொடுக்க மாட்டேன். ந: - எங்களுக்கு, ராஜ்யேந – ராஜ்யத்தினால், கிம் - என்ன ப்ரயோஜனம். ' தூதியங்கி ' என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—' பொருந்த ' இத்யாதியால். பொருந்த விடுகையில் ப்ரவ்ருத்தித்திருக்க யுத்தம் உண்டானது எங்ஙனே என்ன அருளிச்செய்கிறார்—' அவர்கள் ' இத்யாதியால். ' பார்த்தன் ' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—' அப்போதே ' என்றாரம்பித்து. மஹதி ஸ்யந்தநே – உத்தமமான தேரில். ' எதிர்ந்தார் ' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—' துர்யோதனாதிகளுடைய ' என்றாரம்பித்து. ' செருக்களத்து ' இத்யாதிக்கு

1. பாரத ஸாவித்ரீ. 2. கீதை – 1 - 32.
3. கீதை – 1 – 14.

யாய் ஏறினவனாய், துர்யோதனாதிகளுடைய ஸேனையை நெல்களம் என்னாப் போலே தங்கள் செருக்கை எல்லாம் காட்டலான யுத்த பூமியிலே தன்னை ஆயுதம் எடாதபடியும் ஸமய பந்தம் செய்தவர்களுடைய வீரஸ்ரீயும் அழியும்படி அவர்களைத் தேர்க் கால்கொண்டே நெரித்துக் கொன்றவனை,இங்ஙனே துர்வ்ருத்தி விரோத விநாசத்தால் அவ்வூரும் ஸ்வர்க்க துலிதமாய் அதிலுள்ளார் ஸத்வ்ருத்த மார்க்கமும் சிவாதி பரமஸாம்யமும் பெற்றவர்களாய் ஸசத்ருடஸம்பத்கரானார்கள் என்கிறார். யுத்தாதிகளில் தோன்றும் வாஹனமும் த்வஜமும் ஒன்றேயான வ்ருஷபமுடையவனும், அளகேஶ்வரனும்,இந்திரனும், சதுர் முகனும் போலிந்து இருக்தும்படியான அவ்வோ ஊர் போன்ற திருக்கோவலூர், அதிலுள்ளார் அவர்கள் போல் லக்ஷ்மீவாக் விலாஸ ஸம்பத்துக்களால் அபிவ்ருத்தரானார்கள் என்கிறார் —‘ சீரேறு மறையாளர் ’ என்று. இப்படி நிறைந்த ஸம்பத்துள்ள திருக்கோவலூரில் அன்றங்ஙனே செய்தவனை நானே கண்டேன் என்கிறார். 8

*தூவடிவில் பார் மகள் பூமங்கையோடு*
*சுடராழி சங்கிருபால் பொலிந்து தோன்ற*
*காவடிவில் கற்பகமே போல நின்று*
*கலந்தவர்கட்கருள் புரியும் கருத்தினானை*
*சேவடி கை திருவாய் கண் சிவந்த ஆடை*
*செம் பொன் செய் திருவுருவமானான் தன்னை*

---

*அர்த்தம் அருளிச்செய்கிறார்*—‘ நெல் களம் ’ *என்றாரம்பித்து. ஸாரதியாய் இருந்தவன் ஸேனையைக் கொன்றது எங்ஙனே என்ன அருளிச்செய்கிறார்*—‘ தேர்க் கால் ’ *இத்யாதியால். மேலுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார்*—‘ இங்ஙனே ’ *இத்யாதியால்.* ‘ போரேறு ’ *இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்* —‘ யுத்தாதிகளில் ’ *இத்யாதியால்.* ‘ சீரேறு ’ *இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்*—‘ அதிலுள்ளார் ’ *என்றாரம்பித்து.* 8

தீவடிவில் சிவனயனே போல்வார் மன்னு
திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே. 9

ப - ரை.] தூ — பரிஶுத்தமான, வடிவில் - திவ்ய மங்கள விக்ரஹத்தையுடையவளான, பார் மகள் — பூமிப் பிராட்டியும், பூமங்கையோடு — லக்ஷ்மியோடு, சுடர் - தேஜோ மயமான, ஆழி — சக்கரம், சங்கு — ஶங்கம், இவைகளும், இரு பால் — இரண்டு பக்கங்களிலும், பொலிந்து — மிகவும் ப்ரகாஶித்துக் கொண்டு, தோன்ற, காவடிவில் - வ்ருக்ஷ ஸமூஹத்தின் நடுவில், கற்பகமே போல - கற்பக வ்ருக்ஷம் போலே, நின்று, கலந்தவர்கட்கு — தன்னுடைய திருவுள்ளத்தை அனுஸரித்து நடப்பவர்களுக்கு, அருள் புரியும் - க்ருபை பண்ணுகிற, கருத்தினனை — திருவுள்ளத்தையுடையவனை, சேவடி — சிவந்த திருவடிகள், கை - திருக்கைகள், திருவாய், கண், சிவந்த ஆடை - சிகப்பு நிறமுள்ள திருப்பரிவட்டம், செம்பொன் செய் திருவுருவம் - சிவந்த பொன்னால் செய்யப்பட்டது போல் ப்ரகாஶித்துக்கொண்டிருக்கிற திருமேனி, ஆனான் தன்னை — இவைகளையுடையவனானவனை, தீவடிவில் — தீயைப் போன்ற வடிவையுடையவர்களான, சிவன், அயன் — ப்ரும்மா, போல்வார் — போன்றவர்கள், மன்னு - ஸ்திரமாக வஸிக்கிற, திருக்கோவலூரதனுள் கண்டேன் நானே. 9

பகவந் நாராயணபிமதாநுரூப திவ்ய மங்கள விக்ரஹையான பார்மகளானவளும் ஈஶ்வரீத்வ பூர்த்தியுள்ள பூமகளும் திவ்ய மங்கள விக்ரஹத்தில் பொலிந்து
1 ‘ வபுஷாம் தேஜஸ ஸாஹஸ்ரீ ’

---

‘ தூவடிவில் ’ என்கிற இடத்தில் தூ என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் — ‘ பகவந் ’ என்றாரம்பித்து. பகவானாகிய நாராயணனுக்கு மிகவும் இஷ்டமானதும் அப்படி இஷ்டமாவதற்கு அனுகுணமாயும் இருக்கிற திவ்ய மங்கள விக்ரஹத்தையுடையவளான என்றர்த்தம். ‘ பூமங்கை ’ என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்— ஈஶ்வரீத்வ ’ என்றாரம்பித்து. பூர்ணம் — எங்கும் நிறைந்த, தேஜ: — தேஜோரூபனான பக

1. ஸ்ரீ ஸ்துதி - 4.

என்றபடியே அவன் திருமேனி ஒளி ஸ்புரணாநுகுண பரபாகத்தாலும், இரு பார்ஶ்வமும் சுடராழியும் சங்குமானது கொண்டும் விளங்கித் தோன்ற, தனிக் கற்பகமன்றிக்கே நிலை செய்திருப்பதோர் கற்பகம் போலே நின்றவனாய், தன் ஆஜ்ஞாநுவிதானம் பண்ணிக்கொண்டு தன்னோடு நயந்தவர்களுக்கு அருள் செய்யும் திருவுள்ளமுள்ளவனை, அதுக்கு மேல் சிவந்த கமலம்போன்ற திருவடி திருப்பவளம் திருக்கண்களையும் சிறந்த திருப்பரியட்டத்தையும்

---

வான், ஸ்புரதி — ப்ரகாஶிக்கிறார். அதாவது பகவானுடைய திருமேனியின் ஒளிக்கு இவர்களுடைய திருமேனியின் ஒளி பரபாகமாயிருக்கிறது என்றபடி. ஸ்புரணாநுகுண - ப்ரகாஶிப்பதற்கு அநுகூலமான. பரபாகத்தாலும் — வர்ணத்தின் மேன்மையாலும், அதாவது ஒரு வர்ணம் மற்றொரு வர்ணத்துடன் சேர்ந்திருப்பதினால் அதிக ப்ரகாஶமாகத் தோன்றுவதினாலும் என்றபடி. 'சுடராழி சங்கு' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'இருபார்ஶ்வமும்' என்றாரம்பித்து. இங்கு யதாக்ரமம் அந்வயமாகையாலே

'சக்ரஸ்ய தைத்யதநுஜாதிஷு வாமபாவம் ஸவ்யஸ்ய சாஶ்ரிதஜநேஷ்வபி தக்ஷிணத்வம் | வக்தும் ப்ரதமபூயஸி ஹேமவர்ணாயிராஜ வக்த்ரஸ்ய தந்தநயோ: கரஸம்ப்ரயோக: ||'

என்கிறபடியே பார் மகளோடு இடது பக்கத்தில் திருவாழியையும் பூமகளோடு வலது பக்கத்தில் திருச்சங்கையும் தரித்துக்கொண்டிருப்பது த்யோதிதம். 'காவடிவில்' என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'தனி' இத்யாதியால். 'கலந்தவர்கட்கு' என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'தன்' என்றாரம்பித்து. ஆஜ்ஞாநுவிதானம் - ஆஜ்ஞைப்படி நடப்பது. அதாவது ஸ்வவர்ணாஶ்ரம தர்மத்தை ஶாஸ்த்ர விதிப்படி அநுஷ்டிப்பது என்றபடி. 'அருள் புரியும்' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'அருள்' இத்யாதியால். 'சேவடி' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'அதுக்கு மேல்' இத்யாதியால். நயந்தவர்களுக்கு — ஸ்நேஹம் செய்தவர்களுக்கு, தன்னை ஆஶ்ரயித்தவர்களுக்கு என்றபடி.

'த்ருஹாவேந ஸம்ப்ருக்தம்'

1 ' ஸுவர்ணவர்ண ஸர்வ ஸர்வ ஸுவர்ண: '
என்றனுபவிக்கலானதிருமேனியையுமுடையவனை பக்தி ஜ்ஞாநாதிக ளுக்கு சிவனும் அயனும் போன்றவர்களாய் ஶாந்தி மாங்கல்யாதி களுக்கு அக்னி துல்யரானவர்களே நிலை பெற்று நிற்கலான திருக் கோவலூரிலே நானே கண்டேன் என்கிறார். 9

வாரணம் கொள் இடர் கடிந்த மாலை நீல
  மரதகத்தை மழை முகிலே போல்வான் தன்னை
சீரணங்கு மறையாளர் நிறைந்த செல்வத்
  திருக்கோவலூரதனுள் கண்டேன் என்று
வாரணங்கு முலை மடவார் மங்கை வேந்தன்
  வாள் கலியனொலி ஐந்து மைந்தும் வல்லார்
காரணங்களால் உலகம் கலந்தங்கேத்தக்
  கரந்தெங்கும் பரந்தானைக் காண்பர் தாமே. 10

பத்தாம் திருமொழி முற்றிற்று.

திருமங்கையாழ்வார் திருவடிகளே ஶரணம்.

---

என்றுணிறே தன்னை ஆஶ்ரயித்தவர்களை. ஆப்ரணகாத் — நகம் வரை யிலும், ஸர்வ ஏவ — எல்லாச் சரீரமும், ஸுவர்ண: - ஸ்வர்ணமயம், அதாவது ஸ்வர்ணம் போன்ற காந்தியையு டைய திருமேனியையுடையவன். இத்தால் பகவான் நமக்கு அனுக் ரஹம் செய்யாமல் இருந்தாலும் கூட அவனுடைய திரு வடிவழகு விடவொண்ணுதபடி செய்யும் ஏற்றத்தையுடையது என்பது த்யோதி தம். ' தீவடிவில் ' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்— ' பக்தி ' என்றாரம்பித்து. 9

ப - ரை. ] வாரணம் — யானை, கோள் — அடைந்த, அன்றிக்கே யானையைக் கொண்ட, அதாவது அதின் பல பராக்ரமங்கள் எல்லாவற் றையும் அடக்கி அதை ஆக்ரமித்த, இடர்—துக்கத்தை, கடிந்த - போ

1.

க்கடித்தவனை, மாலே — வ்யாமோஹமுள்ளவனே, நீல — நீல ரத்னத்தையும், மரதகத்தை — மரதகத்தையும், மழை முகிலே - மழை பெய்கிற மேகத்தையும், போல்வான் தன்னை - போல இருக்குமவனை, சீர்— ஐஶ்வர்யம், அணங்கு - விரும்பி வந்த, மறையாளர் - வேத வித்துக்களான ப்ராம்மணர்கள், நிறைந்த - நிறைந்திருப்பதாகிய, செல்வ — ஸம்பத்தையுடைய, திருக்கோவலூரதனுள் — திருக்கோவலூர் என்கிற திருப்பதியில், கண்டேன் என்று, வார் — வாருக்கு, அணங்கு — அழகை கொடுக்கிற, முலை மடவார் - முலைகளையுடைய பவ்யதை பெற்ற ஸ்த்ரீகள், நிறைந்த, மங்கை — மங்கை என்னும் தேஶத்திற்கு, வேந்தன் — அரசனாகிய, வாள் கலியன் — வாளை ஆயுதமாக உடைய திருமங்கை ஆழ்வார், ஒலி - ஶப்தமான—அருளிச்செய்த ப்ரபந்தமாகிய, ஐந்துமைந்தும் — பத்துப் பாட்டுக்களையும், வல்லார் - அறிந்தவர்கள், காரணங்களால் — வெவ்வேறு பலத்தில் ஆசைகளாகிற காரணங்களினால், உலகம் — லோகத்திலிருக்கும் ஜனங்கள், கலந்து — அவன் நியமித்த உபாயங்களை அனுஷ்டித்து அவன் திருவுள்ளத்துடன் கலந்து, அங்கு — அந்தந்த இடங்களிலே, ஏத்த — ஸ்தோத்திரம்செய்யும்படி, கரந்து — மறைந்து, எங்கும் — எல்லா இடத்திலும், பரந்தானை - வ்யாபித்து நிற்குமவனை, காண்பர்தாமே - பார்ப்பார்கள். 10

கஜேந்திரன் கொண்ட இடரைப் போக்கி அவனில் நிரதிஶய வ்யாமோஹமுள்ளவனை, அவன் விடாய் எல்லாம் தீர நீலம் போ

---

'வாரணம் கோள்' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'கஜேந்திரன்' என்றாரம்பித்து. 'கொண்ட' என்றது தானே பொய்கையில் புகுந்து அகப்பட்டுக்கொண்ட என்றபடி. அப்படிப்பட்ட அந்தக் கஜேந்திரனைக் காப்பாற்றினதற்குக் காரணம் 'மாலே' என்பதினால் ஸூசிப்பிக்கப்படுகிறது என்று கொண்டு அதற்குக் அர்த்தம் அருளிச்செய்கிறார்—'அவனில்' இத்யாதியால். 'விடாய் எல்லாம்' என்றது கஜேந்திரனுடைய மனோரதத்தின்படி பகவானுடைய திருவடிகளில் தான் பறித்த தாமரைப் புஷ்பங்களை ஸமர்ப்பிக்கவேண்டும் என்கிற விடாயையும், நடுவில் முதலையால் உண்டாக்கப்பட்ட விடாயையும் என்றபடி. 'இடர் கடிந்த' என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'அவன்' இத்யாதியால். 'நீல' இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'நீலம்' என்றாரம்பித்து. 'மழைமுகிலே'

ன்றும் மரதகம் போன்றும் எதிரே குளிர நின்றவனை, தன் விர ஹாக்னியால் அதிகின்னர்க்கும் மழை சோரியும் முகில் போல் ஆ விர்ப்பவிக்குமவனை, ஐஶ்வர்யமானது தானே விரும்பி வந்தடை யும்படியான ஸ்வாதீந வேத சதுஷ்டய மஹா புருஷர்களே நிறை ந்தது கொண்டு அழகிய ஸம்பந் மயமான திருக்கோவலூரிலே கண் டேன் என்று, அணங்கு - விருப்பமும் அழகும், வார் முதலான வைகளால் மிகவும் விரும்பத்தக்கதான, அழகிய முலைகளால் பவ் யதை பெறுத்துவார் மயமான திருமங்கையை ஆளுகிற ப்ரதிபக்ஷ நிரஸனத்திற்காகவே வாளைப் பிடித்த கலிகன்றியினுடைய இப்பத் துப் பாட்டையும் அறிய வல்லவர்கள் அந்தந்தப் புருஷார்த்தங்க ளில் ஆசையாகிய காரணங்களினால் ஆஶ்ரயிக்கும் ஜனங்கள் அவன் விதித்த தத் தத் ஸாதனப்படியே அதிகார ஸம்ஙியாராகில்
1 'யத்யேந காமகாமேந'

---

இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'தன்' என்றாரம்பித்து. 'சீரணங்கு' என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'ஐஶ்வர்யமானது' இத்யாதியால். 'மறையாளர்' இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'ஸ்வாதீந' என்றாரம்பித்து. 'ஸ்வாதீந' இத்யாதி—தங்களுக்கு வஶப்பட்ட நான்கு வேதங்களையும் உடையவர்களான என்றபடி. 'வாரணங்கு' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'அணங்கு' என்றாரம்பித்து. 'மடவார்' என்பதை உரைக்கிறார்—'பவ்யதை' என்றாரம்பித்து. 'வாள் கலியன்' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'ப்ரதிபக்ஷ' என்றாரம்பித்து. 'காரணங்களால்' என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'அந்தந்த' இத்யாதியால். 'கலந்து' என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'அவன்' என்றாரம்பித்து. ப்ரதானமாக விதித்த உபாயங்களை அநுஷ்டிக்க ஶக்தியில்லாதவர்களும் அந்தப்பலனை அநுபவிக்கும் ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார்—'யத்யேந' என்றாரம்பித்து. அதாவது

'யத்யேந காமகாமேந ந ஸாத்யம் ஸாதநாந்தரை:|

1. அஹிர் புத்ந்ய ஸம்ஹிதை

என்கிறபடியே
1 ' [illegible] '
என்று நிஷ்கர்ஷிக்கப்பட்ட சரம ஶ்லோக ஸங்க்ரஹமான அவன் நெஞ்சோத்தவராய் அவ்வவ ஸ்தாநங்களிலே தன்னையே ஏத்தும்படியாக மறைந்திருந்தே எங்கும் ஸ்வ ஸ்வரூபத்தாலே போல ஸ்வ குணங்களாலும் வ்யாபித்தவனாயிருக்குமவனைக் காணப் பெறலாமே, இவ்வாழ்வார் தாம் இருந்த இடத்தில் இருந்தே அவ்வோ பாட்டுக் களில் அருளிச்செய்யப்பட்ட தத்தத் குண விஶிஷ்டனை திருமாலைத் திருக்கோவலூரில் நானே கண்டேன் என்பது ஸத்யம் என்று இத்திருமொழியை அறியவல்லார்கள் அவனைக் காணப் பெறலாமே என்று திருவுள்ளம். 10

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

[illegible]

|| [illegible] ||

பத்தாம் திருமொழி முற்றிற்று.

பெரிய பரகால ஸ்வாமி திருவடிகளே ஶரணம்.

---

[illegible] ||

ப்ராப்யதே பரமம் தாம யதோ நாவர்த்ததே யதி: |
தேந தேநாப்யதே தத்து ந்யாஸேநைவ மஹாமுநே ||
பரமாத்மா ச தேநைவ ப்ராப்யதே புருஷோத்தம: ||'

என்றபடி. காம்ய பலங்களில் ஆசையுடைய எவனால் எந்தப் பலம் மற்ற உபாயங்களினால் ஸாதிக்க முடியாததோ, எந்த மோக்ஷத்திலிருந்து போகம் செய்பவன் திரும்பி வருகிறதில்லையோ, அப்படிப்பட்ட பரமபதம் பக்தியினால் அடையப்படுகிறதில்லையோ, மோக்ஷத்தில் ஆசையுடையவனால் எந்தப் பலம் ஜ்ஞான யோகத்தினாலும் கர்ம யோகத்தினாலும் அடையப்படவில்லையோ, அந்தப் பலம் அந்த மனுஷ்யனால் ஶரணாகதியினாலேயே அடையப்படுகிறது. புருஷ ஶ்ரேஷ்டனாகிய பரமாத்மாவும் அந்தப் பரந்யாஸத்தினாலேயே அடையப்படுகிறான் என்றர்த்தம். 'ஸ ஸ' இத்யாதி—

'ஸுது:ஷ்கரேண ஶோசேத்யோ யேந யேநேஷ்டஹேதுநா | ஸ ஸ தஸ்யாஹமேவேதி சரமஶ்லோகஸங்க்ரஹ:'

என்று பூர்ண ஶ்லோகம். எவன், ஸுதுஷ்கரேண - தன்னால் செய்ய முடியாததாகிய, யேந யேந — எந்த எந்த, இஷ்டஹேதுநா - இஷ்ட பலத்திற்குக் காரணமாகிய உபாயத்தினால், ஶோசேத் — துக்கிப்பனோ, ஸ ஸ: தஸ்ய - அவனுக்கு அந்தந்த உபாயம், அஹமேவேதி - நானே என்று, சரம ஶ்லோகத்தின் ஸங்க்ரஹம். 'அங்கு' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'அவ்வவ' என்றாரம்பித்து. 'கரந்து' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'மறைந்திருந்தே' என்றாரம்பித்து. 'தாமே' என்கிற அனுப்ரயோகம் கீழ் நிரூபித்தருளிய அர்த்தத்தின் நிஶ்சயத்தைக் காட்டுகிறது. அன்றிக்கே 'ஐந்துமைந்தும் வல்லார் தாமே காண்பர்' என்று அந்வயமாகவுமாம். இவ்விரண்டு படியாலும் ஏற்பட்ட அர்த்தத்தை அருளிச்செய்கிறார்— 'இவ்வாழ்வார்' என்றாரம்பித்து.

பத்தாம் திருமொழி முற்றிற்று.

நிகமபரிமள அச்சுக்கூடம், பராங்குஶ மந்திரம், திருவல்லிக்கேணி.

# மூன்றாம் பத்து.



## முதல் திருமொழி—இருந்தண்.

[ திருவஹீந்திரபுரம் ஸ்ரீ தெய்வ நாயகப் பெருமாள் விஷயம். ]

இருந்தண் மா நிலமேனமதாய்
வளை மருப்பினில் அகத்தொடுக்கி
கரும் தண் மா கடல் கண் துயின்றவனிடம்
கமல நன் மலர்த்தேறல்
அருந்தி இன்னிசை முரன்றெழும்
அளிகுலம் பொதுளி அம்பொழிலூடே
செருந்தி நாண் மலர்ச் சென்றணைந்து
உழி தரு திருவயிந்திரபுரமே. 1

ப—ரை.] இரும் — விஸ்தாரமான, தண் — சீதளமான, மா — பெரிய, நிலம் — பூமியை, ஏனமதாய் — அப்படிப்பட்ட விலக்ஷண மான வராஹமாய், வளை — வளைந்த, மருப்பினில் - கோரைப்பல்லில், அகத்து - ஏக தேசத்தில், ஒடுக்கி — ஒடுங்கும்படி செய்து, கரும் — கறுத்த நிறமுள்ள, தண் - சீதளமான, மா - விசாலமான, கடல் — ஸமுத்திரத்தில், கண் துயின்றவன் — நித்ரை செய்கிறவனுடைய, இடம் - வஸிக்கும் இடமானது, இது மேலே 'திருவயிந்திரபுரமே' என்பதுடன் அந்வயிக்கிறது, கமலம் — தாமரையினுடைய, நல் — நல்லதான, மலர் — புஷ்பத்தினுடைய, தேறல் — தேனை, அருந்தி — புஜித்து, இன் - இனிய, இசை — கானங்களை, முரன்று - ஸப்தித்துக் கொண்டு, அதாவது பாடிக்கொண்டு, எழும் - கிளம்புகிற, அளி — வண்டுகளுடைய, குலம் — கூட்டம், பொதுளி - ஒன்றாகச் சேர்ந்து கொண்டு, அம் — அழகிய, பொழில் — தோப்புக்களின், ஊடே - நடுவில், செருந்தி - செருந்தி மரத்தின், நாண் மலர் - அப்பொழுது விகஸித்த புஷ்பத்தினிடத்தில், சென்று - போய், அணைந்து - அனுபவித்து, உழி தரு — அவ்விடத்திலேயே ஸஞ்சரிக்கிற, திரு — ஸம்பத்தைக் கொடுக்கிறதான, அயிந்திரபுரமே. 1

## மூன்றும் பத்து—முதல் திருமொழி.

இங்ஙனே திருவஹீந்திரபுரத்தாரும் தத் பரிஸர வர்த்திகளும் திருக்கோவலூர் ஆயனுர் படியைக் கேட்டு நமக்குப் பரம ஸுல

---

## மூன்றும் பத்து—முதல் திருமொழி.

*கீழ்த் திருமொழியில் சீரணங்கு மறையாளர்க்கு ஆஶ்ரயணீய ணுய்க் கொண்டு நிற்கும் நிலையை நிரூபித்தார். அங்ஙனன்றிக்கே ஆர்க்கும் கருணை பொழிவாணுய் அயிந்தையில் வந்தமர்ந்து தன்னை ஆஶ்ரயித்தவர்களுக்குத் தன் படிகளை எல்லாம் காட்டிக்கொண்டு நிற்கும் திருவஹீந்திரபுர க்ஷேத்திரத்தின் மஹிமையை இத்திருமொழியில் நிரூபித்தருளுகிருர் என்கிற ஸங்கதி அறியத்தக்கது. இந்த க்ஷேத்திரத்தில் அடியவர்க்கு மெய்யன் ப்ராப்யத்வ ப்ராபகத்வோப யுக்தமான குணங்கள் எல்லாவற்றையும் உடையவன் என்பதை உக்தி ப்ரத்யுக்திரூபமாக அருளிச்செய்கிருர்—' இங்ஙனே ' என்றுரம்பித்து. இத்திருமொழியில் மேலே ' மேவு சோதியை ' என்றருளிச்செய்திருப் பது இத்திருமொழியில் நிரூபிக்கப்படுகிற ப்ராப்ய ப்ராபகத்வங்கள் திவ்ய மங்கள விக்ரஹ விஶிஷ்டனுன பகவானுக்கே என்பதைக் காட்டுவதற்காக. ஆழ்வாரும் முதல் இரண்டு பத்துக்களில் இக்குணங்களையே நிரூபித்து, மூன்றும் பத்தில் திவ்யமங்கள விக்ரஹத்தை அருளிச் செய்ததற்குக் காரணம் இதுவே என்று*

' உபாயபெகவகாஞம் ஹ்யாஜ்ஜிஹ ஸெவ்ஹகவஜாஜிதம் து
தஜ்ஜ ஹாவ்ஹகவளவயிகஜ திஜெஹாம்ஹ கவஜவஹஜ |
அயம் தஜ்ஸாஸாயாரண தநாவிஶிஷ்டவஹ மணயநு
தரதீயெ விஶெஶம் ஶாஹஸாஹஶ்ரவம் கமயதி || '

*என்றுநிருபிக்கப்பட்டதிறே. மூன்றும்பத்தில்பகவானுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தின் பெருமை ' முடிச்சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ ' என்றும், ' பயிலும் சுடரொளி மூர்த்தியை ' என்றும், ' பரம் சோதி ' என்றும் அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. இந்த ஏற்றத்தைத் திருவுள்ளத்தில் வைத்துக்கொண்டு ஆசார்யனும் ஸ்ரீ தேவநாயக பஞ்சாஶத்தில் திவ்ய மங்கள விக்ரஹத்தின் வைலக்ஷண்யத்தை*

' ஹஷாயஹெயராயிமதம் நிஜகாந்திஜெஹதா; '

பனும் ஆஶ்ரயணீயனும் ரக்ஷகனும் பரம ப்ராப்யனும் அவனே என்று அத்யவஸித்து, இங்கிருந்த நாளைக்கு வஸ்தவ்ய தேஶமும் அவ்வூரே என்று அறுதியிட்டு, அங்கேறப் போகக் கருட நதியைக் கடந்தவர்களாக; திருமங்கையாழ்வார் அவர்களைக் கண்டு ‘எங்கு போகிறீர்கள்’ என்ன; ‘திருக்கோவலூர் ஆயனாரை ஆஶ்ரயிக்கப் போகிறோம்’ என்ன; ‘இது திருவஹீந்த்ரபுரமன்றோ? இதில் தே

---

*என்றாரம்பித்து விஸ்தாரமாக நிரூபித்தருளியது. ‘நின் வடிவழகு மறவாதார் பிறவாதாரே’, ‘தேசொத்தாரில்லை என்னும் தெய்வ நாயகா’ இத்யாதிகள் இங்கு அனுஸந்தேயங்கள்.* **ஆயனார் படியைக் கேட்டு** *– கீழ்த் திருமொழியில் ப்ரதிபாதிக்கப்பட்ட அந்த எம்பெருமானுடைய பெருமையைக் கேட்டு.* **கடந்தவர்களாக** *– தாண்டிப் போகிறவர்களாக. அதாவது ஆழ்வார் இப்படித் திருக்கோவலூர் ஆயனாரை ஸ்தோத்தரித்ததைக் கேட்ட இவ்வூர் வாஸிகள் அவனே பரமோத்தேஶ்யன் என்று கொண்டு அவனை ஆஶ்ரயிப்பதற்காகப் புறப்பட்டு ஊருக்கு எல்லையான கருட நதியைத் தாண்டிப் போய்க் கொண்டிருக்கும்பொழுது என்றபடி. இப்படித் தனக்கு வேண்டியவர்களைத் தானே வலுவில் இழுக்கும் ஸ்வபாவத்தை உடையவன் ஸ்ரீ தெய்வ நாயகன் போலும். இப்படியேயிறே ஆசார்ய ஸார்வபௌமனையும் வழி மறித்துத் திருப்பின வ்ருத்தாந்தத்தை அவர் தாமே*

‘ [illegible] ॥ ’

*என்று அருளிச்செய்தார். அப்பொழுது தானே நேரில் நின்று ஆசார்யனை அனுக்ரஹித்தருளினான். இப்பொழுது தன்னுடைய அபிநவ தஶாவதாரர்களில் ஒருவரான திருமங்கையாழ்வாரைக் கொண்டு தன் விஷய வாஸிகளான அடியவர்களைத் திருப்பி அழைத்து வந்தான் என்பது வித்யாஸம்.* **‘திருவஹீந்திரபுரமன்றோ’** *என்று இதனுடைய வஸ்தவ்யத்வமும் ப்ராப்யத்வாதிஶயமும் சொல்லப்படுகிறது. ‘வெற்புடனொன்றி அயிந்தையில் வெவ்வினை தீர் மருந்தொன்று அற்புதமாக அமர்ந்தமை’ என்கிறபடியே மனதினால் நினை*

ய்வ நாயகன் உகந்தருளி ஸர்வ ஸமாஶ்ரயணீயனுகைக்காகவே நிலை

க்க ஸம்ஸாரத்தைப் போக்கடிக்கக் கூடிய மருந்தாகிய பகவான் வஸிக்கும் இடம் இதுவன்றோ என்றதாயிற்று. உகந்தருளி – ஆஶ்ரிதர்கள் தன்னை அடைவதற்காக இந்த க்ஷேத்திரத்தில் அவன் தான் முன்னி வந்து உறைந்திருந்தான் என்றபடி. ஆழ்வாரைக் கடாக்ஷிக்க எம்பெருமான் தொலைவில்லிமங்கலத்தில் முன்னி வந்து உறைந்ததோபாதி, 'அயிந்தை மா நகரில் அமர்ந்தனை எமக்காய்' என்று தாமே அநுஸந்திக்கும்படி ஸ்வாமி தேஶிகனை அநுக்ரஹிப்பதற்காக இந்த க்ஷேத்திரத்தில் முன்னி வந்து உறைந்ததோபாதி, மொழிவார் மொழிவன முமமறையாகும் அயிந்தையில் இழிவார் இழிக என்று இந்த க்ஷேத்திர வாஸிகள் தன்னை ஆஶ்ரயிப்பதற்காக இங்கு முன்னி வந்து அவதரித்தான் என்றபடி.

'ஸோ ஸாந்தீபநிகதாஹ ஜந்துநி க்ருஷ்ணஸாமோ ஸ ஜாத
ரஸ வித்ரஸ காலே சவி ஸை | ஸநக க்ஷ
ணாதுநாஸ்ருஹீதவத: ஸயும் தே நீஹாகாலேந ஸதுஷ
ஶீகிஶ ராக்ஷிணீ ச ||'

என்கிறபடியே ருக்மிணிப் பிராட்டியையும் நப்பின்னைப் பிராட்டியையும் ஒரு அவதாரத்திலேயே அநுக்ரஹித்தாப்போலே இந்த தெய்வநாயகனுகிற ஒரு அவதார விஶேஷத்திலே இப்பொழுது இந்த க்ஷேத்திர வாஸிகளையும், பிறகு ஸ்வாமி தேஶிகனையும் அநுக்ரஹித்தானுயிற்று. பற்பில் மறந்த செய்யாள் படி காட்டிய ஸ்வாமிக்கும் பகவானை அப்படித் தங்களுக்குப் பர்த்தாவாக அத்யவஸித்த மற்றவர்களுக்கும் நெடு வாசியுண்டு. எங்ஙனே என்னில்:—திருத் தொலைவில்லிமங்கலத்து எம்பெருமானிடத்தில் ஈடுபட்ட வகுளாபரணப் பிராட்டி அவனிடத்தில் ஏற்கனவே ப்ராவண்யமுள்ளவளாய் 'தொலைவில்லிமங்கலம் கண்ட பின்' என்கிறபடியே அந்தத் திவ்ய தேஶம் சென்று அவ்வெம்பெருமானை ஸேவித்த பிறகே அவனைக் காமுற்றது. திருவாலி எம்பெருமானிடத்தில் காமுற்ற கள்வன் கொல் பிராட்டியும் தன்கை வெள்ளி வளையை அவன் கைப்பற்றின பிறகே பெற்ற தாயரை விட்டகன்று அணியாலி புக ஒருப்பட்டது. இந்தந் தூப்புல் பிராட்டியோ அவன் அற்புதமாக அமர்ந்தமை கேட்டே விலங்கா மயல் பெற்றாளாய் நின்றாள்.

பெற்றிருக்க, அங்கேறப் போமதற்குக் காரணம் எது ' என்ன; 'அவன் தெய்வ நாயகனுகில் வெறும் பரனுகிருன், நாங்கள் ஆஶ்ரயிப்பதற்கு ஸர்வ ரக்ஷகனும் பரம ஸுலபனுமாக வேணுமே, லக்ஷ்மீ விஶிஷ்டனும் அடியவர்க்கு மெய்யனுமாக வேணுமே, நம் விரோதிகளைப் போக்குமவனுக வேணுமே, ஆஶ்ரித பக்ஷபாதமுடையவனுக வேணுமே, இது முதலானதுகள் எல்லாம் அவன் இல்லாமையை அவனுடைய அத்திருநாமத்தால் அறியப் பெற்ருேமாக அங்கேறப் போக ஒருப்பட்டோம் ' என்ருர்கள். ' ஐயோ கெடுவிகாள்! இவனை விட்டு அங்கேறப் போவதே ! பேர் அதுவாகில் தன் ஏற்ற

---

*'அஶ்ரத்தஃ காலோ ஸம்ஸ்ப்ருஶ்ய ஸத்தம் ஶ்ருணாது' என்னக்கடவதிறே. இப்படிப்பட்ட அகிலிலக்ஷணையான பிராட்டியுடன் ஸம்ஶ்லேஷிப்பதற்காகவிறே அடியவர்க்கு மெய்யன் இந்தக்ஷேத்திரத்தை உகந்தருளினுன் என்றதாயிற்று.* ஸர்வஸமாஶ்ரயணீயனுகைக்காகவே—*எல்லோரும் ஸுலபமாய் ஆஶ்ரயிப்பதற்காக. இத்திருமொழியின் இறுதியில் ' தேவர் தானவர் சென்று சென்றிறைஞ்ச ' என்று அருளிச்செய்யப்பட்டதிறே. ' ஆர்க்கும் கருணைபொழிவான்' என்றும், ' இழிவார் இழிக ' என்றுமிறே ஆசார்யனும் அநுஸந்தித்தது.* வெறும் பரனுகிருன் — *கேவலம் பரத்வத்தை உடையவனுகிருன், அதாவது ஸௌலப்யத்துடன் சேராத பரத்வத்தையுடையவனுகிருன் என்றபடி. மஹா மேருவைப் போன்ற பரத்வமாகையாலே அது நம் போலியருக்குக் கார்யகரமாகாதிறே. போக்யமேயாயினும் ஸேவ்யமாயிருந்தாலல்லவோ ப்ரயோஜனவத்தாகும். ஆகையாலிறே ஆழ்வாரும் முதலில் ஸேவ்யத்வத்தை அருளிச்செய்து பிறகு போக்யத்வத்தை நிரூபித்தருளினுர். ஸேவ்யத்வமில்லை என்னில் அவனுக்கு உபாயத்வமும் இல்லையாகும் என்று கருத்து.* அத் திருநாமத்தால் - *ஸ்ரீ தெய்வ நாயகன் என்கிற திருநாமத்தால்.* ' ஐயோ ' *என்பதினுல் ஆழ்வாருக்கு அவர்கள் திறத்தில் உண்டான அநுஶயத்தின் ஆதிக்யம் தெரிவிக்கப்படுகிறது.* ' கெடுவிகாள் ' *என்றது கெட்டுப்போகிறவர்களே என்றபடி. அதாவது கீதையில் பகவான் தன்னை ஆஶ்ரயிக்காதவர்களை நாலு வகுப்பாகப் பிரித்தவர்களில் ஒருவராகையினுலே ஆத்ம நாஶத்தைத் தேடிக்கொள்ளுமவர்கள் என்றபடி. இவர்களையிறே நராதமன் என்று பகவான் நிந்தித்தது.* ' இவனை விட்டு அங்கேற '

மான மற்றக் குணங்கள் இவனுக்கு இல்லையாய்த்தோ ? ஆனால் கேளுங்கோள், இவன் படியையும் இவ்வூர் ப்ரபாவத்தையும் அழகையும்' என்று அவர்களுக்கு அருளிச்செய்கிறார்—' இருந்தண் ' என்றாரம்பித்து.

' ஆழ்வீர் ! நாம் எடுத்த அவதாரங்கள்படியே நம்மைப் பாடீர் ' என்றார். ' நாயினேன், திருமொழி தோறும் அங்ஙனே பாடினால்

---

*என்பதினால் த்யஜிக்கப்பட்ட வஸ்துவின் போக்யதாதிஶயமும், பரிக்ரஹிக்கப்படும் வஸ்துவினுடைய போக்யதையின் அல்பத்வமும் காட்டப்படுகிறது. ' இச்சுவை தவிர யான் போய் . . அச்சுவைபெறினும்வேண்டேன் ' என்றாரிறே தொண்டரடிப்பொடிகளும். இவ்வாழ்வார் தாமும் ' ஏரார் முயல் விட்டுக் காக்கைப்பின் போவதே ' என்றிறே அநுஸந்தித்திருப்பது. தன்னேற்றமான—தனக்கே அஸாதாரணமாகவுள்ள, அதாவது ஸ்வபாவ ஸித்தமாய் அவனுக்கு உத்கர்ஷத்தைக் கொடுக்கக்கூடியதான. இல்லையாய்த்தோ — இல்லாமல் போய்விட்டதோ என்றபடி. பேரதுவாகில் - திருநாமம் அதுவானால், அதாவது தெய்வநாயகன் என்கிற திருநாமத்தைக் கொண்டு அவனுக்கு மற்றக் குணங்கள் இல்லை என்று சொல்லவொண்ணாது. அத்திருநாமத்திற்கு அர்த்தம் அவனுடைய பரத்வத்தை மாத்திரம் காட்டுகிறதல்ல.*

' ஸ்வாயீந விஶ்வ விபவம் பஜதாம் விஶேஷாத் ஸர்வாத்ம தைவநாயக இத்யபிதா ப்ரஜாகாத் | ... ||'

*என்றிறே இத்திருநாமத்தின் அர்த்தம் சொல்லப்பட்டது. அதாவது தன்னை ஆஶ்ரயித்தவர்களை அயர்வறுமமரர்களாக்க வல்ல பெருமையுடையவன் என்றபடி. ' நின் வடிவழகு மறவாதார் பிறவாதாரே ' இத்யாதிகள் அநுஸந்தேயம். பேரதுவாகிலும் பொருளதுவல்ல என்று தாத்பர்யம்.*

*இப்படி ஆழ்வார் இவர்களுக்கு உபதேஶம் செய்ய ஆரம்பிக்க, பகவான் தம்மை எப்படிப் பாடவேண்டும் என்று நியமித்த ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார்—' ஆழ்வீர் ' என்றாரம்பித்து.* நாம் எடுத்த அவதாரங்கள் படியே — *லோகோஜ்ஜீவனார்த்தமாக நாம் செய்தருளிய*

அத்தோடு இதுவும் ஒருபடிப்பட்டதாம்' என்று அதுக்கு விண்ணப்பம் செய்ய; 'இவர்கள் நம்மை விட்டுப் போகப் பார்த்தபடியை நீரே கண்டீரே. உரையும் நிறையும் ஒன்றேயாகிலும் வழக்கமுள்ள முத்திரை எல்லாம் அடைந்த பொன் என்ன நம்மையும் அங்ஙனே வழங்கும்படி பாடீர்' என்ன அத்திருவுள்ளப்படியே பாடுகிறார்.

---

*அவதாரங்களின் ப்ரகாரங்களை, அதாவது அவதாரங்களின் க்ரமங்களையும், அவைகளில் செய்தருளிய திவ்ய சேஷ்டிதங்களையும், ஸாது பரித்ராணாதிகளையும், ஆஶ்ரித விரோதி நிரஸனத்தையும் என்றபடி.* ஒருபடிப்பட்டதாம் - *மற்றத் திருமொழிகளும் இதுவும் ஸமமாகுமேயன்றி இதற்கு ஒரு விஶேஷம் ஏற்படாது என்றபடி.* நம்மை விட்டுப் போக — *நம்மைப் பரித்யஜித்து விட்டு திருக்கோவலூர் ஆயனாரை ஆஶ்ரயிப்பதற்காகச் செல்லுவதை.* உரையும் — *உரைத்து அறியவேண்டிய மாற்றும்.* நிறையும் — *பலம் தோலா முதலிய இடைகளின் அளவும்.* 'வழக்கமுள்ள' *இத்யாதி — எந்த முத்திரையிட்ட பொன்னானது ஸர்வ ஜன ஸாதாரணமாய் வழங்கப்படுகிறதோ, அப்படிப்பட்ட முத்திரையை அடைந்த பொன்னைப்போல. அதாவது இடையும் மாற்றும் துல்யமாயிருந்தாலும் ராஜாவினுடைய முத்திரையிடப்பட்ட பொன்னானது எல்லோராலும் அறியப்பட்டும், அவை இல்லாதவை அறியப்படாமலும் இருக்கிறாப் போலே எல்லா எம்பெருமான்களும் துல்யர்களானாலும் ராஜ முத்திரை போன்ற உபாயத்வோபேயத்வாதிகளைக் கொண்டு ஆழ்வார்களால் மங்களா ஶாஸனம் செய்யப்பட்டபிறகே ஸர்வருக்கும் ஸமாஶ்ரயணீயனாவது, ஆகையால் நீரும் இப்பொழுது நம்மை அப்படியே நிரூபியும் என்று நியமித்தானாயிற்று. இப்படி ஆழ்வார்களுடைய மங்களா ஶாஸனம் பெற்ற பிறகே பகவானுக்கு ஒரு ஏற்றம் உண்டாகிறது என்பதைப் பொதுவில்*

'ஹரிர்ப்பக்தை: ஸம்ஹாவிதோ ஹரி:'

*என்னப்பட்டதை*

'வாஹாவநி க்ஷாமயிமஹ்ஜாதம் வஹம் உமாமாரே மயிமெஹ வதம் நஃ'

*என்று ஆசார்யன் விஶேஷித்து நிரூபித்தருளினார்.* வழக்கமுள்ள முத்திரையாவது *ஸர்வ வேதாந்த வேத்யத்வம், ஶ்ரிய:பதித்வம் முதலியவை.*

இதில் முதல் பாட்டில் அவாந்தர ப்ரளயத்தில் வராஹ நயினா ராய் ஜகதுத்தரணம் பண்ணினவனும் இவனே, மஹா ப்ரளயத்தில் பெரும் கடலில் கண் துயின்றவனும் இவனே, அவன் இடமும் இவ்வஹீந்திரபுரமே என்கிறார். 'இந்நிலம் ¹ 'கூடியிருந்து குளிர்ந்து' என்கிறபடியே தன்னில் இருந்தவர்களுக்குத் தண்ணளி பெறுத்தும் பெருமையுடையதும் மிகவும் தண்ணிதுமாய்த்து, அத்தால் இப்போதாக எடுக்கத் தக்கதும் இதுவேயிறே, இத்தை எடுத்திறே நாம் இவர்களுக்கு ஸத்தை பெறுத்தவேணும்' என்று மான

---

'வர்ணம் தேஜ: ஸர்வதி பவதீ வாசனாக்ஷராஸாக்ஷம்', 'வைசாஞா ஸ்துகவிஞாம் சரஹிசரஸி யத்வாசிவைஹ்ன ஸ்க்ரஞ்ஜி'

என்றிறே முத்திரையிடப்பட்டது. 'செய்யவளுறைதரு திருமார்பன்' என்றிறே இவர் தாமும் மேலே அநுஸந்தித்திருப்பது. கீழில் திருமொழியிலும் 'மலராள் தரணி மங்கை தாமிருவரடி வருடும் தன்மையானை' என்று அநுஸந்தித்ததையே இங்கு இப்படி அருளிச்செய் செய்தாராயிற்று. ஆகையினால் இத்திருமொழியில் பகவானுடைய அஸாதாரண சின்னங்கள் நிரூபிக்கப்படுகின்றன எனஅறியத்தக்கது. அந்த ஆகாரங்கள் நிரூபிக்கப்படும் ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார்— 'இதில்' என்றாரம்பித்து.

கூடியிருந்து - எம்பெருமானுடன் கலந்திருந்து, குளிர்ந்து — ஸம்ஸார தாபங்கள் எல்லாம் தீர்ந்து. 'தன்னில்' இத்யாதி—தான் எடுத்த அவதாரங்களில் தன்னை அநுபவிக்குமவர்களுக்குக் குளிர்த்தியைக் கொடுக்கிறது என்றபடி. தண்ணிதுமாய்த்து — தானே மிகவும் ஶீதளமாயிருக்கும். 'தண்ணார் வேங்கடம்' என்றும்,

'ஸாலமப்வ்ருக்ஷோபாஸள'

என்றும் சொல்லுகிறபடியே ப்ராப்ய பூமியாகையாலே குளிர்ந்திருக்கும் என்றபடி. உத்தேஶ்ய வஸ்து கைபுகுருமிடமிறே ப்ராப்ய பூமியாவது. இப்படித் திருவஹீந்திரபுரமே ப்ராப்யமும் ப்ராபகமுமாய் இருக்கும் என்று நிரூபித்தாராய்த்து. ஸத்தை பெறுத்தவேணும் —

1. திருப்பாவை — 27.

மிலாப் பன்றியாயும் கோல வராஹமொன்ருய் மூன்ரும் மதி போல் வளைந்த தம்ஷ்ட்ராக்ரத்தில் ஒரு மறுவோ இந்நிலம் என்னலாம் படி அந்நிலத்தை அடக்கிக் கொண்டவனுய், தன் உகப்புக்கு ஈடான ஸத்தை பெற்றவரை

1 'ஸ வாநந்த்யாய கல்பதே'

என்றபடி பெரும் தவத்தராக்கி, பெருதாரை லூந பக்ஷாண்டஜங்கள் போல் ஒடுக்கி, அதுக்கு மேலும் அவர்கள் மிக்க தீவினைகளை பெருக்காதபடி லயிப்பித்து,

---

— ஸத்தையை உண்டாக்கவேண்டும். 'ஏனமதாய்' என்கிற இடத்தில் 'அது' என்றது ஸ்ரீ வாராஹாவதாரத்தின் பெருமையையும் வைலக்ஷண்யத்தையும் குறிக்கிறது என்பதை நிரூபித்தருளக் கோவில் அதில் ஈடுபட்ட ஆழ்வார்களின் அநுஸந்தானத்தைக் கொண்டு அருளிச்செய்கிருர்—'மானமிலா' என்ருரம்பித்து. இது ஆண்டாளின் அனுபவம். மானமிலா — ப்ரமாணம் அதாவது அளவு இல்லாத. 'கோல'இத்யாதி-இது நம்மாழ்வாருடைய அனுபவம். கோல - அழகான, வராஹம், ஒன்ருய் — ஒப்பற்றதாய். 'எறி திரை வையம் முற்றும் ஏனத்துருவாய் இடந்த பிரான் இரும் கற்பகம் சேர் வானத்தவர்க்கும் அல்லாதவர்க்கும் மற்றெல்லாயவர்க்கும் ஞானப் பிரானையல்லாலில்லை நான் கண்ட நல்லதுவே' என்றிவை முதலியவைகள் இங்கு அநுஸந்தேயங்கள். மூன்ரும் மதி — மூன்ரும் பிறைச் சந்திரன்.

'உத்ஸாஹயேத்தோ:'

என்னக்கடவதிறே. தன் உகப்புக்கு ஈடான - தான் ஸந்தோஷிப்பதற்குத் தகுதியான. அதாவது

'ஸாதுகாரீ ஸாதுர்ப்பவதி'

என்கிறபடியே நல்ல கர்மங்களைச் செய்தாலிறே எம்பெருமான் ஸந்தோஷிப்பது. ஸ: ச - அவன், ஆநந்த்யாய — அளவில்லாத குணத்தையுடையவனுக, கல்பதே — ஆகிருன். பெரும் தவத்தராக்கி - பெரிய தபஸ்ஸை உடையவர்களாகச்செய்து. பெருதாரை - ஸத்தை பெருதவர்களை, லூந பக்ஷாண்டஜங்கள் — இறகு ஒடிந்த பக்ஷிகள். ஒடுக்கி — அவரவர்கள் கர்மத்திற்கு அநுகுணமாக அடக்கி, அதாவது ஜ்ஞான ஶக்த்யாதிகளின் ஸங்கோசத்தைப்பண்ணி.

1. ஶ்வேதாஶ்வதரம் — 5 — 9.

1 ‘ ஸ ஏகாகீ ந ரமேத ’

என்ற தசை தான் பெற்றவாறே புந:

2 ‘ பஹு ஸ்யாம் ’

என்று ஸங்கல்பித்து,

3 ‘ அப ஏவ ஸஸர்ஜாதௌ ’

என்னப்பட்ட கரும் தண் மா கடலில் கண் துயின்றவனான அவனிடம் திருவயிந்திரபுரமே என்று எங்கும் அந்வயம்.

அவன் இஜ்ஜகத்தில் சிலராகிலும் நாம் உகக்கும்படியான ஸத்தை பெறுவார்களோ ? நம்மை விரும்புவார்களோ ?

4 ‘ ந மாம் துஷ்க்ருதிநோ மூடா: ’

---

‘ நஷ்டஜ்ஞாந: பாபமேவ பராமர்சந்தே நரா: ’ என்கிறபடியே ஸம்யக் ஜ்ஞானம் இல்லாமையினால் மேல் மேல் பாபத்தையே செய்யும்படி நேரிடும் என்றதாயிற்று. ஸ: – அந்தப் பகவான், ஏகாகீ – ஒருவனாகயிருப்பவனைப் போல, ந ரமேத – ஸந்தோஷப்படுகிறதில்லை. அதாவது எப்படித் தனியாக இருப்பவன் ஒரு வித ஸந்தோஷத்தையும் அனுபவிக்க முடியாதோ அதைப் போல நித்ய விபூதியுடன் கூடியிருந்தும் பகவான் இந்த லீலா விபூதியிலுள்ள ஜனங்களுடைய துக்கத்தைப் பார்த்துத் தான் ஒருவனாயிருப்பவனைப் போல ஒரு வித ஸந்தோஷத்தையும் அனுபவிக்கிறதில்லை என்றபடி. பஹுஸ்யாம் – நான் அநேகமாக ஆகக்கடவேன், அதாவது ஸூக்ஷ்ம சேதநாசேதனங்களைத் தனக்கு சரீரமாகவுடைய பகவான் அவைகளை ஸ்தூலங்களாக்குவதற்காக ஸங்கல்பித்துக் கொள்ளுகிறான் என்றபடி. ஆதௌ - முதலில், அப ஏவ - ஜலங்களையே ஸஸர்ஜ - ஸ்ருஷ்டித்தான். என்னப்பட்ட - என்று சொல்லுகிறபடியே முதல் முதலில் ஸ்ருஷ்டிக்கப்பட்ட என்றபடி. இத்தால் பலிதமான அர்த்தத்தை அருளிச்செய்கிறார்—‘ இஜ்ஜகத்தில் ’ என்றாரம்பித்து. இஜ்ஜகத்தில் - இருள் தரு மா ஞாலமாயும் கர்மாவித்யாதிகள் விளையும்படியாயும் இருக்கும் இந்த லோகத்தில். மூடா: - ஜ்ஞானமில்லாதவர்களாய், துஷ்க்ருதிந: — பாபம் செய்தவர்கள், மாம் - என்னை, ந ( ப்ரபத்யந்தே ) அடைகிறதி

1. மஹோபநிஷத் 2. சாந்தோக்யம் - 6 – 2 - 3.
மநு - 1 - 5 – 8. 4. கீதை - 7 – 15.

என்றபடி நெஞ்சில் நொந்தும், ஸ்வ கீதையில் சொன்னபடியராய்த் தன்னை அடைந்தவரில் உகந்தும் இருக்கும் இ ட ம் இவ்விடமாய்த்து. அது கண்டே கச்சியில் அவதரித்த தன் குருவராவதாரத்திலும்

---

ல்லை. 'ஸ்வகீதையில்' இத்யாதி—தான் சொன்ன கீதையில் நிரூபிக்கப்பட்ட ஆகிஞ்சந்ய ஸ்வபாவாதிகளையுடைய பக்தர்களிடத்தில் ப்ரீதிசெய்தும். இவ்விடமேயாய்த்து - இந்தத்திருவஹீந்திரபுரக்ஷேத்திரமாய்த்து இவ்வர்த்தம் இந்த எம்பெருமானுடைய தாஸஸத்யன், அடியவர்க்கு மெய்யன், அச்புதன் என்கிற திருநாமங்களினால் ஸூசிப்பிக்கப்படுகிறது என்று திருவுள்ளம். ஆர்க்கும் கருணை பொழிவதற்காகவன்றோ அயிந்தையில் வந்தமர்ந்தான் என்றதாயிற்று. இவ்வர்த்தம் கிடைத்தபடி எங்ஙனே என்ன அருளிச்செய்கிறார்—' அது கண்டே ' என்றாரம்பித்து. அது கண்டே - இப்படித் தன்னை ஆஶ்ரயித்தவர்களை உகந்திருக்கும் இடம் இத்திருவஹீந்திரபுரமே என்பதை அறிந்தே. குருவராவதாரத்திலும் — ஆசார்ய ஶ்ரேஷ்டராய் அவதரித்தபொழுதும்.

' ஸாக்ஷாந்நாராயணோ தேவ: க்ருத்வா மர்த்யமயீம் தநும் ', ' மக்நாநுத்தரதே லோகாந் காருண்யாச் சாஸ்த்ரபாணிநா ',

' பீதக வாடைப் பிரானார் பிரம குருவாகி வந்து ' என்றிவை முதலியவைகளிற்படியே பகவான் ஆசார்ய ரூபியாய் அவதரிப்பது ப்ரஸித்தமிறே. அப்படிப்பட்ட அவதாரங்களில் ஶ்ரேஷ்டமொன்று

' வேங்கடேஶாவதாரோऽயம் '

' அன்றிவ்வுலகினையாக்கி ... வென்றி புகழ்த் திருவேங்கட நாதனென்னும் குருவாய் ' இத்யாதிகளிற்படியே தூப்புல் குலத்திற்கோர் விளக்காகும்படி எம்பெருமானுடைய ஸாக்ஷாத் அவதாரமாகையினால் நம் தேஶிகாவதாரத்தை குருவராவதாரம் என்று நிரூபித்தபடி. முன் புள்ளோர் நா:

' ஸ்வாத்யாயேநாக்ரதோ நிகமாந் கவிதா தேஶிகேந்த்ர: வேதாந்தாசார்ய: ஸவேஷு ஸஹ்யா மணா: ஸஜ்ஜ ஸ்ஸு ஷித விஸ்வா ஸ்வஸ்த்ருத ஸ்வதேந்த்ரு | ... நாநந்த்ராவாய வமே கதிவநஸி மணா: ஶ்ரீயாஸஸந்தா ஊஷ்டா: || '
தேஶிகோ நிகமாந்தார்ய ... நாஸ்தி நாஸ்தி உஹி

தேவநாயக கருட பஞ்சாஶத்துக்களாலும் அச்யுத ஶதக ஹயக்ரீவ ஸ்துத்யாதிகளாலும் தான் விளங்கப் பெற்ற இடமும் இவ்விடமே யாய்த்து.

---

தவெ ||'

என்றிவை முதலியவைகளில் இவரையே ஆசார்ய ஶ்ரேஷ்டர் என்று உத்கோஷித்தார்கள். எம்பெருமான் தானும் இந்தக் குருவராவதாரம் செய்யும் வரையில் தனக்கே அஸாதாரணமாய் வைத்திருந்த உபயவே தாந்தாசார்யத்வத்தை இவரிடம் ஒப்படைத்தமையினால் இவருடைய அவதாரம் குருவராவதாரம் என்னப்படுகிறதாகவுமாம். தான் விளங்கப் பெற்ற இடமும் - தன்னுடைய ஸ்வரூப ரூப குண விபவாதிகள் யதாவத்தாக ப்ரகாஶிக்கப் பெற்ற இடமும். அதாவது வேதவேதாந்தங்கள் பேசின பெருமையும், பாட்டுக்குரிய பழையவர்களான இன்கவி பாடும் பரம கவிகள் பேசின பெருமையும் போதாதென்று கொண்டு 'இன்று நன்கு வந்து என்னுடனாக்கி என்னால் தன்னை வன் கவி பாடும் என் வைகுந்த நாதனே' என்கிறபடியே நம்மாழ்வார் மூலமாய்த் தன்னைத் தானே பேசிக்கொண்ட பெருமையாலும் த்ருப்தி அடையாமல் இந்த குருவராவதாரத்தில் தானே தன்னை நிரூபித்துக்கொண்ட பிறகே பகவானுடைய குணங்கள் யதாவத்தாக ப்ரதிபாதிக்கப்பட்டவைகளாய்த்து என்றபடி. இப்படி எம்பெருமானே தம்மைக்கொண்டுதன் விஷயமாகப் பாடிக்கொண்டான் என்பது

'விஜ்ஞாணயநு ஶஶ விஶேஷ விதாஶநித்ர ஶஞவக்தீம் ஶிரஶஹிந வாரரயிராஜ | ஸுவ்ரஃ ஸுவ்ரிய ஜ தீவ த வொயநொக்ஷம் வெஸாதெதி வ கவுஹியாநஶவாஸ்யகவம்'

'தாஷெஷதொ ஶஶ ஶநொரய ஸிஷிதாயீ ஷாவொஷா ஸாத்ரு ஐதி யாரய நாஶயெயம்'

இத்யாதிகளில் அருளிச்செய்யப்பட்டது. பகவானுடைய குணாதிகளை வெளியிட்ட ப்ரகாரமும்

'விஜ்ஞாஞி ஶஷ்ரு ஶுஹதெ விஸாயெகநாய | மஂஸிர வாஷணு ஶயரம் ஶஶ யீ ஹுவஞம் ஶ்ரீஷெ தடாகஷிவ ஶீத ஶநாஷுவிஷா ||', 'நிரவயி மணஜாதம் நிதந் நிஷெயாஷஶாஷ்ரும் நரகஶயந ஊக்ஷம் நாகிநாஜெகநாய

வி ந த விஷய வ த்ரம்'

இத்யாதிகளில் அருளிச்செய்யப்பட்டது. ஆழ்வாரும் தாம் வெள்ளமேபுரை நின் புகழ் குடைந்தாடிப்பாடிக்களித்து உகந்துகந்து உள்ள நோய்கள் எல்லாம் துரந்து உய்ந்து போந்தபடியை அருளிச்செய்தாரிறே. எம்பெருமானும் இவருடைய ஸ்தோத்திராதிகளைத் தனக்குப் பெறுப் பேறாக அங்கீகரித்தமையையும் ' இம்மணிக் கோவையுடனேற் கின்றார் எந்தன் இம்மும்மணிக்கோவைமொழி' என்றருளிச்செய்யப்பட்டது. ஆக இப்படிகளால் விளங்கப்பெற்றான் என்றதாயிற்று. அன்றிக்கே ஸ்ரீ பரம பத ஸோபானத்தில் ப்ராப்தி பர்வத்தில் பரமபத நாதனை வர்ணித்திருப்பது அடியவர்க்கு மெய்யனுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தை ஜ்ஞாபகப்படுத்துகிறபடியினால் விளங்கப்பெற்றான் என்றபடியாகவுமாம். இப்படியே ஸ்ரீ ரஹஸ்யாத்ரவளிஹ்ருதயத்தில் 'அபரஸந்த்யை இல்லாதபடி ஒருக்கால்விடிந்த திவஸமாய்...உதயாஸ்தமயங்களும் உபராகமுமன்றிக்கே அநபாய ப்ரபாந்விதனான அபரிச்சின்ன ஆதித்யனென்று அநுஸந்தித்து அவனுடைய நித்யோதயமே தனக்கு நித்யாப்யுதயமாக நிரூபித்துக் கொண்டிருக்க ப்ராப்தம்' என்று அருளிச் செய்ததும் ஸ்ரீவிரோதபரிஹாரத்தில் அடியவர்க்குமெய்யன்விஷயத்தில்

'ஸவாஸ்ரு தா தஃ வாஸா உநவாய ஹாஸாந்திதஃ |
ஸஹ்ரு நமரே நித்ரோ ஊதிதாயஹஸஃ ||'

என்று அநுஸந்தித்ததையே விவரித்தபடி.

' ஹாவெ நாநக்ரு மஹதி '

என்கிறபடியே எப்படித் திருவடிக்கு ராமாவதாரத்தைத் தவிர அவதாராந்தரங்களில் பாவம் செல்லவில்லையோ, அதைப் போல இந்தக் குருவராருக்கும் ஸ்ரீ தேவ நாதனைத் தவிர வேறு ஒரு அர்ச்சாவதாரத்திலும் செல்லவில்லை என்றதாயிற்று. ஆகையினால் இந்த ஆசார்யனுடைய அவதாரத்திற்குப்பிறகே தான் விளங்கப்பெற்றானாகை ஸ்ரீதெய்வ நாயகன் என்னாயிருந்தானாயிற்று என்பது தெரிவிக்கப்பட்டதாகிறது. அதுவுமன்றிக்கே விரக்தாக்ரேஸரரான இவ்வாசார்யனையும் பெண்ணுடை உடுத்தும்படி செய்தது இந்த க்ஷேத்திரத்து எம்பெருமானுகையாலே அதற்கு அனுகுணமான குண விசேஷங்கள் இருக்கிறபடியினால் விளங்கப் பெற்ற என்றபடியாகவுமாம். பக்தியினுடைய பரா காஷ்டையே ஸ்ருங்காரமாகப் பரிணமிக்கும் என்பது ஆழ்வார்களுடைய அனுபவத்தினால் வெளியிடப்பட்டது என்பதை இந்த ஆசார்யன்

‘ பாங்காரீ மாத்ருமோஹாஹ்ருத ஹ்ருதய பத்ம பத்ம
பாதம் ஸாவநீத்வா பத்ம பத்ம ஸஹாயே ப்ரணயிநி
ஸஜ்ஜத: ப்ரேயஸீ பாரதந்த்ர்யே | ஶக்தி: ஶ்ருங்காரபூர்த்ர்யா
பரிணமதி ஶ்வேத ஸௌரபவாஸ ப்ரஹ்மேந்த்ர யோமாஸ்ப்ரா
மந்த்ராவஸ்த்திதிரிஹ விரஹே தேஶிகாஸ்த்ர உப
தா:

என்றருளிச் செய்தார். அப்படிப்பட்ட பக்தியின் மிகுதி இவருக்கு உண்டானது இந்த அடியவர்க்கு மெய்யனிடத்திலேயிறே. இங்கேயிறே இவர் மும்மணிக்கோவை ஸ்ரீ அச்யுத ஶதகம் இவைகளை அநுஸந்தித்துத் தாம் அவனைப் பர்த்தாவாக வரித்தமையை நேர் கொடு நேரே விண்ணப்பம் செய்தருளினது. ஆழ்வாரும் ‘ ஜகதாகாரனுனபடியன்றியே நீ யா ன ப டி யே வந்து சூழ்ந்தாய் ’ என்று அநுஸந்தித்ததும் எம்பெருமான் திவ்ய மங்கள விக்ரஹத்துடனே தோன்றி தம்மை அழைத்துக் கொண்டு போனமையைத் தெரிவிப்பதற்காக. ஜனக ராஜனுடைய திருமகளாய் அவதரித்த பிராட்டியும்

‘ மாம் நயேத்யதி காகுத்ஸ்த: தத்தஸ்ய ஸத்ருஶம் பவேத் ’

என்று பகவானே நேரில் வந்து அழைத்துப் போகவேண்டும் என்றிருந்தாள். ருக்மிணிப் பிராட்டியும்

‘ மாம் ராக்ஷஸேந விதிநோத்வஹ வீர்யஶுல்காம் ’

என்றிருந்தாள். அப்படியே இந்த ஆசார்யரும் இந்தத் தெய்வநாயகன் திறத்தில் தாம் ஏக பத்நீத்வ வ்ரதத்தை அநுஸந்தித்ததற்கு அநுகுணமாக ‘ இருளும் மருளும் தரும் அந்நாள் எழிலாராழி சங்கேந்தி அருளும் தெருளும் தர என்பால் அடியோர் மெய்ய வந்தருளே ’ என்றும், ‘ ஐயனே வந்தன்றஞ்சல் என்றருள் தென் அயிந்தைமா நகரமர்ந்தானே ’ என்றும், ‘ அஞ்சல் அஞ்சல் அஞ்சல் என்றளிக்கவேண்டும் அச்சுதா அடியவர்க்கும் அருளியக்கும் அடியவர்க்கு மெய்யனே ’ என்றும் அநுஸந்தித்தார். அச்யுத ஶதக ஹயக்ரீவ ஸ்துத்யாதிகளாலும் — அடியவர் பால் மெய்யை வைத்துத் தெருள் தர நின்ற தெய்வநாயகனே ஸ்ரீ ஹயக்ரீவ ரூபியாய் இவ்வாசார்யனை அநுக்ரஹித்தருள, அத்தால் உண்டான ஜ்ஞானத்தினால் இந்த ஸ்தோத்ரங்களை அநுஸந்தித்தபடி விவக்ஷிதம். ஆதி பதம் ‘ செந்தமிழ் மும்மணிக்கோ

வை செறியச் சேர்த்துப் பந்து கழலம்மானை ஊசலேசல் பாவு நவமணி மாலை இவையும் சொன்னேன்' என்கிறபடியே மும்மணிக் கோவை முதலிய ப்ரபந்தங்களைக் குறிக்கிறது. அன்றிக்கே 'தான்' என்றது குருவராவதாரத்திலும் என்பதுடன் அந்வயிக்கிறதாகவுமாம். அதாவது எம்பெருமான் ஆசார்ய ஸார்வ பௌமனாகிய ஸ்ரீ தேசிகனாய் அவத ரித்தருளின காலத்தில் விளங்கப் பெற்றது இந்த க்ஷேத்திரமேயாய்த்து என்றர்த்தம்.

'ஸ்வாம் ஸ்துதி வஹயிமநு பௌஹெ ஸதூவாநீ'

என்றும், 'முந்தை மறை மொய்ய வழி மொழி நீ என்று முகுந்தன ருள் தந்த பயன் பெற்றேன் நானே' என்றும் தாமே அநுஸந்திக்கும் படியான அநுக்ரஹ விசேஷங்களைப் பெற்றது இந்த க்ஷேத்திரத்திலே யாய்த்து என்று தாத்பர்யம்.

'ஸ்நுஷா உபாயஸ்ரஹம்'

என்று பிராட்டி தன்னைத் தன் புக்ககத்துப் பெருமையைக் கொண்டு நிரூபித்துக் கொண்டதோ பாதி, பெரிய பிராட்டியார் தன் ஜனனபூமி யை மறந்து பகவானுடைய திருமார்பில் இருக்கச்செய்தே 'அகலகி ல்லேனிறையும்' என்று அநுஸந்திப்பதோபாதி, இவரும் தம்முடைய ஜனன பூமியாகிய காஞ்சியை மறந்து தாம் நாயகனாய் வரித்த ஸ்ரீதெ ய்வ நாயகன் திருவடிவாரத்தில் வஸித்துக்கொண்டு எழுந்தருளியிருக் கும் பொழுதேயிறே 'அஞ்சல் ... அடியவர்க்கு மெய்யனே' இத்யாதியால் அவன் நம்மை அநுக்ரஹிக்கும் காலத்தில் அடியவர்க்கு மெய்யனான ரூபத்துடனே ஸேவை ஸாதிக்க வேண்டுமென ப்ரார்த்தித் தது. தம்முடைய அவதார ப்ரயோஜனத்திற்காக ஸ்ரீரங்காதி க்ஷேத் திரங்களுக்கு எழுந்தருளி ஆங்காங்கு சிர காலம் வஸித்து வந்தாலும் அந்தக் கார்யம் ஆனவாறே இந்த க்ஷேத்திரத்தையிறே அடைந்துநின் றது. அன்றிக்கே இவருடைய

'ஆவாயஸ்ஸஜி ரஸுதூவகாரணயா ஜெவவகஸவூா உாவஸூ', 'அபியிறு ஶாராஹக்ஜீ...தஅஸ்வாஸா ஜிகெவி'

என்றிவை முதலிய நிஷ்கர்ஷங்களின் படியே இவருக்கு பகவானைப் போல ஸகல உபசாரங்கள் நடத்தப்படுவதும், இவருடைய திருமாளி கை திருக் கிணறு முதலியவைகள் பஹுமானிக்கப்பட்டு வருவதும்

' ஶ்ரீகல நதீ தட தமால உஹீந்த்ரநகரௌஷதாசலைக
கஜேந்த்ரம் '

என்றபடிகளாலிறே தன்னால் அவ்விடத்தில் தான் புகழப் பெற்றது.

---

இந்த க்ஷேத்திரத்திலேயாகையினால் இவர் விளங்கப் பெற்ற இடம் இதுவே என்றபடியாகவுமாம். இப்பக்ஷத்தில் தேவநாயகபஞ்சாஶத் இத்யாதிக்கு இந்த ஸ்ரீ ஸூக்திகளை அருளிச்செய்து வேதாந்தார்த்தங்களைப் பரக்க நிரூபித்தபடி விவக்ஷிதமாகக்கடவது. அதுவுமன்றிக்கே ' நாய கவயா நதஜநவஸ்ய ஸவௌஷதேந ஸுவ்ராதமௌஷய ஶ்ரீம் ஸுணஉஞ்சி தேவா: '

' வெவ்வினை தீர் மருந்தொன்று அற்புதமாக அமர்ந்தமை கேட்டு ',
' ஔஷதம் தேதஸா ஸேவ்ய உவாந ஷுந்தவாயிநா: '
இத்யாதிகளில் இவர் தாமே ஸம்ஸாரமாகிற வ்யாதிக்கு எம்பெருமானை வைத்தியனாக நிரூபித்தருளினதோ பாதி, வென்றி புகழ்த்திருவேங்கட நாதனென்னும் குருவாய் நின்று நிகழ்ந்து மண் மேல் நின்ற நோய்கள் தவிர்க்கும்படி தம்முடைய திருக்கைகளாலேயே எறியருளப் பண்ணப்பட்ட தம்முடைய திவ்ய அர்ச்சா விக்ரஹம் ப்ரதிஷ்டிதமாக இருப்பது இந்த க்ஷேத்திரத்திலேயாகையினால் இவர் விளங்கப் பெற்ற இடமும் இவ்விடமே என்றபடியாகவுமாம். இப்படி இந்த க்ஷேத்திரத்தின் பெருமையை நிரூபித்து, இங்கு எம்பெருமான் விளங்கும்படியை உதாஹரணத்துடன் அருளிச்செய்கிறார்—' கருட ' என்றாரம்பித்து.

கருடநதீ தட தமாலம் — கருட நதிக்கரையில் இருக்கிற பச்சை மரம் போன்றவனும், அஹீந்த்ர நகரௌஷதாசலைக கஜேந்த்ரம் - திருவஹீந்திர புர க்ஷேத்திரத்திலுள்ள ஔஷதாத்ரியில் இருக்கும் ஒப்பற்ற கஜேந்திரனுமான பகவானை. இது ஸ்ரீ அச்யுத ஶதக முதல் ஶ்லோகம். கருட நதிக்கரையில் இருப்பதாக நிரூபித்ததினாலே அந்த நதி எப்பொழுதும் வற்றாத சுத்த ஜலத்தையுடையதாகையினாலே அதின் ஓரத்தில் இருக்கும் பகவானும் மிகவும் ஶீதளமான மனதையுடையவன் என்பது த்யோதிதம். அன்றிக்கே அதின் கரையிலுள்ள தமால வ்ருக்ஷம் போலே கண்களுக்கு ஆநந்தத்தைக் கொடுக்கக் கூடியவன் என்றதாகவுமாம். ' கதிர் மதியம் போல் முகத்தான் ' இத்யாதி ப்ரயோகங்களிலே ஸூர்யனும் சேர்த்துச் சொல்லப்பட்டதினால் அவனுடைய

'கமலம்' இத்யாதியால் அப்ரஸ்துத ப்ரஶம்ஸையும் ப்ரஸ்துதாஶ்ரயமாகையாலே நல்ல கமலம் இவன் திருவடியாய், இவன் கல்யாண குணங்களே நல்ல தேனாய், அத்தை உண்டு, அவனில் ந்யஸ்தபர பரமைகாந்திகள் இங்கிருந்த நாள் இனிய பாட்டுக்களைத்

---

வெப்பம் தட்டியிருக்குமோ என்கிற ஸந்தேஹம் உண்டாகலாம், அது இங்கு இல்லை என்றதாயிற்று. இப்படி ஸம்ஸார தாபத்தைப் போக்குமவன் என்றதினால் ப்ராபகத்வம் ஸூசிப்பிக்கப்பட்டதாகிறது. 'ஏக கஜேந்திரம்' என்றது பார்க்கப் பார்க்கப் புதிதாகத் தோன்றுகிறபடியைக் காட்டுகிறது.

'ஸஹ ஸாரஸிஜவாஸா'

என்கிறபடியே லக்ஷ்மீ பூமி முதலியவர்களுடன் சேர்ந்து விளையாடின போதிலும் பகவானே ப்ரதானமாயிருப்பதினால் ஏக பதம் ப்ரயோகிக்கப்பட்டது. இத்தால் ப்ராபகத்வம் ஸூசிதம். இப்படிப்பட்டவன் இருக்கும் இடம் திருநாடோ திருப்பாற்கடலோ என்னில், அல்ல அது இத்திருவஹீந்திரபுரம் என்கிறாராய்த்து.

இப்படி இந்த க்ஷேத்திரத்திற்கு ஆசார்ய ஸார்வபௌமனுடைய அங்கீகாரத்தினால் ஸூசிப்பிக்கப்பட்ட ஏற்றத்தை நிரூபித்து, மேலே பாட்டுக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'கமலம்' என்றாரம்பித்து. அதில் முற்பட ஸ்வாபதேஶார்த்தத்தை அருளிச்செய்து பிறகு அந்யாபதேஶார்த்தத்தை நிரூபிக்கிறார். அப்ரஸ்துத ப்ரஶம்ஸை – ப்ரஸ்தாவிக்கப்படாததை ஸ்தோத்திரம் செய்வது. பரமைகாந்திகள் என்றது

'ஜ்ஞாநீ து பரமைகாந்தீ ததாயத்தாத்ம ஜீவந: |
தத்ஸம்ஶ்லேஷ வியோகைக ஸுக து:க ஸ்ததேகதீ: ||'

என்கிறபடியே பகவானுக்கு வசப்பட்ட தன்னுடைய ஜீவனத்தையுடையவனும், அவனோடு சேருவது பிரிவது இவைகளையே தனக்கு ஸுகமாகவும் துக்கமாகவும் உடையவனும், அவனொருவனிடத்திலேயே செலுத்தப்பட்ட பக்தியையுடையவனும் இருப்பவன். இப்படிப்பட்டவனே தேவதாந்தர ப்ரயோஜனாந்தர ஸம்பந்த ரஹிதனாய் நிற்குமவன். 'இனிய பாட்டுக்களை' என்றது 'இன் கவிபாடும் பரமகவி

தாங்கள் ஒரு குழாம் கொண்டு இவனையே உத்கோஷித்துப் பாடி, 1 'பெய்த காவு கண்டீர்' என்றபடியேயான அடியார்கள் குழாங்களை உடன் கூடுவது என்றுகோலோ என்கிற ப்ராப்யத்வரையால் உத்க்ரமிக்குமவரே எழும் அளி குலமாய், போதுளிகை செறிவாய், செறிந்த அழகிய பொழில் அங்குள்ளவர்களாய், அத்தோடே நெரு

---

களால்', 'செவிக்கினிய செஞ்சொல்' இத்யாதிகளில் கொண்டாடப் பட்ட ஏற்றத்தையுடையதாய் பொய்கை முனி முதலானோர் மகிழ்ந்து பாடின நம் பண்ணமரும் தமிழ் வேதங்களை. 'இன்னிசை மாலைகள்' 'திருவாய்மொழியி னின்னிசை' இத்யாதிகள் அனுஸந்தேயங்கள். குழாம் கொண்டு - கூட்டம் கூட்டமாய்ச் சேர்ந்து. 'குழாங்களாய் அடியீருடன் கூடி நின்றாடுமினே' என்றிறே ஆழ்வார் ப்ரார்த்தித்தது. பெய்த — வைத்து வளர்த்த, காவு கண்டீர் — உத்யானம் கிடீர், அதாவது இந்த லோகத்தைப் பகவான் தன்னுடைய உத்யான வனத்தைப் போலப் பாவிக்கிறான் என்றபடி. அடியார்கள் குழாங்களை — பக்தர்களுடைய கூட்டங்களை, உடன் கூடுவது — ஸமமான போகத்தையுடையவனாய்க் கொண்டு சேர்வது, என்று கோலோ — எந்த நாளோ. இத்தால் அவர்களோடு ஒன்று சேருவதே பரம ப்ரயோஜனம் என்பது ஸூசிதம். இப்படி இங்கிருந்த நாள் ஸ்வயம் ப்ரயோஜனமான கைங்கர்யத்தைச் செய்ததே காரணமாக இத்தைக் கால தேசாதிகளினால் ஸங்கோசமில்லாதபடி குறைவறவனுபவம் செய்ய வேண்டும் என்கிற த்வரை அதிகரித்தமை தெரிவிக்கப்பட்டதாகிறது. எழும் அளி குலமாய் — எழும் அளி குலம் என்னும் பதத்தினால் சொல்லப்பட்டவர்களாய். செறிவு - நெருங்கி இருக்கை. 'அத்தோடே' இத்யாதியால் 'மலி புகழ் வானவர்க்காவர் நற்கோவையே' என்று நித்ய முக்தபரிஷத்துக்களுக்கு நாயக ரத்னமாவர்கள் என்று அருளிச்செய்யப்பட்டதும்,

'உரஜ தீவ்ரஹக்தி நயனா: ஸுவிஸ்மய்ஞோஸ்ஹீந ஸாரஸ நாய க்வா | ஸூர்வா ஸ்வ ஸாயுஜ்ஜம் ஸக்தி ஸமீர்ய ஞிவஞமெந உவா நா ||'

1. திருவாய்மொழி - 6 - 3 - 5,

ங்கச் சேருமதே இவர்களுக்கு ப்ரதமோத்தேஶ்யமாய், அங்கு வீற்றிருக்கும் அவனுடைய துயரறு சுடரடிகளாகிய நாண் மலர் கிட்டச் சென்று, அவனால் பரிஷ்வங்கிக்கப்பட்டு, அவனைத் தாங்கள் பரிஷ்வங்கித்து,

1 ' ஸ தத்ர பர்யேதி ', 2 ' யத்ர யத்ர '

---

என்று ஸ்ரீ அச்யுத ஶதகத்தில் நிரூபிக்கப்பட்டதும் விவக்ஷிதமாகின்றன. அதாவது ஆதிஶேஷன் முதலிய நித்ய ஸூரிகளினுடைய திரளுக்கு நாயகரத்னம்போன்றவர்களாயிறே அடியவர்க்குமெய்யனுடைய திருவடிகளில் பக்திசெய்யுமவர்கள் இருப்பது. ஸ்ரீ பரம பத ஸோபானத்தில் ' அழகோலக்கத்தின் நடுவே சென்று ' இத்யாதி அருளிச்செய்யப்பட்டிருப்பதும் இங்கு அனுஸந்தேயம். ' சேருந்தி ' என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—' நெருங்க ' என்றாரம்பித்து. ' நாண் மலர் ' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—' அங்கு ' என்றாரம்பித்து. துயர் - ஆஶ்ரிதர்களினுடைய எல்லாத் துக்கங்களையும், அறு - போக்கடிக்கிற, சுடர் - தேஜஸ்ஸுடன் கூடிய, அடிகளாகிய — திருவடிகளாகிற. ' அணைந்து ' என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—' அவனால் ' என்றாரம்பித்து. பரிஷ்வங்கிக்கப்பட்டு - ஆலிங்கனம் செய்யப்பட்டு. பரிஷ்வங்கித்து — ஆலிங்கனம் செய்து. ' உழிதரு ' என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—' ஸ தத்ர ' இத்யாதியால். ஸ: — அவன், தத்ர - அந்தப் பரமாத்மாவினிடத்தில், பர்யேதி — சூழ்ந்து கொண்டிருக்கிறான். ' பல்லாண்டும் பரமாத்மனைச் சூழ்ந்திருந்தேத்துவர் பல்லாண்டே ' என்னக்கடவதிறே. சூழ்ந்து - பகவானைச் சுற்றிலும் எல்லாப் பக்கங்களிலும் நின்று, அதாவது பகவானுடைய ஒரு அவயவ ஶோபையை அனுபவித்து, மற்றொரு அவயவத்தை அனுபவிக்கவேண்டும் என்கிற ஆசையினால் அதை அனுபவிப்பதற்காகச் சுற்றி வந்து, இருந்து - ப்ரத்யங்க பூர்ண ஸௌஷ்டவ ஸௌபகமான ஒவ்வொரு அவயவத்தையும் அனுபவித்துக் கொண்டிருக்கிறவர்கள் அதில் போதும் என்கிற த்ருப்தி இல்லாமையாலே நின்ற இடத்திலேயே ஸ்திர ப்ரதிஷ்டிதராய் நின்று அந்த ஒரு அவயவத்தின் ஶோபையையே அனுபவித்துக் கொண்டிருந்து. அன்றிக்கே சூழ்ந்திருந்து - விஷ்வக்ஸேநாதி பரிஜனங்கள் மற்ற எல்லா ஸூரிகளும் இப்ப

1. சாந்தோக்யம் — 8 - 12 - 3. 2.

என்றபடி அவனுடனே ஸஞ்சரிக்கப் பெறுவர்கள் என்று அவ்வி டத்திலும் அவனிலும் அவனில் ந்யஸ்த பரரிலும் ப்ரபாவத்தை அந் யாபதேஶத்தாலே அறிவிக்கிறாராய்த்து. இது இப்பாட்டுக்களிலெல்

டியே ஸமீபத்தில் சென்று ஸேவிப்பதற்காக இடம் விடும்படி நிர்ப்பந் தித்தாலும் ஒரு பக்கத்தில் சொல்லும்பொழுது அங்கு இடம் விடுவ தாகக் காண்பித்து மற்றொரு பக்கம் சென்று, அங்கு சொல்லும்பொ ழுது மற்றொரு இடத்திற்குச் சென்று, இப்படியே பகவானைச் சூழ்ந்து கொண்டிருந்து என்றாகவுமாம். அதுவுமன்றிக்கே எம்பெருமானைச் சுற்றிக் கோஷ்டியாக நின்று கொண்டு என்றாகவுமாம். யேநயேந—எந்த எந்த வழியாய் (பகவான் செல்லுகிறானோ அவ்வழியேபோய்) அதாவது ஸர்வ கர்ம விநிர்முக்தர்களாகையினாலே கர்ம க்ருதமாக இந்த லோகத் தில் அவதரிக்க வேண்டியதில்லையேயாகிலும் ஸர்வேஶ்வரன் ஸாதுபரித் ராணாதிகளுக்காக இருள் தருமா ஞாலத்தில் திருவவதாரம் செய்தரு ளும்பொழுது அவனுடைய ஸௌலப்யாதி குணங்களை அனுபவிப்பதற் காகத் தாங்களும் அவதரிக்கிறார்கள் என்றபடி. ஸ்ரீ பரமபத ஸோபா னத்தில் 'ஶேஷி போம் வழியெல்லாம் அனுதாவனம்பண்ணி, இருள் தருமா ஞாலத்துள் ஈஶ்வரன் அவதரிக்கும்போது ஜ்ஞான ஸங்கோசா திகள் பிறவாதபடி அவன் தன்னைப் போலே வந்து போயும், ஶ்ருதி ஸாபக ஸாம காநாதிகளைப் பண்ணிச் சூழ்ந்திருந்து பல்லாண்டேத்தி யும்' என்று அருளிச்செய்யப்பட்டதிறே.

'ஒயாரவிகூாவ ஹ ஹ கூாதணா யணீகூ'

என்றதும் இங்கு அனுஸந்தேயம். அவ்விடத்திலும் — திருவஹீந்திர புர க்ஷேத்திரத்திலும், அவனிலும் — அங்கு அர்ச்சாவதாரம் கொண்டு எழுந்தருளியிருக்கும் அடியவர்க்கு மெய்யனிலும், அவனில் ந்யஸ்தபர ரிலும் — அவனிடத்தில் செய்யப்பட்ட பரந்யாஸத்தையுடைய பாகவ தோத்தமரிலும். அந்யாபதேஶத்தாலே - நேரில் சொல்லாமல் வேறு ஒன்றைச் சொல்லி அதின் மூலமாக. ப்ருஹத்ப்ரும்ம ஸம்ஹிதையில்

'உஹா ஹா மவதா யகூ நிவஸாஷி உஹீதவெ |
யநூா வெயம் உஷீ ஈாஜநு யஶா உாதரி ஈாஜநி ||
வஎகாஷஹாவொவமதாঃ யெந யாஜொ ஈஉாவதிி |
உஈக்ஷீஆாஈஷிஃ ஜாதஉஷூாகஷிதி வாஷிநঃ ||

லாம் கூடின இடத்தில் ஊஹிக்கக்கடவது. ‘செருந்தி’ என்றது ஏக

---

ஸஹிஷ்யதி தஸ்ய ஸர்வம் ஷட்பதா: பாந்தவம் யதா ||

என்று சொல்லப்பட்டது. இங்கு மஹா பாகவதர்கள் என்றது ஸ்ரீ தேசிகன் போல்வாரை. இப்படிப்பட்ட தேச விசேஷமே ப்ரபன்னர்கள் வஸிப்பதற்கு உசிதமான ஸ்தானம் என்பது ஸ்தான விசேஷாதிகாரத்தில்

‘ பூர்வே யத்ர ஸஜ்ஜநே ஸாத்யா: ஸந்தி தேவா: | ஸர்வம் தத்ர யோகிந: ’

என்றருளிச்செய்யப்பட்டதிறே. ‘ வானவர் வானவர் கோனொடும் சிந்து பூ மகிழும் திருவேங்கடத்து ’, ‘ வானவர்கள் சந்தி செய்ய நின்றான் அரங்கத்தரவினணையான் ’, ‘ கால் நிலம் தோய்ந்து விண்ணோர் தொழும் கண்ணன் வெஃகாவுது ’, ‘ விண்ணவரும் மண்ணவரும் விரும்பும் வெற்பு ’,

‘ தத்ராபி ஜலை: ஸாகரைச்ச ஸம்ருத்திமாவதீ ஜநை: ’

இத்யாதிகளை அனுஸரித்து வேறு விதமாக யோஜிப்பாருமுண்டு. எங்ஙனே என்னில்:—கமல நன் மலர் என்றது திவ்ய பத்மமாய், அதின் தேறல் என்றது அதில் வீற்றிருக்கும் பரம பத நாதனாய், அருந்தி என்றது அவனைப் பரிபூர்ணமாக அனுபவிப்பதாய், இன்னிசை இத்யாதி

‘ விசித்ரைர் ஜாஹ்நவாதீம் ஸம்மோஹிதே ’, ‘ ஸாமகாயந்நாஸ்தே ’

இத்யாதிகளிற்படியே அனுபவ பரீவாஹமாய் ஸ்துதி கானம் செய்யும் ஸூரிகளாய், போதுளி என்றது ஒன்று சேருவதாய், அம்பொழிலூடே என்றது இந்த லீலா விபூதியின் மத்தியிலுள்ள நடு நாட்டுத் திருப்பதியான திருவஹீந்திர புர க்ஷேத்திரமாய், செருந்தி இத்யாதி செருந்தி மரத்தினுடைய அப்பொழுது மலர்ந்த புஷ்பமாய், சென்று அணைந்து இத்யாதி அர்ச்சா விக்ரஹத்தில் பரம பத நாதனைக் காட்டிலும் விஞ்சின வௌலப்யாதிகளைக் கண்டு ஈடுபடுவதுமாய் ஆகக்கடவது. இப்படிப் பாட்டுக்கு ஸ்வாபதேசார்த்தம் கிடைக்கும் ப்ரகாரத்தைக் அருளிச்செய்கிறார்—‘ இது ’ என்றாரம்பித்து. கூடின -

ரஸமாகச்சேருகையுமாய், 'செருந்தி ஞாணல் மகிழ் புன்னை' என்றஇடத்தில் போலே ஒரு வ்ருக்ஷ விசேஷமுமாம். தேறல் - தேன், அருந்தல் - உண்டல். பொதுளி - செறிவு.

'கமலம்' இத்யாதி—ஆக நல்ல கமல மலர்களில் அளிகுலமானது நல்ல தேன்களை உண்டு, இனிய இசைகளைப் பாடிக் கொண்டு, ஜங்கரித்துக்கொண்டு எழுந்ததாய், செறிந்த பொழிலுக்கு உட்பட்டே செருந்தியைச் சென்றதாய், அதின் ஸத்யோ விகஸித குஸுமங்களில் விஶ்ரமித்து, அழகாக ஸ்வைரம் ஸஞ்சரிக்குமாய்த்து. ஏவம் பூத ஐஹிக ஆமுஷ்மிக ஸ்ரீயையுடைய அயிந்திரபுரமே கடல் கண் துயின்றவனிடம் என்கிறார். 1

*மின்னும் ஆழியங்கையவன்*
*செய்யவளுறை தரு திரு மார்பன்*

---

*இடத்தில் — ஸம்பவிக்கும் இடங்களில். ஊஹிக்கக்கடவது — ஸ்வாபதேஶ அந்யாபதேஶங்களை ஊஹித்து அறிந்து கொள்ளுவது. ஏகரஸமாகச்சேருகை — ஒரே விதமான ஆநந்தத்தை உடையவர்களாகச் சேர்ந்திருக்கை. அர்த்தாந்தரம் அருளிச்செய்கிறார்—' செருந்தி ' என்றாரம்பித்து. இப்படிக் கீழ் ஸ்வாபதேஶார்த்தத்தை அருளிச்செய்து அந்யாபதேஶார்த்தத்தை நிரூபித்தருளுகிறார் —' கமலம் ' என்றாரம்பித்து. நல் என்பதைக் காகாக்ஷி ந்யாயேன கமல என்பதுடனும் தேறல் என்பதுடனும் அந்வயித்து அர்த்தம் அருளிச்செய்கிறார்—' ஆக ' என்றாரம்பித்து. ' அம்பொழிலூடே ' என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—' செறிந்த ' என்றாரம்பித்து. ' செருந்தி ' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்— ' செருந்தியை ' என்றாரம்பித்து. ' திரு ' என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—' ஏவம் பூத ' என்றாரம்பித்து. ஐஹிக — இந்த லோகத்தில் உண்டாகுமது. ஆமுஷ்மிக — பரலோகத்தில் உண்டாகுமது, அதாவது இங்கு உபாயமாய் அங்கு உபேயமாய் இருக்கும் பெருமையையுடைய என்றபடி.* 1

பன்னு நான் மறைப் பல் பொருளாகிய
　பரனிடம் வரைச்சாரல்
பின்னு மாதவிப் பந்தலில்
　பெடை வரப் பிணியவிழ் கமலத்து
தென்னவென்று வண்டு இன்னிசை
　முரல் தரு திருவயிந்திரபுரமே. 2

ப — ரை. ] மின்னும் - ப்ரகாஶித்துக் கொண்டிருக்கிற, ஆழி — சக்ரத்தை ஏந்திக்கொண்டிருக்கும், அம் — அழகிய, கையவன் - திருக் கையையுடையவனாய், செய்யவள் — பெரிய பிராட்டியார், உறைதரு — வஸிக்கிற, திருமார்பன் - அவளுக்கும் திருவைக் கொடுக்கக் கூடிய மார்பையுடையவன், பன்னு — எப்பொழுதும் அப்யஸிக்கப்படுகிற, நான் மறை - நான்கு வேதங்களுக்கும், அன்றிக்கே பன்னு - விஸ்தாரமான, நான் மறை — நான்கு வேதங்களினாலும் சொல்லப்படுகிற, பல் — பல் வகைப்பட்ட, பொருளாகிய - வஸ்துக்களாகிய, அதாவது அவைகளுக்கு அந்தர்யாமியாகையால் ஸர்வ வேத ப்ரதிபாத்யனாய் இருக்கிற, பரன் இடம் — ஸர்வோத்க்ருஷ்டனான பகவான் வஸிக்கும் இடம், வரை — பர்வதத்தினுடைய, சாரல் — தாழ்வரையில், பின்னு — பின்னிக் கொண்டிருக்கிற, மாதவிப் பந்தலில் - மாதவிக்கொடிகளினால் நிறைந்த பந்தலில் இருக்கும், பெடை - பெண் வண்டானது, வர - தன்னருகே வருவதற்காக, பிணி அவிழ் - மலர்ந்த, கமலத்து — தாமரைப் புஷ்பத்தில் இருக்கிற, வண்டு — ஆண் வண்டு, தென்ன என்று — தென்னு என்று, இன் — இனிய, இசை - கானத்தை, முரல் தரு — ஶப்திக்கிற, திருவயிந்திரபுரமே. 2

கீழ் அவனுக்குக் காரணத்வ க்ருத உபாயத்வ ப்ராப்யத்வங்களை முன் பின்னடிகளால் ஆர்த்தமாயும் அங்யாபதேஶத்தாலும் அறிவித்

---

காரணத்வக்ருத - காரணத்வத்தினால் உண்டாக்கப்பட்ட. முன் பின்னடிகளால் — முதல் அடியாலும் இரண்டாம் அடியாலும். ஆர்த்தமாயும் — காரணத்வத்தையும் அதற்கு அநுகூலமான ரக்ஷகத்வத்தையும் அருளிச்செய்தபடியினால் உபாயத்வ ப்ராப்யத்வங்கள் அர்த்தாத் ஸித்தங்கள் என்றபடி. நாலு அடிகளாலும் அங்யாபதேஶத்

தார். இதில் ஆகார த்ரயவல் லக்ஷ்மீ விஶிஷ்டத்வாதிகளாலே பரம போக்யத்வ ஸர்வ ஶரீரித்வ ஸர்வ வேத ப்ரதிபாத்யத்வ பரமரஸிகத்வங்களால் பராத் பரத்வத்தை ப்ரதிபாதிக்கிறார். தான் ஏந்தும் திருவாழியும் அத்யுஜ்வலமாம்படி அழகிய கையவனும் இவனே. தன் மார்பில் இருக்கும் திரு தானும் ஓர் அழகிய சிவப்புப் பெற்றவளாய் அத்தால் அவனை இனிமைப் படுத்து முரசுதலைப் பெற்ற

---

*தால் உபாயத்வம் ஸூசிப்பிக்கப்பட்டதிறே.* ஆகாரத்ரயவதி — *உபாயத்வ உபேயத்வ புருஷகாரத்வங்களாகிற மூன்று ஆகாரங்களையுடைய,* லக்ஷ்மீ விஶிஷ்டத்வாதிகளாலே — *லக்ஷ்மியுடன் சேர்ந்திருக்கை முதலியவைகளாலே.* பரம போக்யத்வ — *மிகவும் போக்யனாக இருக்கை.* ஸர்வ ஶரீரித்வ — *எல்லா வஸ்துக்களுக்கும் அந்தர்யாமியாயிருக்கை.* ஸர்வ வேத ப்ரதிபாத்யத்வ - *எல்லா வேதங்களாலும் ப்ரதிபாதிக்கப்பட்டவனாயிருக்கை.* பரம ரஸிகத்வ — *மிகவும் ரஸானுபவம் பண்ணக்கூடியவனாயிருக்கை.* ' மின்னும் ஆழி ' *என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்* —' தான் ஏந்தும் ' *என்றாரம்பித்து. ஸ்வயமே மிகுந்த ப்ரகாஶத்தையுடைய திருவாழியும் பகவானுடைய திருக்கையின் ஸம்பந்தத்தினால் இன்னம் அதிகமாய் மின்னா நிற்கிறது என்று தாத்பர்யம்.*

*' நீலாவலோஷித நிஶாகர ஹாவஸ்ராஹெ ஶாஙாலிஹெ ஸாரவதெ தவ ஶஜவகெ ', ' ஹலேஷாயாேயெ ரயிதம் நிஜகாஙிஹெதொ: '*

*இத்யாதிகள் இங்கு அனுஸந்தேயங்கள்.* ' அம் கையவன் ' *என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்* —' அழகிய ' *என்றாரம்பித்து.* ' செய்யவள் ' *இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்*—' தன் ' *என்றாரம்பித்து.* ' திரு தானும் ' *என்றது ஸ்வயமே ஸர்வ ஸௌந்தர்யாதி குணங்கள் நிறைந்தவளாய், தன்னுடைய ஸம்பந்தத்தினால் மற்றவர்களுக்கும் ஒரு ஏற்றத்தைக் கொடுக்கக்கூடிய லக்ஷ்மியும் என்றபடி. இப்படி ' உன் திரு ' என்றும், ' திருவுக்கும் திருவாகிய செல்வா ' என்றும் சொல்லுகிறபடியே பரஸ்பராதிஶயாவஹமாயிருக்கும் இம்மிதுனத்தின் வைலக்ஷண்யம் தெரிவிக்கப்பட்டதாகிறது.* இனிமைப்படுத்து — *ஸந்தோஷப்படுத்தும். அதாவது*

வளாக்கும் அழகிய மார்பு படைத்தவனும் இவனே. பல் வகைப் பட்டும் பரந்துமுள்ள வேத சதுஷ்டய வேத்ய ஸர்வ ஶரீரகனாய் அத்தாலும் ஸர்வஸ்மாத் பரனும் இவனே. இம் மூன்றும் இவனில் தன்னேற்றமாய்த் துளங்கவில்லையோ? வாழ வல்லவர்காள் பாருங்கோள் என்றபடி. காள மேகத்தில் சுழி மின்னலும் கொடி மின்னலும் போலவிறே இவனில் அவ்வாழியும் அவளும் விளங்குவது.

---

‘ 𑌅𑌪𑍂𑌰𑍍𑌵 𑌨𑌾𑌨𑌾 𑌰𑌸 𑌭𑌾𑌵 𑌨𑌿𑌰𑍍𑌭𑌰 𑌪𑍍𑌰𑌬𑌦𑍍𑌧𑌯𑌾
𑌮𑍁𑌗𑍍𑌧 𑌵𑌿𑌦𑌗𑍍𑌧 𑌲𑍀𑌲𑌯𑌾 । 𑌕𑍍𑌷𑌣𑌾𑌣𑍁𑌵𑌤𑍍 𑌕𑍍𑌷𑌿𑌪𑍍𑌤𑌪𑌰𑌾𑌦𑌿𑌕𑌾
𑌲𑌯𑌾 𑌪𑍍𑌰𑌹𑌰𑍍𑌷𑌯𑌨𑍍𑌤𑌂 𑌮𑌹𑌿𑌷𑍀𑌂 𑌮𑌹𑌾𑌭𑍁𑌜𑌮𑍍 ॥ ’

( புதிதாயிருக்கிற அனேகம் விதங்களான ஶ்ருங்காராதி ரஸங்கள், அவைகளுக்குத் தகுந்த பாவங்கள் இவைகளினால் நிறைந்திருக்கும் படி வ்ருத்தியடைந்து கொண்டு வருகிற ஸம்பந்தத்தின் பரமாணுவைப் போலப் போக்கடிக்கப்பட்ட ப்ரும்மாவின் ஆயுஸ்ஸு முதலிய காலங்களை உடைத்தாயிருக்கிற மூடர்களினுடையவும் ஸமர்த்தர்களினுடையதாகவும் இருக்கிற விளையாட்டினால் ப்ரதான மஹிஷியான லக்ஷ்மியை ஸந்தோஷப்படுத்துகிற மஹா புஜத்தையுடைய பகவானை ) என்னப்பட்டதிறே. இந்த இனிமையினுடைய ஆதிக்யத்தினாலேயிறே பிராட்டியும் தன்னுடைய ஜனன பவனத்தையும் மறந்து நிற்கிறாள். ‘ பன்னு ’ இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—‘ பல் வகைப் பட்டும் ’ என்றாரம்பித்து. ‘ பல் வகைப்பட்டும் ’ என்பது மேலே ‘ வே த ’ என்பதுடன் அந்வயிக்கிறது. இந்த ஆகாரங்கள் எல்லாம் இவனுடைய வடிவில் தொடை கொள்ளலாம்படி ஸர்வானுபாவ்யமாய் நிற்கிற நிலையைத் திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார்—‘ இம்மூன்றும் ’ என்றாரம்பித்து. ஸர்வஸ்மாத் பரத்வமும் இவனுடைய வடிவில் ப்ரகாஶமாய்த் தோன்றும்படியும்

‘ 𑌦𑍇𑌵𑍇𑌶𑍍𑌵𑌰𑌚𑌵𑌿𑌹 𑌉𑌪𑌾𑌸𑍍𑌯𑌿𑌤𑌂 𑌕𑍍𑌷𑌮𑌵𑍇𑌤𑍍 ’

என்று அருளிச்செய்யப்பட்டதிறே. காளமேகத்தில் – கறுத்த மேகத்தில். சுழி மின்னல் – வட்டமான ஆகாரத்தையுடைய மின்னல் கொடி மின்னல் – கொடியைப் போல் நீண்டிருக்கும் மின்னல். ‘ விளங்குவது ’ என்றது ஒரு கறுத்த மேகத்தில் இரண்டு விதமான மின்னல்கள் தோன்றினால் அது எப்படி ப்ரகாஶிக்குமோ அதைப் போல

இவ்விடத்திலுள்ள வண்டுகளும் தன் பேடைகளை யாஜ்ஞவல்க்யர் மைத்ரேயியை அழைத்தாப் போலே அழையா நின்றதே. இவ்வி

---

ஸர்வேஶ்வரனை காள மேகத்தில் லக்ஷ்மியாகிய மின்னலும் திருவாழியாகிற மின்னலும் ப்ரகாஶிக்கின்றன என்றபடி. 'காரார்ந்த வானமரும் மின்னிமைக்கும் வண் தாமரை நெடுங்கண் தேனமரும் பூமேல் திரு', 'மணிவரையன்ன நின் திருவுருவில்அணி அமராகம் அலங்கலாயிலங்கி' இத்யாதிகளை இங்கு அனுஸந்திக்கவும். மேல் இரண்டு அடிகளில் ப்ரதிபாதிக்கப்படும் ஸ்வாபதேஶார்த்தத்தை த்ருஷ்டாந்தமுகேந ஸூசிப்பித்துக்கொண்டு அவதரிப்பிக்கிறார்—'இவ்விடத்திலுள்ள' இத்யாதியால். 'யாஜ்ஞவல்க்யர்' இத்யாதி—யாஜ்ஞவல்க்யர் என்னும் ஒரு மஹர்ஷி தன்னுடைய பார்யைகள் இருவர்களில் ஒருவளாகிய மைத்ரேயியைக் கூப்பிட்டாப் போலே. அதாவது தான் ஸந்யாஸம்செய்துகொண்டு வெளியே போகப் போகிறபடியினால் அவளுக்கு வேண்டிய வஸ்த்தைக் கேட்டுக் கொள்ளுவதற்காகக்கூப்பிட, அவளும் மோக்ஷத்தை அடைவதற்கு ஸாதனமல்லாத தனம் முதலியவைகளினால் ஒரு ப்ரயோஜனமுமில்லை என்பதை அறிந்து, 'மோக்ஷத்திற்காகத் தேவரீர் எதை உபாஸிக்கிறீரோ அதை எனக்கும் உபதேஶியும்' என்றுகேட்க, அவரும் அவளுக்கு ப்ரும்மத்தை உபதேஶித்தார்என்று உபநிஷத்தில் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. அந்த வ்ருத்தாந்தம் இங்கு ப்ரஸ்தாவிக்கப் பட்டிருப்பதினால் அதுவே ஸ்வாபதேஶார்த்தம் என்பதும் வண்டுகளைப் பற்றிச் சொல்லியிருப்பது அந்யாபதேஶார்த்தம் என்பதும் த்யோதிதமாகிறது. ஸ்வாபதேஶத்தில் 'பின்னும்' என்றது ஒன்றுக்கொன்று பின்னிக்கொண்டிருக்கிற என்றபடி. 'செடியார் வினைகள்' என்றும், 'கொடு வினை தூற்றில்' என்றும் சொல்லுகிறபடியே ஆரம்பம் எங்கே இருக்கிறது என்று அறிய முடியாமல் பின்னிக்கொண்டிருக்கிற கர்மங்களின் பலனாக உண்டாக்கப்பட்ட ஶரீரம். பேடை — அதில் வஸித்துக் கொண்டு அத்தால் உண்டாகும் ஸுக துக்கங்களை அனுபவிப்பவனாய் பரம புருஷனுக்கு ஶேஷ பூதமான ஜீவாத்மா. வர — தன்னிடத்தில் வந்து உபஸத்தி பண்ணுவதற்காக. வண்டு - பகவானுடன் ஸாரூப்யம் பெற்ற ஆசார்யர்கள். இன்னிசை முரல் தரு — இனிய ஸ்ரீஸூக்திகளைச் சொல்லா நிற்கிற. அன்றிக்கே எம்பாரைத் திருத்திப் பணி கொண்ட பெரிய திருமலை நம்பிகள் பல வகைப்பட்ட அல்லாத

விடத்தை விட்டும் மற்றோர் இடம் தேடிப் போவதே வாழவல்ல நீங்கள்! ஔஷதாசல பர்யந்தத்தில் ஒன்றுக்கொன்று மேல் படிந்து இனிமைப் படுத்துகிற தோழிகள் குழாங்கொண்டாப் போலே பின்னலாய் ஏறிப் படர்ந்த மாதவிப் பந்தலிலே அக்கொடிகளைத் தன்

---

வாக்யார்த்தங்களைக்கொண்டு திருத்த முடியாமல் ஆழ்வாரின் ஸ்ரீ ஸூக்தியைக்கொண்டே திருத்தினபடியினால் அந்த ஏற்றத்தையுடைய திவ்ய ப்ரபந்தங்களை அநுஸந்திக்க என்றபடியாகவுமாம்.

' யாத்ரா விஹார ஸஜயேஷு ஸஜூஷ்டிதம் தே ரஜாயிவஸ் வரணாவநி ஜஜு நாஷம் | வயஞாக ஞெநிய ஜ்ஞமஸ்ஹணாய வஶவஸா ஸம்ஜோஹநம் மவரஶீத ஜிவ வூதீஜ: ||'

என்கிறபடியே இந்த ஜீவாத்மாக்களாகிற மான்களைப் பிடிப்பதற்கு ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்தியிறே காரணமாயிரா நின்றது. பிணியவிழ்கமலத்து – அப்பொழுது தான் மலர்ந்த தாமரைப் புஷ்பம் போன்ற எம்பெருமானுடைய திருவடித் தாமரைகளில். அதாவது அவற்றைத் தாங்கள் ஆஶ்ரயித்து நாம் அவைகளை ஆஶ்ரயிக்கும்படி செய்கிற ஆசார்யர்கள் வஸிக்கும் இடமான பகவானுடைய திருவடித் தாமரைகளில் என்றபடி. ' அம்புயத்தாள் கணவன் தாளிணை சேர்ந்து எமக்கும் அவை தந்த தகவுடையார் ' என்னப்பட்டதிறே. இப்படிப்பட்ட பரம க்ருபாவான்களான ஆசார்யர்கள் நிறைந்திருக்கும் ஸம்பத்துள்ள க்ஷேத்திரம் திருவஹீந்திரபுரம் என்றதாயிற்று. ஆக அநுபாவ்ய வஸ்துவும் அத்தை அநுபவிப்பதற்கு வேண்டிய ஜ்ஞானத்தை உபதேஶிக்கும் ஆசார்யர்களும் நிறைந்த இடம் இதுவேயாகையினால் வஸ்தவ்ய தேஶமும் இதுவே என்று அருளிச்செய்கிறார்—' இவ்விடத்தை ' இத்யாதியால். அந்யாபதேஶார்த்தத்தை நிரூபித்தருளுகிறார்—' ஔஷதாசல ' இத்யாதியால். இது வரைச்சாரல் என்பதின் அர்த்தம். பர்யந்தத்தில் - ஸமீபத்திலுள்ள இடங்களில். ' பின்னும் ' என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—' ஒன்றுக் கோன்று - இத்யாதியால். இனிமைப் படுத்துகிற - ஸந்தோஷப்படுத்துகிற. குழாங் கொண்டாப் போலே – ஒன்று சேர்ந்திருந்தாப் போலே. தன் இனமாகக் கண்ட் - தனக்கு உசாத் துணையாக அறிந்த. இனம் -

இனமாகக் கண்ட வண்டின் பேடை மது உண்ணச் செல்ல, அங்குள்ள ஐகரஸ்யத்தால் அது நெடும்போதைக்கும் வாராதிருக்க, வருகைக்காக, அப்போது அலர்ந்த செவ்வித் தாமரையில் படிந்த வண்டானது ·

1 ‘ ரஸோ வை ஸ: ’

என்னலானதில் மதுவைத் தான் உண்டு ஆநந்தித்ததாய்,

2 ‘ஸ்தப்தோஸ்யுத’

என்றபடியே தன் பேடையை வெறுத்து, அது தன்னோடு ஐகரஸ்யம் பெற வருகைக்காக தேன்ன என்று இனிய இசையிட்டுமுரலுமாய்த்து, இங்ஙனே திர்யக்குக்களுக்கும் இப்பரிபாகத்தைப் பிறப்பிக்குமதாய்த்து இத்திருவஹீந்திரபுரமாகிற இவ்விடம். ஆகை

---

கூட்டம். அன்றிக்கே இலைகளின் பசுமையைக் கண்டு அவைகளை ஸஜாதீயங்களான வண்டுகளாகக் கொண்டு என்றபடியாகவுமாம். ‘பந்தலில் பேடை வர ’ என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்— ‘ வருகைக்காக ’ என்று. ‘ தேன்ன ’ என்கிற இடத்தில் ஆங்யாபதேஶார்த்தம் ஸ்பஷ்டமாகையினால் ஸ்வாபதேஶார்த்தத்தை நிரூபித்தருளுகிறார்—‘ ரஸோ வை ’ இத்யாதியால். ஸ: வை – அந்தப் பரமாத்மாவே, ரஸ: – ரஸம். என்னலானதில் - என்று சொல்லப்பட்ட ஸ்வரூபத்தில். மதுவை - போக்யமான குணங்களை. ஸ்தப்தோஸி— ஸ்தப்தனாயிருக்கிறாய், அதாவது ஆருணி என்பவர் ஶ்வேத கேது என்னும் தன் பிள்ளை குரு குல வாஸம் செய்து ஶாஸ்திராப்யாஸம் பண்ணி திரும்பி வந்ததும் தான் எல்லாவற்றையும் தெரிந்துகொண்டு விட்டதாக எண்ணி அந்த கர்வத்தினால் தன்னுடைய தகப்பனார் வந்ததும் எழுந்து நமஸ்காராதிகளைச் செய்யாமல் இருக்க, அவனைப் பார்த்து அவர் சொன்ன வார்த்தை இது. ‘ பிள்ளாய் ! பெரியோர்களிடத்தில் வணக்கமில்லாமல் ஸ்தப்தனாயிருக்கிறாயே ? ஸர்வ நியந்தாவான அந்தப் பரமாத்மாவை அறிந்து விட்டாயோ ? ’ என்று கேட்டு அவனை வெறுத்தாப் போலே வெறுத்து என்றபடி. ‘தேன்ன’ என்பது ஶப்தத்தின் அநுகாரம். இப்பாட்டால் பலிதமான அர்த்தத்தை அருளிச்செய்கிறார்—‘ இங்ஙனே ’ என்றாரம்பித்து. இப்பாட்

1. தைத்தி – ஆந - 7 – 1. 2. சாந்தோ – 6 – 1 – 3.

யால் அது பார்த்தாகிலும் பிழையுங்கோள் நீங்கள் என்கிறார். இதில் திருவுக்கும் திருமாலுக்குமே கலஹத்தையும் ஊடலையும் ப்ரஸக்தமாக்கி அதே திர்யக்குக்களுக்கும் யாத்ரையாய் ஊடல் கலஹங்களை வண்டுகளில் கல்பித்துத் தன்னண்டைக்குப் பேடை வர வண்டு இன்னிசை முரலும்தாய் அனுபவிப்பாருமுண்டு. 2

வையமேழு முண்டு ஆலிலை வைகிய
மாயவன் அடியவர்க்கு
மெய்யனாகிய தெய்வநாயகனிடம்
மெய் தகு வரைச்சாரல்
மொய் கொள் மாதவி செண்பகம்
முயங்கிய முல்லையங்கொடியாட
செய்ய தாமரைச் செழும்பணை
திகழ் தரு திருவயிந்திரபுரமே. 3

ப — ரை. ] வையம் — பூமி, ஏழும் — ஏழையும், உண்டு — ப்ரளய காலத்தில் தன் வயிற்றில் அடக்கிக்கொண்டு, ஆலிலை — ஆலை மரத்தின் இலையில், வைகிய — கண் வளர்ந்தருளின, மாயவன் — ஆச்சர்ய பூதனாய், மாயம் - வஞ்சனை, அநாச்ரிதர்களுக்குத் தன் படிகள் ஒன்றையும் காட்டாதே வஞ்சிக்குமவனாய் என்றபடி, அடியவர்க்கு—

---

டுக்கு ஸ்வாபதேசத்தில் போஜனாந்தரம் அருளிச்செய்கிறார்—'இதில்' என்றாரம்பித்து. கலஹத்தை - ப்ரணய கலஹத்தை என்றபடி. ஊடலை - ப்ரணய ரோஷத்தை, ப்ரஸக்தமாக்கி — இவ்விடத்தில் ப்ரஸ்துதார்த்தமாக அனுஸந்தித்து. கல்பித்து - ஆரோபித்து. அதாவது பிராட்டி ப்ரணய கலஹத்தினால் சற்று விலகி இருக்க எம்பெருமான் அவள் தன் ஸமீபத்தில் வருவதற்காக இனிய சொற்களைச் சொல்லுகிறான் என்றபடி. 'பேதை நெஞ்சு அறவறப்பாடும் பாட்டை' என்னப்பட்டதிறே. 'பாடப் பகை தீரும்' என்பது லௌகிகோக்தி. இங்கு வண்டு என்று பூர்வாசார்யர்களை விவக்ஷித்து அவர்களுடைய இனிய ஸ்ரீஸூக்திகளினால் இருவரும் ஸமாஹிதராகும்படி தெரிவிக்கப்படுகிறதாகவுமாம். 2

தன்னை ஆஶ்ரயித்தவர்களுக்கு, மெய்யனாகிய - ஸத்யபூதனாகிய, அதாவது தன் படிகளை எல்லாம் உள்ளபடியே காட்டுமவனாகிய, தெய்வ நாயகன் இடம், மெய் – அந்தப் பகவானுடைய திருமேனிக்கு, தகு – தகுதியான பாவநத்வ போக்யத்வ ஸௌகந்த்ய ஶீதளத்வ விஶாலத்வ உந்நதத்வாதிகளினால் ஸத்ருஶமான, வரைச் சாரல் – (ஔஷத) பர்வதத்தினுடைய ஸமீபத்தில், மோய் கோள் - மொய்த்துக் கொண்டிருக்கிற, அதாவது நெருங்கி இருக்கிற, மாதவி - மாதவிக் கொடியும், சேண்பகம் – செண்பகமரத்தை, முயங்கிய – தழுவிக்கொண்டிருக்கிற, முல்லை - முல்லையினுடைய, அம் – அழகிய, கோடி கொடியும், ஆட, செய்ய – சிவந்த, தாமரை - தாமரைப் புஷ்பங்கள், செழும்பணை – செழுமையுள்ள நீர் நிலங்களில், திகழ் தரு – ப்ரகாஶிக்கிற, திருவயிந்திர புரமே. 3

இதில் அவாந்தர ப்ரளயத்தில் கர்த்தாவும் ரக்ஷகனும் அடியவர்க்கு மெய்யனும் பிறர்களுக்கு மாயனும் இவன் என்கிறார். ஏழு கடலாலும் அளவுபட்ட பூமி, அத்தை ஓர் ஈற்றிளம் பிள்ளையாய் உண்டு, ஆலிலையில் கண் வளர்ந்தவனாய், தன்னை உள்ளபடி அறியாதார்க்கு வஞ்சகனாய், அறிந்து அடி அடைந்தார்க்கு மே

---

பாட்டுக்கு அவதாரிகை அருளிச்செய்கிறார் —' இதில் ' என்றாரம்பித்து. கர்த்தாவும் – ப்ரளயத்தைச் செய்பவனும். ரக்ஷகனும் – அக்காலத்தில் அழியாதபடி தன் வயிற்றில் வைத்து ரக்ஷிப்பவனும். ' தாயிருக்கும் வண்ணம் உம்மைத் தன் வயிற்றிருத்தி உய்யக்கொண்டான் ' என்று இவ்வாழ்வார் தாமே ப்ரதேஶாந்தரத்தில் அனுஸந்தித்தாரிறே. ' வையமேழு ' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—' ஏழு கடலாலும் ' என்றாரம்பித்து. அளவுபட்ட - சூழப்பட்ட என்றபடி. ஈற்று இளம் பிள்ளை – அப்பொழுது பிறந்த இளம் குழந்தை. இத்தால் இதரர்களுக்கு அகடிதமானவற்றைச் செய்யக்கூடியவன் என்பது த்யோதிதம். ' மாயவன் ' என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—' தன்னை ' இத்யாதியால். அறியாதார்க்கு என்றது அறிந்து ஆஶ்ரயிக்காதவர்களுக்கு என்றபடி. ' அடியவர்க்கு மெய்யன் ' என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—' அறிந்து ' இத்யாதியால். மெய்யன் – மெய்யாயிருக்குமவன், அதாவது அவர்களுடைய ஸர்வாபீஷ்டங்களையும் கொடுத்து ரக்ஷிக்கிறபடியினால்

ய்யனுமாய், இவ்விருப்பில் தானே ப்ரும்மாதிகள் தூர இருந்து

---

மெய்யாயிருக்குமவன் என்றபடி.

‘ [illegible] ||’

என்று ஆசார்யனும் அநுஸந்தித்தாரிறே. இவர் ஸ்தோத்திரம் பண்ணுவதற்கு ஈடான குண விக்ரஹ விபூத்யாதிகளைக் காட்டிக்கொடுக்குமவன் என்றபடி. அன்றிக்கே ‘ அடியவர் பால் மெய்யை வைத்து தெருள் தர நின்ற தெய்வ நாயக ’ என்கிறபடியே ஆசார்ய ஸார்வபௌமாவதாரத்தில் தம்மை

‘ ப்ரதிஷ்டாபித வேதார்த்த: ப்ரதிக்ஷிப்த பஹி: ஸ்ருத: |
[illegible] ||’

என்று அனுக்ரஹித்த நடாதூர் அம்மாள் வார்த்தையை மெய்யாக்குவதற்காக ஆசார்யனை அனுக்ரஹித்தபடி விவக்ஷிதமாகவுமாம்.
‘ அடியவர்க்கு ’ இத்யாதி —‘ பத்துடை அடியவர்க்கெளியவன் பிறர்களுக்கரிய வித்தகன் ’,

‘ [illegible] ’,
‘ [illegible] ’,
‘ [illegible] ’

என்றிவை முதலியவைகள் இங்கு அநுஸந்தேயங்கள்.
‘ தெய்வ நாயகன் ’ என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார் — ‘ இவ்விருப்பில் ’ என்றாரம்பித்து. நித்ய ஸூரிகளுக்கும் அவ்வருகானவனை செலக் காண்கிற்பார் காணுமளவும் செல்லும் கீர்த்தியாய் ப்ரும்மாதிகளும் கூட கிட்டி அடிமை செய்யக் கூசி தூரத்தில் நின்று அடிமை செய்ய வேண்டும்படியான ஏற்றத்தையுடையவன் என்றபடி.
இவ்விருப்பில் தானே - இப்படி ஆச்ரிதர்களுக்கு எளியனாய் அநாச்ரிதர்களுக்கு வஞ்சகனாய் இருக்கும் நிலையிலே.

‘ [illegible] ’

என்கிறபடியே இப்படிப் பகவான் மற்றொருவராலும் நியமிக்கப்படக்

அடிமை செய்ய அவர்களுக்குக் கிட்டவொண்ணுத மஹா ப்ரபுவான வன், அவனிடம் இவ்வஹீந்திரபுரமே. இத்தை உபபாதிக்கிருர். திவ்ய ஸூகுமாரமான அத்திருமேனிக்குத் தகுதியான குளிர்த்தி பெற்ற ஔஷதாசல பர்யந்தத்தில் செறிவு பெற்ற குருக்கத்தியானது செண்பகத்தில் ஏறினதாய், முல்லையைத் தன்னைப் போல் அரும்பும் அலருமேயாம்படி தட்ட, அத்தால் முல்லைக்கொடி அசைய, அதின் காற்றுப் பட்டு சிவந்த தாமரைகள் செழித்தனவாய், தனக்குள்ள இடமெங்கும் பரவப் பெற்று எங்கும் அரும்பும் அலருமாய் விளங்குமாய்த்து. இங்ஙனே பரஸ்பரம் எல்லாம் எல்லாத்துக்கும் ஸம்ருத்தியைப் பெறுத்தும்படி எல்லாத்துக்கும் செழிப்பைத் தருமிடம் திருவஹீந்திரபுரமே என்கிருர். 3

'மாறு கொண்டுடன்றெதிர்ந்த வல்லவுணன்
தன் மார்பகமிரு பிளவா

---

கூடாத ஸ்வாதந்த்ர்யத்தை உடையவன் என்பது ப்ரஸித்தமிறே. 'இத்தையே உபபாதிக்கிருர்' என்பதற்கு இப்படிப்பட்ட ஸ்வபாவம் இவனுக்கு உண்டானது இந்த க்ஷேத்ரத்தின் விசேஷம், இங்கு அசேதனங்களுக்குமுள்பட இப்படிப்பட்ட ஸ்வபாவத்தை உண்டாக்குமிடமன்றே இது என்று தாத்பர்யம். திவ்ய — அப்ராக்ருதமான. ஸூகுமாரமான - மார்த்தவத்தையுடையதான. குளிர்த்தி - சீதளத்வம், அதாவது திருமேனிக்குப் பாங்கான சீதளத்வம் இருக்கிறது என்றபடி. அன்றிக்கே அதற்கு அநுகுணமான ஸௌகுமார்யாதிகளையுடைய என்றபடியாகவுமாம். 'மோய் கோள்' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிருர்—'செறிவு' என்றாரம்பித்து. செறிவு பெற்ற — நெருங்கி இருக்கிற. 'செண்பகம் முயங்கிய' என்பதினுல் அர்த்தாத் ஸித்தமான அர்த்தத்தை அருளிச்செய்கிருர்—'செண்பகத்தில்' இத்யாதியால். அரும்பும் அலருமேயாக-மொட்டுக்களும் மலர்ந்த புஷ்பங்களுமேயாக. 'முல்லை' இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிருர்—'முல்லை'இத்யாதி. 'செய்யதாமரை' என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிருர்—'சிவந்த' இத்யாதியால். பாட்டுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிருர் —'இங்ஙனே' என்றாரம்பித்து. 3

கூறு கொண்டு அவன் குல மகற்கு
　　இன்னருள் கொடுத்தவனிடம் மிடைந்து
சாறு கொண்ட மென் கரும்பிளம்
　　கழை தகை விசும்புற மணி நீழல்
சேறு கொண்ட தண் பழனமதெழில்
　　திகழ் திருவயிந்திரபுரமே. 4

ப - ரை.] மாறு – ஶத்ருவாய் இருக்கையை, கொண்டு – அங்கீகரித்து, உடன்று - கோபித்துக்கொண்டு, எதிர்ந்த – எதிர்த்து வந்த, வல் – பலிஷ்டனான, அவுணன் தன் - ராக்ஷஸனுடைய, (ஹிரண்ய கஶிபுவினுடைய) மார்பகம் - மார்பை, இரு பிளவா – இரண்டு பாதியாக, கூறு கொண்டு - கூறாகச்செய்து, அதாவது கிழித்து, அவன்- அவனுடைய, குல மகற்கு - குல மகனான ப்ரஹ்லாதனுக்கு, இன் - இனிய, அருள் – க்ருபையை, கொடுத்தவனிடம் – செய்தவனிடம், மிடைந்து – ஒன்றோடொன்று நெருங்கி, சாறு கொண்ட – வெளியில் பொங்கின சாற்றையுடைய, மென் – ம்ருதுவான, கரும்பு – கரும்பின், இளம் – இளமையையுடைய, கழை – நுனிகளை, விசும்பு - ஆகாஶமானது, த கை – த டு க் க, உற – அத்தால் உ ற் ற, மணி – அழகான, நீழல் – நிழலோடு கூடிய, சேறு கொண்ட - சேற்றைக் கொண்டிருக்கிற, தண் – ஶீதளமான, பழனமது – நீர் நிலங்களினுடைய, எ ழி ல் - காந்தி, திகழ் - ப்ரகாஶிக்கிற, திருவயிந்திர புரமே. 4

மாறு – ஶாத்ரவம், ஸர்வ ஶரீரியான தன்னிலும், ஸர்வ பூத ஸுஹ்ருத்தான தன் அந்தரங்கரிலும் ஶாத்ரவம் கொண்டவனாய்,

---

'கொண்டு' என்பதினால் ஏற்பட்ட தாத்பர்யார்த்தத்தை அருளிச்செய்கிறார்—'ஸர்வ ஶரீரியான' என்றாரம்பித்து. பகவான் ஸர்வாந்தர்யாமியாகையாலே அவனுக்கு ஶத்ருக்கள் மித்திரர்கள் என்பாரில்லை.

'ஸமோ௨ஹம் ஸர்வபூதேஷு ந மே த்வேஷ்யோ௨ஸ்தி ந ப்ரிய:।
யே பஜந்தி து மாம் பக்த்யா மயி தே தேஷு சாப்யஹம்॥'

அது கொண்டது வாங் மனோ மாத்திரத்தாலன்றிக்கே காயத்தாலும் என்கிறார்—'உடன்றெதிர்ந்த' என்று. உளம் கொள்ளாத ஶாத்ரவம் உடலை உடைத்துக் கொண்டு புறப்பட்ட உடனே எதிர்த்த ப்ரபல ஹிரண்யனுடைய அந்த ஶாத்ரவத்துக்குக் கோள் கலமான அகன்ற மார்பானது உள்ளும் இரண்டு பிளவாம்படி வகுப்புச் செய்து, அவன் குல புத்திரனில் இனிய அருளைத் தந்தவனுக்கு இடமும்

---

என்றாரிறே ப்ரஹ்லாதாழ்வானும்.

'ஸமோஹம் ஸர்வ பூதேஷு ந மே த்வேஷ்யோஸ்தி ந ப்ரிய:'

என்று ஸர்வேஶ்வரன் தானும் சொன்னான். ஆகையினால் ஶத்ருவாய் இல்லாமல் இருக்கச்செய்தே அப்படி ஶத்ருவாய் இருப்பதாகத் தானே கல்பித்துக்கொண்டான் என்றதாயிற்று. இப்படியே 'ஸர்வ பூத ஸுஹ்ருத்தான தன் அந்தரங்கரிலும்'என்பதிலும் கண்டுகொள்ளுவது. அதாவது பகவானிடத்திலும் பகவத் பக்தரிடத்திலும் ஶாத்ரவத்தை தானே கொண்ட என்றதாயிற்று. இதின் ப்ரகாரத்தை அருளிச்செய்கிறார்—'அது' இத்யாதியால். 'உடன்று' இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'உளம்' என்றாரம்பித்து. 'வல் அவுணன்' என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'ப்ரபல' இத்யாதியால். 'ப்ரபல' என்றது புஜபல வரபலங்களையுடைய என்றபடி. கோள் கலமான – இருக்கும் இடமான. இப்படிப்பட்ட த்வேஷ புத்தியைப் பண்ணினதற்குக் காரணம் என்ன என்று பார்ப்பதற்காக அதற்குக் கொள்கலமாயிருந்த ஹ்ருதயத்தைப் பிளந்து பார்த்தான் போலும். வகுப்புச்செய்து – பிளந்து. குல புத்திரனில் – குலத்தில் பிறந்த பிள்ளையில், அதாவது வேறு குலத்தில் பிறந்து ஸ்வீகாரம் செய்யப்பெற்றவனல்ல, தகப்பன் இப்படி த்வேஷ புத்தியைச் செய்ய அவனுடைய ஔரஸ புத்திரனே பகவத் பக்தி செய்து அருள் பெற்றான் என்றபடி. அன்றிக்கே

'குலம் தாரயதே ஸுத'

இத்யாதிகளிற்படியே குலத்தை ஏழு தலை முறை உத்தாரணம் செய்யக்கூடியவன் என்றபடியாகவுமாம். இப்படி ஸர்வேஶ்வரன் தன்னுடைய ஆஶ்ரிதனான ப்ரஹ்லாதனுடைய வார்த்தையை மெய்யாக்கு

இவ்வஹீந்திரபுரமே, பரஸ்பரம் நெருங்கி அத்தால் பொங்கின ரஸம் கொண்டது கொண்டு அதி ம்ருதுளமான தீங்கரும்பினுடைய இளம் கிளைகளை விசும்பானது தகைய, அத்தால் உறுத்த கரும்புகளால் அலங்க்ருதமாய் நிழல் பெற்றதுமாய் சேறு கொண்டதுமான குளிர்ந்த குறிஞ்சி நிலங்களால் அளகையைக் கழித்து விடா நின்றதும் இத்திருவஹீந்திரபுரமே என்கிறார். 4

---

வதற்காக அவன் தானே அளந்திட்ட தூணை அவன் தட்ட ஆங்கே வளர்ந்திட்ட வாளுகிர்ச் சிங்க உருவாய் உளம் தொட்டிரணியன் ஒண் மார்பகலம் பிளந்திட, அப்பொழுதுண்டான கோபத்தின் மிகுதியினாலே ப்ரும்மாதி தேவர்களும் கிட்டிச் சென்று ஸ்தோத்திரம்செய்யப் பயந்து தூரத்தில் நின்ற பொழுதிறே ப்ரஹ்லாதாழ்வான் பகவானுடைய அருகில் நின்று ஸ்தோத்திரம் செய்யப்பெற்றது. ‘சீற்றத் தோடருள் பெற்றவன்’ என்றிறே ஆழ்வாரும் அனுஸந்தித்தது. இவை எல்லாம் ‘இனிய அருளைத் தந்தவனுக்கு’ எனகிற இடத்தில் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது. ‘மிடைந்து’ இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—‘பரஸ்பரம்’ என்றாரம்பித்து. இது ஹேதுகர்ப்ப விஶேஷணமாகையால் இத்தால் ஏற்பட்ட அர்த்தத்தை அருளிச்செய்கிறார்—‘அத்தால்’ இத்யாதியால். ‘மணி நீழல்’ என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—‘அலங்க்ருதமாய்’ இத்யாதியால். ‘எழில் திகழ்’ என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—‘அளகையை’ என்றாரம்பித்து. அதாவது அளகையும் இதற்கு நிகரல்ல என்று கழிக்கும்படியானது என்றபடி. இத்தால்

‘[illegible]’

என்கிறபடியே பெண்ணையாற்றங்கரையில் உண்டான கரும்பானது ரஸத்தைப் பெருக்குவதற்கு முதலாழ்வார்களாகிற யந்திரம் ஒன்று வேண்டியிருந்தது அங்குள்ள ரஸத்தின் குறைவினால். இந்தக் கருடநதிக்கரையில் இருக்கும் கரும்போ தன் நெருக்கத்தைக் கூடத் தான் பொறாமல் ரஸத்தைப் பெருக்குகிறபடியினால் இந்த எம்பெருமானுடைய ஸௌலப்யாதிஶயம் தெரிவிக்கப்பட்டதாகிறது. 4

ஆங்கு மாவலி வேள்வியில் இரந்து
சென்றகலிடம் அளந்து ஆயர்
பூங்கொடிக்கு இன விடை பொருதவனிடம்
பொன் மலர் திகழ் வேங்கை
கோங்கு செண்பகக் கொம்பினில் குதிகொடு
குரக்கினம் இரைத்தோடி
தேன் கலந்த தண் பலங்கனி
நுகர் தரு திருவயிந்திரபுரமே. 5

ப — ரை.] மாவலி — மஹா பலியின், வேள்வியில் — யஜ்ஞத்தில், சென்று - போய், இரந்து — யாசித்து. ஆங்கு — அவ்விடத்திலே, அகல் - விஸ்தாரமான, இடம் - பூமியை, இது ஆகாசாதிகளுக்கும் உபலக்ஷணம், அளந்து, ஆயர் — இடையர்களுடைய, பூங்கொடிக்கு — பூத்த கொடி போன்ற நப்பின்னைப் பிராட்டிக்காக, இன — சேர்ந்து வந்த, விடை — வ்ருஷபங்களுடன், பொருதவன் — யுத்தம் செய்தவனுடைய, இடம், பொன் மலர் - பொன்போன்ற புஷ்பங்களால், திகழ் — ப்ரகாசிக்கிற, வேங்கை - வேங்கை மரம், கோங்கு - கோங்குமரம், செண்பக — செண்பக மரம், இவைகளினுடைய, கொம்பினில் — கிளைகளில், குதி கொடு - குதித்துக் கொண்டு, குரக்கினம் - குரங்குகளின் கூட்டம், இரைத்து — சப்தித்துக் கொண்டு, ஓடி, தேன் கலந்த - தேனுடன் கூடிய, தண் - அழகிய, பலங்கனி — பலாப் பழங்களை, நுகர் தரு — சாப்பிடுகிற, திருவயிந்திரபுரமே. 5

---

கீழ் மூன்றாம் பாட்டில் 'அடியவர்க்கு மெய்யனாகிய' என்று அனுஸந்தித்ததை

'ஸத்யம் விதாதும் நிஜப்ருத்ய பாஷிதம்'

என்கிறபடியே தன் பக்தனாகிய ப்ரஹ்லாதனுடைய வார்த்தையை மெய்யாக்குவதற்காக ந்ருஸிம்மாவதாரம் எடுத்தருளினான் என்று நாலாம் பாட்டில் உபபாதித்தார். ஸ்ரீ ப்ரஹ்லாதாழ்வான் போலே அநந்ய பக்தரல்லாத ப்ரயோஜநாந்தரபரருக்கும் தன்னை அழியமாறிக் கொடுத்து உபகரித்தருளி அடியவர்க்கு மெய்யனாகும் ப்ரகாரத்தை இப்பாட்டில் அருளிச்செய்கிறார் என்று ஸங்கதி. 'மாவலி' இத்யா

மஹாபலியால் நெருக்கப்பட்ட இந்திரன் தன்னை ஶரணம் அடைந்த அன்று அந்த மஹாபலியினுடைய யஜ்ஞத்தில் சென்று, மூவடி தா என்று இரந்து, அகன்ற இடங்களை எல்லாம் அளந்து கொண்டவனுக்கும், இடைக் குலத்தவளாய் பூத்த கொடிபோன்ற வளுக்குத் தான் உபக்னமாகைக்காக கூடி வந்த ஏழு விடைகளையும் முடித்தவனுக்கும் இடம் இவ்வஹீந்திரபுரமே. பொன் போன்ற மலர்களால் ஒளி பெற்று விளங்கின வேங்கை என்ன, கோங்கு என்ன, செண்பகம் என்ன, அதுகளினுடைய கொம்பி

---

*திக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'* மஹாபலியால் *' இத்யாதியால்.* 'சென்று இரந்து' *என்று அந்வயித்து அர்த்தம் அருளிச்செய்கிறார்—'* சென்று *' இத்யாதியால். இப்படி உபகாரம் செய்வது உத்க்ருஷ்டமானவர்களுக்கு மாத்திரமன்று, அத்யந்தம் அகிஞ்சனர்களாயும் எட்டும் இரண்டும் அறியாதவர்களாயும் இருக்கும் இடையர்களுக்கும் அருள் புரியும் ஸ்வபாவம் உடையவன் என்று கொண்டு அப்படி அனுக்ரஹித்த வ்ருத்தாந்தத்தை நிரூபிக்கிறார் என்று திருவுள்ளம்.* 'ஆயர்' *இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—*
'இடைக் குலத்தவளாய்' *இத்யாதியால். அதாவது கறவைகள் பின் சென்று கானம் சேர்ந்து உண்ணும் குலத்தில் பிறந்தவளாய் என்றபடி.* 'பூத்த கொடி போன்ற' *என்றது*

*'வதிஸம்யொம ஸாமுஸம்'*

*என்கிறபடியே பர்த்தாவாகிய ஒரு கொழு கொம்பை ஆஶ்ரயித்தல்லது தரிக்கவொண்ணாத பருவத்தையுடையவள் என்றபடி.* 'உபக்னமாகைக்காக' *என்பதுடன் அதற்குத் தடையாய் இருந்த என்னும் பதங்களைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்.* 'ஏழு விடைகளையும்' *என்றது அஸுராவேஶமுள்ளதாய் ஒவ்வொன்றே துர்ஜயமாயிருக்க அவைகள் ஏழையும் ஒரே ஸமயத்தில் கொன்றான் என்றபடி.* 'முடித்த' *என்றது பகவான் அவைகளுடன் இன்னம் கொஞ்சம் காலம் விளையாடுவான், ஆனால் நப்பின்னைப் பிராட்டியின் த்வரையைக் கண்டு இனி விளம்பிக்கக் கூடாது என்று அவைகளை உடனே கொன்றுவிட்டான் என்றபடி.* 'பொன் மலர்' *இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'* பொன் *' இத்யாதியால்.* 'ஔதார்யமுள்ள

னில் ஒன்றில் நின்றும் ஒன்றில் தன் பலத்தோடு குதி கொண்டும் ஹர்ஷத்தால் இரைத்துக் கொண்டும் ஸங்கீபவித்த குரங்குகள் ஓடிவந்து தேன் கலந்த நல்ல பலாப்பழங்களை ஆஸ்வாதிக்கலான ஔதார்யமுள்ள இடம் இவ்வஹீந்திரபுரமே என்கிறார். 5

*கூனுலாவிய மடந்தை தன் கொடுஞ் சொலின்*
*திறத்து இளங் கொடியோடும்*
*கானுலாவிய கருமுகில்*
*திருநிறத்தவனிடம்கவினாரும்*
*வானுலாவிய மதி தவழ் மால்வரை*
*மாமதிள் புடை சூழ*
*தேனுலாவிய செழும் பொழில்*
*தழுவிய திருவயிந்திரபுரமே.* 6

ப — ரை. ] கூன் — கூனனது, உலாவிய — ஶரீரத்தில் மாத்திரமன்றிக்கே மனதிலும் கூட வ்யாபித்திருக்கிற, மடந்தைதன் - ஸ்திரீயினுடைய, கொடும் - க்ரூரமான, சொலின் திறத்து — வார்த்தையின் காரணமாக, இளம் கொடியோடு - இளம் கொடி போன்ற பிராட்டியுடன், கான் — காட்டில், உலாவிய — ஸஞ்சரித்த, கரு முகில் — கறுத்த மேகம் போன்ற, திருநிறத்தவனிடம் - திருநிறத்தையுடைய சக்ரவர்த்தித் திருமகன் வஸிக்கும் இடமானது, வான் — ஆகாஶத்தில், உலாவிய - ஸஞ்சரிக்கிற, கவினாரும் — சுக்ரனும், மதி — சந்திரனும், தவழ் — தவழ்ந்து போகிற, மால் வரை — பர்வதமும், மா — பெரிய, மதிள் - மதில்களும், புடை சூழ - நாலு பக்கமும் சூழ்ந்திருக்க, தேன் — வண்டுகள், உலாவிய - ஸஞ்சரிக்கிற, செழும் — செழுமையுள்ள,

---

இடம்' என்றது 'ஓடி ஓடிப் பல பிறப்பும் பிறந்து' என்கிறபடியே அனேகம் ஜன்மங்களில் விஷயாந்தரங்களில் ஸஞ்சரித்துக் கொண்டிருக்கிற சஞ்சல புத்தியையுடைய சேதனர்களுக்கும் தன்னுடைய போக்யதமமான திவ்ய விக்ரஹத்தையும் கல்யாண குணங்களையும் அனுபவிக்கக் கொடுப்பது இந்த க்ஷேத்திரத்தின் பெருமை என்றபடி.

பொழில் - தோப்புக்களால், தழுவிய — சுற்றிலும் தழுவப்பட்ட, திருவயிந்திரபுரமே. 6

முதுகில் மாத்திரமே வக்ரிமையன்றிக்கே உள்ளும் நிலை நின்ற வக்ரிமையுள்ள குப்ஜையுடைய கொடிய சொல்லாவது

1' ராமே வா பரதே வாஹம் விசேஷம் நோபலக்ஷயே'

என்றவளையே

2' ஏஷ மே ஜீவிதஸ்யாந்த: ராமோ யத்யபிஷிச்யதே'

என்னும்படி பண்ணினது. இவளை இங்ஙனே சொல்லுவிக்குமவள் அந்த குப்ஜையாய்த்து, அதின் நிமித்தமாக இளங்கொடி போ

---

'கூனுலாவிய' என்பதற்குத் தாத்பர்யம்அருளிச்செய்கிறார்— 'முதுகில்' என்றாரம்பித்து. இவளுடைய சரீரத்தில் வக்ரத்வம் இருந்தாப்போலே மனதிலும் கெட்ட ஸ்வபாவம் குடி கொண்டிருந்தது என்றதாயிற்று. 'கோடும் சொல்' என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'கொடிய சொல்லாவது' இத்யாதியால். ராமே வா — ராமன் இடத்திலாவது, பரதே வா — பரதன் இடத்திலாவது, விசேஷம்—வித்யாஸத்தை, அஹம் நோபலக்ஷயே—நான் பார்க்கவில்லை. 'என்றவளையே' என்றது சக்ரவர்த்தி ராமனுக்கு யுவராஜ்ய பட்டாபிஷேகம் செய்யப்போகிறார் என்று கூனி தன்னிடம் சொன்னபொழுது மிகவும் ஸந்தோஷத்தைஅடைந்து கீழ் உதாஹரித்த ச்லோகத்தைச் சொல்லி, தன் கழுத்தில் இருந்த ஒரு முக்தாஹாரத்தை ஸம்மானமாகக் கொடுத்த கைகேயியையே என்றபடி. ராமனையே தன்னுடைய புத்திரனை பரதனைவிட மேலாகப்பாவித்த கைகேயியையேஎன்றதாயிற்று. ராம: — ராமன், அபிஷிச்யதே யதி - பட்டாபிஷேகம்செய்யப்படுகிறரோயாகில், ஏஷ — இதுவே, மே — என்னுடைய, ஜீவிதஸ்ய அந்த: — ஜீவனுக்கு முடிவாகும், அதாவது ராமனுக்கு முடிசூட்டினால் நான் உடனே உயிரை மாய்த்துக் கொள்ளுவேன் என்றபடி. இப்படி முற்றிலும் மாறின ஸ்வபாவத்தை உண்டாக்கினது இந்தக் குப்ஜையே

1. ராமா — அயோ — 7 — 35. 2. ராமா - ஆர —47 — 8.

ன்ற பிராட்டியை வெம்மையால் ஒடுங்கப் பண்ணும் காட்டில் அவளோடு உலாவின போது கரு முகில் போன்றான்,

1 ' ஶோபயந் த³ண்ட³காரண்யம் '

என்றபடியே காடு எல்லாம் இள மயில் கழுத்துச் சாயலாம்படியான ரூபஶ்ரீயை உடையவனாய், கொடி மின்னலால் தழுவப்பட்ட காள மேகம் போன்ற சக்ரவர்த்தித் திருமகன் தனக்கு இடமாகக் கொண்ட இடம் அஹீந்திரபுரமே, வானில் உலாவுகிற சுக்கிரனும் சந்திரனும் தவழ்ந்து போம்படி தன்னைச் சூழ்ந்து கொண்டிருக்கிற பெரிய மலைகளையும் பெரிய மதில்களையும் உடையதாய் எப்போதும் வண்டுகள் உலாவும்படியான செழித்த பொழில்களால் தழுவப்பட்டதுமானது இந்தத் திருவஹீந்திரபுரமே என்கிறார். 6

---

யிறே. ' கலக்கிய மாமனத்தனளாய்க் கைகேசி வரம்வேண்ட மலக்கிய மாமனத்தனனாய் மன்னவனும் மறாதொழிய ' இத்யாதிகள் அநுஸந்தேயங்கள். வெம்மையால் — உஷ்ணத்தினால். ' கானுலாவி ' என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—' காட்டில் ' இத்யாதியால். ' கரு முகில் போன்றான் ' என்பதை விவரிக்கிறது ' ஶோபயந் ' இத்யாதி. தண்டகாரண்யம் — தண்டகாரண்யத்தை, ( தன்னுடைய திவ்ய ஶோபையினால் ) ஶோபயந் — ப்ரகாஶிக்கும்படி செய்து கொண்டு. ' கவினாரும் ' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—' வானில் ' என்றாரம்பித்து. கவி என்று சுக்கிரனுக்குப்பெயர், அதின் மேல் பூஜா வாசகமான ப்ரத்யயம் சேர்ந்து கவினார் என்னும் ரூபமாயிருக்கிறது. ' தவழ்ந்து போம்படி ' என்றது சந்திரன் முதலியவர்கள் தவழ்ந்து செல்லும்படியாக அவ்வளவு உயர்ந்திருந்தன என்றபடி. இத்தால் திருவயோத்யை, திருச்சித்ரகூடம், தண்டகாரண்யம் முதலிய இடங்களிலுள்ள அழகுகள் எல்லாம் ஒன்று சேர்ந்து இந்த க்ஷேத்திரத்தில் காணப்படுகிறபடியினால் பகவான் இத்தையே தனக்கு வாஸஸ்தானமாகக் கொண்டான் என்பது த்யோதிதம். 6

1. ராமா-அர - 38 – 15

மின்னின் நுண்ணிடை மடக்கொடி காரணம்
விலங்கலின் மிசை இலங்கை
மன்னன் நீள் முடி பொடி செய்த
மைந்தனதிடம் மணி வரை நீழல்
அன்ன மாமலரரவிந்தத்தமளியில்
பெடையொடும் இனிதமர
செந்நெலார் கவரிக் குலை வீசு
தண் திருவயிந்திரபுரமே. 7

ப — ரை. ] மின்னின் — மின்னலுக்கு ஸமமான, அன்றிக்கேமின்னில் - மின்னலைக் காட்டிலும், நுண் — ஸூக்ஷ்மமான, இடை-இடையையுடையவளான, மட — மடப்பம் முதலிய ஸ்த்ரீத்வத்திற்கு அஸாதாரணமான குணங்கள் நிறைந்தவளான, கோடி - கொடி போன்றவளான பிராட்டியின், காரணம் — காரணமாக, அதாவது ப்ரயோஜனத்தை இங்கு காரணமாக நிர்த்தேசித்திருக்கிறது, விலங்கலின் மிசை — மலையின் ஶிகரத்தில் இருக்கும், இலங்கை — லங்கா பட்டணத்திற்கு, மன்னன் - ராஜாவாகிய ராவணனுடைய, நீள் — நீண்ட, முடி — கிரீடங்களை, பொடி செய்த - பொடியாக்கின, மைந்தனது - யுவாவாகிய பகவானுடைய, இடம், மணி வரை — ரத்ன மயமான பர்வதத்தினுடைய, நீழல் — நிழலில், அன்னம் — ஹம்ஸ பக்ஷி, மா - விஶாலமான, மலர் — மலர்ந்த, அரவிந்தத்தமளியில் - தாமரை புஷ்பமாகிற படுக்கையில், பெடையோடும் — தன்னுடைய ஸ்த்ரீ பக்ஷியோடும், இனிதமர - ஸுகமாக நித்ய வாஸம் பண்ண, செம் — சிவந்த, நெல் — நெல்களினால்,ஆர் - நிறைந்த, குலை — கதிர்கள், கவரி வீசும் — சாமரம் வீசா நிற்கிற,தண் திருவயிந்திரபுரமே. 7

மின்னேடொத்த நுண்ணிய இடையையுடையளாய், ஆத்ம குணங்களுக்கெல்லாம் கோள் கலமானவளாய், உபக்னத்தைவிடில்

‘ மின்னின் ’ இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்— ‘ மின்னேடொத்த ’ என்றாரம்பித்து. ‘ மின்னேடொத்த ’ என்றது மிகவும் ஸூக்ஷ்மமாயும் அடுத்த க்ஷணத்தில் ஒழிந்து விடுமோ என்று

தரைப்படவும் தீயவுமான கோடியின் பருவத்தையுடையளுமான ஸ்ரீ ஜனக ராஜன் திருமகளை அபஹரித்த காரணத்தால் ஸ--வே

---

எண்ணத்தக்கதாயும் ஸஞ்சரிக்கும்பொழுது சஞ்சலமாயும் இருக்கிற படியால் மின்னலுக்கு ஸத்ருஶமான என்றபடி. ' நுண் ' என்று தனித்தருளிச்செய்யப்பட்டிருப்பதினால் அந்த ஸூக்ஷ்மத்வத்தைத்தவிர மற்றவைகளில்லாம்யங்கள் இங்கு விவக்ஷிதமாகக்கடவது. இவ்விடையாட்டத்தில் கண்வைத்தவர்கள் மற்றோர் இடையாட்டத்தில் கண் வைக்க மாட்டார்கள், ஆகையினாலேயிறே

' ஐயம் ஸீதா '

என்று ஸ்ரீ ஜனக ராஜன் தொட்டுக் காட்ட வேண்டியிருந்தது. 'மட' என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—' ஆத்ம ' இத்யாதியால். ஸ்த்ரீத்வத்திற்கு அஸாதாரணமான மடப்பத்தைச் சொன்னது மற்றைய வாத்ஸல்ய மார்த்தவாதி குணங்களுக்கு உபலக்ஷணம்என்று திருவுள்ளம். கோள் கலம் - சேமித்து வைக்கும் இடம், அதாவது அப்படிப்பட்ட குணங்களுக்கு இவள் ஒருவளே இருப்பிடம், மற்றவர்கள் அவற்றை இவளுடைய சேர்க்கையினால் பெறுகிறார்கள்என்றபடி. மற்றவர்களுடைய சீற்றத்தை இவளோ மாற்றவேண்டும், ஆகையினால் இவளையே வாத்ஸல்ய நிர்ப்பரை என்கிறது. இவ்வர்த்தத்தை காகாஸுரன் செய்த அபராதத்திற்கு மிஞ்சினதில்லையே ராவணன் செய்தது, ஆனபோதிலும் காகம் தலை பெற்று உய்ந்தது அவள் ஸந்நிதி உண்டாகையாலே, ராவணன் முடிந்தான் இவள் இல்லாமையால், இத்தனை வாசி உண்டிறே இவள் ஸந்நிதிக்கும் அஸந்நிதிக்கும், இவளைப் பிரிந்து பற்றுமவர்களுக்கு விநாஶமேயுள்ளது என்று ஶோதாஹரணமாக அபியுக்தர்கள் நிரூபித்தார்கள். உபக்னத்தை — கொள் கொம்பை. 'பருவத்தை ' என்றது

' வதிவஸம்யொம வஸஹுஹம் வயொ வீக்ஷ '

என்னப்பட்ட தசையை. இப்படிப்பட்ட குணங்களும் வடிவழகும் வயோ விஶேஷமுமிறே ரக்ஷகனை வாய் வெருவும்படி செய்தது

' வஸெவ ஓ வாஸஹதீஓநிஷிதாம் '

என்று. சாருததீம் — மாயா ம்ருகத்தைப் பிடித்துத்தரவேண்டுமெனக் கேட்ட பொழுது எந்த மந்த ஸ்மிதத்துடன் கேட்டாளோ அந்த மந்

லாசலத்தின் மேலான த்ரிகூடத்திற்கும் மேலிருந்த லங்கைக்குஅதி பனை ராவணனுடைய நீண்ட முடி பத்தையும் துகளாம்படிசெய்த

---

தஸ்மிதத்தோடே. அநிந்திதாம் - ஆத்ம குணங்களில் ஒரு குறைவும் சொல்லமுடியாத குண பூர்த்தியை உடையவள். அன்றிக்கே வடிவழ கில் ஒரு குறைவும் இல்லாதவளே என்றபடியாகவுமாம். இவளுடைய அஸந்நிதியாலேயிறே பகவான் எதிரில் ஸரணாகதனை நலிய வேண்டும் என்று

‘ வயஸ்தாஜேஷ உஜ்ஜாந ’

இத்யாதி வாக்யங்களை முதலிகள் விண்ணப்பம் செய்யும்படி நேர்ந்தது. இவளுடைய பிரிவினால் தனக்குண்டான துக்கத்தை

‘ நமெ ஊ:ஃவம் ஸ்ரியா ஊ-ரெ நமெ ஊ:ஃவம் ஹ்ரூதெ தி வா | வாதெவாநுமொசாமி வயொஸ்யாஹ்யதிவதடுதெ || ’

இத்யாதியாக பகவான் தானே அநுஸந்தித்தான். ந மே துக்கம் ப்ரி யா தூரே - ப்ரியையான பார்யை நூறு யோஜனை தூரத்திற்கு அப் பால் இருக்கிறாளே என்று துக்கமில்லை, அது ஒரு பயணம் எடுக்கத் தீருமாகையினால். ந மே துக்கம் ஹ்ருதேதி வா – பலிஷ்டனான ராவண னால் அபஹரிக்கப் பட்டாளே என்றும் துக்கமில்லை, அது ஓர் அம்பெ டுக்கத் தீருமாகையினால். ஏததேவாநுஸோசாமி இத்யாதி – சென்ற காலத்தை அப்படி ஓர் அம்பினாலோ பயணத்தினாலோ திருப்ப முடி யாதே என்பதற்காகவே நான் ஸோகிக்கிறேன். அதாவது இத்தனை காலமாய் இருந்த அநுபவம் இழந்ததே என்று ஸோகித்தானாயிற்று. ‘ லங்கைக்கு ’ என்றது மலை ஜலம் காடு எனப்படும் மூன்றுவிதங்களா யிருக்கும் மறைவுகளால் சூழப்பட்டிருந்ததினால் எதிரிகள் ஒருவரும் ஜயிக்க முடியாமல் இருந்த லங்கைக்கு என்றபடி. இந்த பலத்தை நம்பி யிறே ராவணன் தான் துர்ஜயன் என்று எண்ணியிருந்தது. அதை ஒழிப்பதற்காகவே அந்தக் கட்டுக் கோப்புக் குலையாமல் இருக்கச்செய் தே ராவணனை யுத்தத்தில் ஜயித்து, அவனுடைய தேர் முதலியவை களை உடைத்து, மொட்டைத் தலையாய்த் தரையில் நிற்கப் பண்ணி, ஒரு பாணத்தினால் கொல்ல வேண்டிய ஸமயத்தில் அவனை வதம் செய் யாமல்

யௌவனஸ்ரீயாலுள்ள பரம ரஸிகதை பெற்ற சக்ரவர்த்தித் திருமகன் இடம் காண் இவ்வஹீந்திரபுரம். ரத்ன பர்வதச் சாயையிலே அன்னமானது பெருத்து மலர்ந்த செங்கமலமாகிற படுக்கையிலே

---

‘ மஹாராஜாநதி ’

என்று ஊருக்குப்போய்ப் புதிய தேர் முதலியவைகளுடன் வரும்படியாக நியமித்தது. இது ‘ முடி பொடி செய்த ’ என்பதின் கருத்து. பரம ரஸிகதை பெற்ற — மிகவும் ரஸிகன் என்று கொண்டாடும்படி நின்ற. முதல் முதலில் ஸ்ரீ ராமன் பிராட்டியின் நிமித்தமாக யோகித்ததைக் கண்டு இப்படி ஒரு ஸ்த்ரீ நிமித்தமாக இவ்வளவு பாடு படுவர்களோ என்று கொண்டு பகவானைத் தாழ்வாக நினைத்திருந்த திருவடியே பிராட்டியை ஸேவித்து அவளுடைய வடிவழகில் ஈடு பட்ட பிறகு

‘ உஷ்ணம் க்ருதவாந் ராம: ’

என்றும்,

‘ யதி ராம: ஸமுத்ராந்தாம் மேதிநீம் பரிவர்தயேத் |
அஸ்யா ஹேதோ விசாலாக்ஷ்யா: யுக்தமித்யேவ மே மதி: || ’

என்றும் அநுஸந்தித்தாரிறே. அதாவது

‘ ஜகச் ஸமஸ்தம் பரிவர்த்யாஸ்ய ’

என்று சொல்லியதைச் செய்திருக்கவேண்டும் என்று அபிப்ராயப்பட்டாராயிற்று. அப்படிப்பட்ட பரமரஸிகத்வம் இங்கு அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது ‘ பரம ரஸிகதை ... இடம் காண் ’ என்றதினால் ரஸிகர்கள் வஸிக்க வேண்டிய இடம் இதுவேயாயிற்று என்பது த்யோதிதம். இப்படிப் பரம ரஸிகர்கள் இந்த க்ஷேத்திரத்தை உகப்பதற்கு காரணம் மேலே நிரூபிக்கப்படுகிறது. ‘ சேவலான ’ இத்யாதி — ஹம்ஸாவதாரம் செய்தருளி ஸாராஸார விவேகம் பண்ணி, ஸகல் நிகமங்களின் ஸாராம்ஸத்தை உபதேஸித்தவரான அன்னமதாயிருந்து அங்கு அறநூலுரைத்த எம்பெருமான் ஹேமாப்ஜ நாயகியான தன் பேடையோடு இனிதமருகின்ற இடம் இது என்றதாயிற்று. இப்படி ஸாராஸார விவேகம் பண்ணின பகவான் அமர்ந்த இடம் என்று கொண்டு சக்ரவர்த்தித் திருமகனும் இத்தையே தனக்கு வாஸஸ்தானமாக அங்கீகரித்தான் போலும். அன்றிக்கே ஹம்ஸ என்னும் பதத்துடன்கூடிய

சேவலான தான் தன் பேடையோடு இனிதமருமாய்த்து, அதாவது ஒன்றில் ஒன்று உறங்குதல், வீற்றிருத்தல், மது பானம் பண்ணுதல், உணர்த்தல் ஊடல் உதியாதபடி அணித்தாகவே இருத்தல், மால் விஞ்சினால் கலப்புதல் முதலானதுகளால் இனிமைப் படுகை, இங்

---

மந்திரத்திற்கு ப்ரதிபாத்யனாய்

'ஹம்ஸோ யதா க்ஷீரமிவாம்பு மிஶ்ரம்'

என்கிறபடியே ஸாரநிஷ்கர்ஷம் செய்தருளிய ஸ்ரீ தேஶிகன் தமக்கு ஶேஷபூதர்களான ஶிஷ்யர்களுடன்

'ந்ருவஸஉதிவஸவம் ஹம்ஸணீந்ருவாயுரம்'

என்கிறபடியே இங்கு இனிதமர்ந்து இருக்கக்கூடிய இடம் என்பதுஸூசிப்பிக்கப்படுகிறதாகவுமாம். அதுவுமன்றிக்கே அன்னம் என்றது அன்னவர் எனப்படும் பரிஶுத்த பரமைகாந்திகளாய் அவர்கள் வஸிக்கும் இடம் இது என்றபடியாகவுமாம். 'இனிதமர' என்பதை விவரித்தருளுகிறார்—'அதாவது' என்றாரம்பித்து. உறங்குதல் —அநுபவாநந்தம் உந்மஸ்தகமாய் நிர்வ்யாபாரமாயிருத்தல். வீற்றிருத்தல்—'விண்ணிலையில் வீற்றிருந்தாள்வர் எம்மா வீடே', 'வையம் மன்னி வீற்றிருந்து விண்ணுமாள்வர்', 'தொல்வினை தீர எல்லாரும் தொழுதெழ வீற்றிருப்பாரே' என்றிவை முதலியவைகளின்படியே அர்த்தாநுஸந்தானத்தில் ஈடுபட்டு வீறு தோன்ற இருத்தல். மது பானம் பண்ணுதல் — 'ஒண் சீராம் தெளி தேனுண்டு', 'அன்பில் இன்பீன் தேறல் அமுத வெள்ளத்தானாம் சிறப்பு',

'தவாம்ருதஸ்யந்திநி பாதபங்கஜே', 'ஸ்வாதுப்ரபந்நாந்'

இத்யாதிகளின்படியே தேன் போன்ற பகவானுடைய கல்யாண குணங்களை அநுபவித்தல். அணித்தாகவே இருத்தல் - 'குழாங்களாய் அடியீருடன் கூடி நின்றாடுமினோ' என்கிறபடியே ஒருவரை ஒருவர் அணுகி இருத்தல். 'மால்' இத்யாதி—பக்தியின் ஆதிக்யத்தினால் ஸம்ஶ்லேஷித்தல். அன்றிக்கே மால் - ஸர்வேஶ்வரனாகிய பகவான், விஞ்சினால் அவரைப்பட்டித் தங்களை அநுக்ரஹிக்க முன் வந்தால் 'வளவேழு' தலையெடுத்து ஓடாமல் அவனுடனே ஸம்ஶ்லேஷித்தல். இதற்கு த்ருஷ்டாந்தம் பாட்டிக்குரிய பழையவர் ராவணைப் பண்டொரு கால் மாட்டுக்கருள் தரு மாயன் மலிந்து வருத்தினது. இப்படிகளால் இனித

இனிதமரும் அன்னங்களுக்குச் செங்நேல் குலைகளானவை
நாக ஒரு படி உயர நின்று கவரி வீசுமாய்த்து, இப்படிக்கோ
ண்ணளியுள்ள இடமும் இந்தத் திருவஹீந்திரபுரமே என்கிருர்.

*விரை கமழ்ந்த மென் கரும் குழல் காரணம்*
*வில்லிறுத்து அடர் மழைக்கு*
*நிரை கலங்கிட வரை குடையெடுத்தவன்*
*நிலவிய இடம் தட மால்*
*வரை வளம் திகழ் மதகரி மருப்பொடு*
*மலை வளரகிலுந்தி*
*திரை கொணர்ந்தணை செழு நதி*
*வயல் புகு திருவயிந்திரபுரமே.* 8

ப — ரை. ] விரை - *வாஸனை*, கமழ்ந்த - *வீசுகிற*, மென் - *ம்ரு*
ள, கரும் — *கறுத்த*, குழல் — *திருக்குழல்களையுடைய பிராட்டி*
காரணம் — *நிமித்தமாக, அதாவது அவள் பொருட்டு*, வில் —
*ஶுல்கமாக வைக்கப்பட்ட ருத்திரனுடைய தனுஸ்ஸை*, இறுத்து
றித்து, அடர் — *அடர்ந்து பெய்த*, மழைக்கு, நிரை — *பசு மாடு*
கலங்கிட — *கலங்கி நிற்க*, வரை - *கோவர்த்தன கிரியை*, குடை-
யாக, எடுத்தவன், நிலவிய - *ஸ்திரமாக நிற்கும்*, இடம், தடம் —
லமாயும், மால் — *உயர்ந்ததாயும் இருக்கிற*, வரைக்கு - *மலைக்கு*,
— *அழகாக*, திகழ் — *ப்ரகாஶிக்கிற*, மறுப்பொடு — *ஒன்றுக் கொ*
*சண்டை செய்துகொண்டிருக்கும்*, மதகரி - *மதம் பிடித்த யானைக*
, மலை — *மலையில்*, வளர் — *வளருகிற*, அகில் — *அகில் மரங்களை*
உந்தி — *தள்ளிக்கொண்டு*, திரை - *அலைகள்*, கோணர்ந்து - *கொ*
*வந்து*, அணை — *அணைகிற*, செழு - *ஶ்லாக்யமான*, நதி — *கருட*

---

இடம் *இந்த க்ஷேத்திரம் என்றதாயிற்று. இப்படி இவர்கள்*
*தமர்ந்து நின்றமைக்கு அனுகுணமாக இங்குள்ள அசேதனங்க*
கிஞ்சித்காரம் *செய்யும் ப்ரகாரத்தை மேல்* ' செங்நேலார் ' *இத்யா*
ல் *நிரூபிக்கிருர் என்று திருவுள்ளம்பற்றி அதின் அர்த்தத்தை அரு*
செய்கிருர்— ' இங்ஙனே ' *என்றாரம்பித்து.*

*நதியானது,* வயல் புகு — *வயல்களிலே* புகும்படியான, திருவயிந்திர புரமே.

திவ்யஸௌகந்தம் கமழா நிற்பதாய் ம்ருதுதமமாய் மிகவும் கறுத்த திருக்குழல் கற்றை பெற்ற ஜனக ராஜன் திருமகளைப் பரிணயித்துக் கோள்ளுகைக்காக தனுர் பங்கத்தைப் பண்ணி, அடர்ந்து பெய்கிற கல் மழைக்கு ஆநிரை

---

‘ விரை கமழ்ந்த ’ *என்பதற்குத்தாத்பர்யம் அருளிச்செய்கிறார்* —‘ திவ்ய ஸௌகந்தம் ’ *என்றாரம்பித்து.*

**‘ தாமெஜ்ஜாகூர்த்திஉஹிர: ஷ்வயஉாத்தஉாமெஜ்: யஂ ஷவஞ ஹஸ ஊ தி ஷாஉாஉாஅஹஞி | ஆஜொஉஉந்ஊயிஹஹ்தி உாஷிகாஹி: வொஹி ஈவநீய காடிஜாஜகவாஹிதாஹி: ||’**

*என்கிறபடியே ஸர்வ கந்தன் என்று ப்ரஸித்தனான பகவானுக்கும் தன்னுடைய ஸம்பந்தத்தினால் ஒரு புதிய கந்தத்தை உண்டாக்கும் ஏற்றத்தையுடையவைகளன்றோ பிராட்டியின் திருக்குழல் கற்றைகள் என்று திருவுள்ளம். வாசம் செய் பூங்குழலாளிறே அவள்.* ‘ கரும் குழல் ’ *என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்*—‘ மிகவும் கறுத்த ’ *என்றாரம்பித்து. நித்ய ப்ருஹ்மசாரியான திருவடியையும்*

**‘ ஊஉாஉஹிக கெஶபாஞாஂ ’**

*என்று ஈடுபடும்படி பண்ணின கருமையையுடைய என்றபடி.* ‘ வில் லிறுத்து ’ *என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்* —‘ தனுர் பங்கத்தைப் பண்ணி ’ *என்று. ஜனக ராஜன் கன்யா ஶுல்கமாய் வைத்தது தன்னுடைய வம்ஶத்தில் ஆராதிக்கப்பட்டு வந்த ஶிவ தனுஸ்ஸை நாணேற்றுவதே. ஆனால் அது முன்பே பகவானுடைய ஹுங்காரத்தினால் ஈறுவிட்டுப் போயிருந்தமையினால் இப்பொழுது அதை எடுத்து நாண் ஏற்றும்பொழுது அந்த இழுப்புத் தாங்காமல் முறிந்துவிட்டது என்று தாத்பர்யம்.* ‘ அடர் மழைக்கு ’ *இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்*—‘ அடர்ந்து ’ *என்றாரம்பித்து. இப்படி மெல்லியள் தோள் தோய்வதற்காக வில்லிறுத்தது ஓர் விஶேஷமோ ஆநிரையைக் காக்க மலையை குடையாக எடுத்தவனுக்கு என்று அந்த வ்ருத்தாந்தத்தில் ஈடுபடுகிறார் என்று ஸங்கதி. இந்திரனுக்கு வழக்கமாகச் செய்யப்பட்டு வந்த பூஜையை கோவர்த்தனத்தை வ்யாஜமாக வைத்து*

1 ' அதீவாத்தம் '

என்னும்படியே நோவுபட்ட, பெரு மலையைக் குடையாக எடுத்தவன் அவ்வவதாரங்களுக்குத் தப்பினவர்களும் ஆஶ்ரயித்தும் அனுபவித்தும் உஜ்ஜீவிக்கும்படி நித்ய வாஸம் பண்ணுகிற இடம் காண் இவ்வஹீந்திரபுரம். விஶாலமாய் உயர்ந்த மலைகளில் அழகாக

---

பகவான் தானே அங்கீகரித்துக்கொண்டபடியினால் கோபத்தை அடைந்த இந்திரன் ஸர்வேஶ்வரனே ஸ்ரீ க்ருஷ்ணனாய் அவதரித்திருக்கிறான் என்பதை மறந்து, கோபர்களையும் கோக்களையும் ஹிம்ஸிப்பதற்காக பெரு மழையை வர்ஷிக்க, பகவானும் அந்தக் கோவர்த்தனத்தையே தூக்கிக் குடையாகப் பிடித்து ரக்ஷித்தது ப்ரஸித்தமிறே. ' மழை வந்து எழு நாள் பெய்து மாத்தடுப்ப ' இத்யாதி இங்கு அனுஸந்தேயம். அதீவார்த்தம் - மிகவும் நோவு பட்டன.

' ததஸ்து கோகுலம் ஸர்வம் கா கோபீ கோபஸங்குலம் | அதீவார்த்தம் ஹரிர் த்ருஷ்ட்வா மைத்ரேயாசிந்தயத்ததா ||'

என்று பூர்ண ஶ்லோகம். ' வரை குடை ' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—' பெருமலையை ' என்றாரம்பித்து. இப்படித் தன்னை நம்பியிருந்த கோ கோபாலர்கள் துயர் படுவதைக் கண்டு அவர்களைக் காப்பாற்றுவதற்காக முன்பு எந்தக் கோவர்த்தனம் என்கிற மலை அவர்களைக் காப்பாற்றும் என்று சொன்னானோ அந்த மலையையே தூக்கிப்பிடித்து அவர்களைக் காப்பாற்றினான் என்று தாத்பர்யம். அன்றிக்கே அருகில் கிடக்கும் எதாவதொன்றை எடுப்பது குழந்தைகளின் ஸ்வபாவமாகையினால் அருகில் இருந்த மலையைத்தூக்கினான் என்றாகவுமாம். அதுவுமன்றிக்கே ' கல்லெடுத்துக் கல்மாரி காத்தாய் ' என்கிறபடியே இந்திரன் கல் மாரி பெய்தபடியினால் அதைக் கல்லெடுத்துத் தடுத்தான், அவன் நீர் மழை பெய்திருந்தால் கடலை எடுத்துக் காப்பான் போலும். ஸர்வ ஶக்தனுக்கு இன்ன வஸ்துவைக் கொண்டு இன்ன கார்யம் செய்ய வேண்டும் என்கிற நிர்ப்பந்தம் இல்லையென்றபடியாகவுமாம்.

1. விஷ்ணு புராணம் – 5 - 11 – 13.

விளங்கா நின்றுள்ள மதம் ஒழுகு கஜங்கள் ஒன்றுக்கொன்று பிணங்கினபடியாக இருந்தபடியே இருக்க, மலையிலே வர்ஷிக்கவே அம்மலை அருவிகளானவை அவ்வானைகளையும் அம்மலையில் நிஸ்ஸங்கோசமாக வளருகிற அகில் மரங்களையும் வேர்ப் பிடுங்கலாகத் தள்ளிக் கொண்டு வந்து திரை மேல் திரைகளாக இரு கரையும் ஒத்து செழித்து வருகிற நதியில் அணைவிக்க, அந்நதியால் அவ்வானைக

---

'ஸஹஸ்ராகார வஸுந்தராணாம்'

என்னப்பட்டதிறே. மற்றப் பாட்டுக்களில் 'இடம்' என்று மாத்திரம் ப்ரயோகித்து, இப்பாட்டில் 'நிலவிய இடம்' என்று அருளிச்செய்யப்பட்டிருப்பதினால் அந்த 'நிலவிய' என்கிற விசேஷணத்திற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'அவ்வவதாரங்களுக்கு' என்றாரம்பித்து. அந்தந்த அவதாரங்களுக்கு எந்த எந்த விசேஷ வைலக்ஷண்யங்களுண்டோ அவைகளுடன் இப்பொழுதும் இந்த க்ஷேத்திரத்தில் ஸேவை ஸாதிக்கிறான் என்று தாத்பர்யம். 'தடமால் ... அகிலுந்தி' என்று ஆற்றின் மிடுக்கும், 'வயல் புகு' என்று அந்த மிடுக்கு எல்லாம் ரக்ஷ்ய வர்க்கத்தில் ஏகதேசமாகும்படி அடங்கும் ஸௌலப்யமும் அருளிச்செய்யப்பட்டதாகிறது, அதாவது இந்நதியும் பகவானைப்போலே பரத்வ ஸௌலப்யங்களையுடையது என்றதாயிற்று. அன்றிக்கே அப்படிப்பட்ட பெரிய மிடுக்கையுடைய நதியையும் பகவானையும் தன்னுடைய ஸம்பந்தத்தினால் பரம ஸுலபர்களாக்கும் தன்மையுடையது என்று க்ஷேத்திரத்தின் பெருமை தெரிவிக்கப்படுகிறதாகவுமாம். 'தட மால்' இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'விசாலமாய்' என்றாரம்பித்து. 'மறுப்போடு' என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'ஒன்றுக்கொன்று' என்றாரம்பித்து. இப்படி இவைகள் பரஸ்பரம் யுத்தோன்முகங்களாய் நின்றால் இவைகள் வயலில் புகுந்தபடி எங்ஙனே என்ன அருளிச்செய்கிறார்—'மலையிலே வர்ஷிக்கவே' என்றாரம்பித்து. மழை ஜலத்தின் வெள்ள ப்ரவாஹத்தினால் இந்த யானைகளும் மரங்களும் தள்ளப்பட்டு ஊருக்கருகாமையிலுள்ள வயலுக்குள் தள்ளப்பட்டன என்று திருவுள்ளம். ஸ்ரீ வைநதேயன்

'ஸாநகௌ ராயா நுவஸாக ஸாரவி நவ உவெ வா

ளும் அந்த மரங்களும் அவ்வூர் வயலில் புகுமாய்த்து, இப்படிக் கோத்த திருவஹீந்திரபுரமே வில்லிறுத்து வரை குடை எடுத்த வன் நிலவிய இடம் என்கிறார். 8

வேல் கொள் கைத்தலத்தரசர் வெம்போரினில்
விசயனுக்காய் மணித்தேர்
கோல் கொள் கைத்தலத்தெந்தை
பெம்மானிடம் குலவு தண் வரைச்சாரல்
கால் கொள் கண் கொடிக்கை யெழக்
கமுகிளம் பாளைகள் கமழ் சாரல்
சேல்கள் பாய் தரு செழு நதி
வயல் புகு திருவயிந்திரபுரமே. 9

ப - ரை.] வேல் — வேல் என்னும் ஆயுதத்தை, கோள் — தரித்துக் கொண்டிருக்கிற, கைத்தலத்து — கைகளையுடைய, அரசர்-ராஜாக்களின், வெம்போரினில் — க்ரூரமான யுத்தத்தில், பாரதயுத்தத்தில் என்றபடி, விசயனுக்காய் — அர்ஜுநனுக்கு உதவியாக நின்று, மணித்தேர் - ச்லாக்யமான தேரில், கோல் கோள் — கோலை ஏந்திக் கொண்டிருக்கிற, கைத்தலத்து — திருக்கைகளையுடைய, எந்தை — எனக்கு ஸ்வாமியாய், பெம்மானிடம் - தேவதைகளுக்கு நாதனானவனுடைய வாஸஸ்தானம், குலவு — கொண்டாடத் தகுந்ததான, தண் —குளிர்ந்தி பொருந்திய, வரைச் சாரல் — மலைத் தாழ்வரையில், கால் - வெற்றிலைக் கொடிக்காலை, கோள் — அடக்கிக் கொண்டிருக்கிற, அதாவது அது மறையும்படி வ்யாபித்துக்கொண்டிருக்கிற, கண் - கணுக்கள் தோறும்,

---

உவெ மண ஔெமெ தூணுரெ கண ரமெ தூதா
வ ஜமெ நிவிபுஸெஷம் யாயாதூ'

என்கிறபடியே சண்டை செய்து கொண்டிருந்த யானையையும் ஆனையையும் தம்முடைய நகத்தில் இடுக்கிக்கொண்டு புறப்பட்டாப்போலே அவருடைய திருநாமம்பெற்றதும் அவரால் உண்டாக்கப்பட்டதுமான இந்த நதியும் சண்டை செய்து கொண்டிருந்த யானைகளைத் தள்ளிக் கொண்டு வந்தது என்று திருவுள்ளம். 8

கோடி - கொடிகளாகிற, கையேழ — கைகள் வ்ருத்தி அடைய, கமுகு - பாக்கு மரங்களுடைய, இளம் பாளைகள், கமழ் - பரிமளம் வீசுகிற, சாரல் - சாரல் காற்றை உட்கொள்ளுகிற, சேல்கள் - மத்ஸ்யங்கள், பாய் தரு — தாவும்படியான, செழு நதி - செழிப்பையுடைய கருட நதி, வயல் புகு - வயலில் புகும்படியான, திருவயிந்திரபுரமே. 9

பகதத்தன் விஜயன் மேல் ஶக்தியை விட்டபோது அரசர்கள் எல்லாம் தங்கள் கைத்தலத்தில் வேலாகிற ஆயுதங்களைக்கொண்டு வெவ்விய போர் செய்யா நிற்கிற அந்த பாரத ஸமரத்தில் அவன் விட்ட ஶக்தியைத் தன் மார்பில் ஏற்று விஜயனுக்கு ரக்ஷகனாய் அவனையும் அவர்களையும் தான் ஜயித்து, அந்த ஜயமும் விஜய

---

பாண்டவர்களுக்கு உதவி புரிவதற்காக ஸர்வேஶ்வரன் அர்ஜ்ஜுநனுக்குத் தேர்ப் பாகனாகி நின்ற பாரத யுத்தத்தில் எல்லா அரசர்களும் வேலைக் கையில் வைத்துக்கொண்டு நின்ற ஸமயத்தை நிரூபித்தருளுகிறார்—' பகதத்தன் ' என்றாரம்பித்து. விஜயன் - அர்ஜ்ஜுநன். வெவ்விய — க்ரூரமான, அதாவது மிகவும் பயங்கரமான. ' ஓர் பாரத மாப் பெரும் போர் ' என்னப்பட்டதிறே. ' விசயனுக்காய் ' என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—' அவன்விட்ட ' என்றாரம்பித்து.

' உரஸா தாரயாமாஸ பார்தம் ஸஞ்சாத்ய மாதவ: '

என்கிறபடியே ஸர்வேஶ்வரன் அதைத் தன் திருமார்பில் ஏற்றுக்கொள்ளாவிடில் அது அர்ஜ்ஜுநனைக் கொன்றே இருக்கும், தனுர்வித்யையில் பாரங்கதன் என்று பேர் பெற்ற அவனுக்கும் அந்தஶக்தியைக் கண்டிக்கப் போதுமான பாணம் இல்லாமையினால் பகவானே அதைத் தன் மார்பில் ஏற்றுக்கொண்டு அவனைக் காப்பாற்றினது தெரிவிக்கப்படுகிறது. இப்படிப் பிராட்டிக்கு அஸாதாரணமான திருமார்பில் அங்கீகரித்தது ' செய்ய திருமாமகள் என்றும் சேரும் திருமார்பில் இம்மணிக்கோவையுடன் ஏற்கின்றார் எந்தன் இம்மும்மணிக்கோவை மொழி ' என்னப்பட்ட ஒரு பாமாலையன்றியே மற்றொருவராலும் தாங்கமுடியாத ஒரு ஆயுதமாகையினால் பகவானுக்கு அவனி

டத்திலுள்ள பக்ஷபாதம் தெரிவிக்கப்படுகிறது. இப்படிப்பட்ட குண விசேஷத்தில் ஈடுபட்ட ஆசார்யனும்

'உக்ரம் தைத்ய விமர்தக்ஷதவத் ஸஜ்ஜம் வீரவத் தே விமாய நாயக ஸாஹஸ்ரம் | ஸ்ரீவத்ஸ கௌஸ்துப ரமா வநமாலிகாங்கம் விஜ்ஞாநமாதிய முகுதே வரிதா யத்தாம் நமஃ ||'

என்று அனுஸந்தித்தாரிறே. இங்கு தைத்ய என்றது

'உக்ர நரவ வ்யாஜ தைத்யாநீக ஸதாகூர'

என்கிறபடியே தைத்யாநீகமான அரசர்களைக் குறிக்கிறது. பத்ரபங்கம் என்பதினால் இப்படிப்பட்ட ஆஸ்ரித ரக்ஷணோபயுக்தமான குண விசேஷங்களைத் தெரிவிக்கிறபடியினாலே அந்த விரவ்ரணங்கள் எல்லாம் அலங்காரமாயிற்று என்பது த்யோதிதம். ஸ்ரீவத்ஸ இத்யாதியால் இப்படிப்பட்ட ஸர்வோத்க்ருஷ்டங்களான வஸ்துக்களைத் தரித்துக் கொண்டிருக்கிற திருமார்பில் எதிரிகள் விட்ட அம்புகளையும் ஏற்றுக் கொள்ளுவது தெரிவிக்கப்படுகிறது. வீரஸ்ய - ஆஸ்ரித விரோதி நிரஸனத்தில் அவனுடைய வீர குணம் இப்பொழுதாக ப்ரகாசிப்பிக்கப் பட்டது.

'தம் த்ருஷ்ட்வா ஸத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம் | பபூவ ஹ்ருஷ்டா வைதேஹீ பர்தாரம் பரிஷஸ்வஜே ||'

என்கிறபடியே பிராட்டியும் இந்த ஆஸ்ரித ரக்ஷணோபயுக்தமான வீரத்வத்திலிறே ஈடுபட்டது.

'தம் த்ருஷ்ட்வா பபூவ, தம் ஸத்ருஹந்தாரம் த்ருஷ்ட்வா ஹ்ருஷ்டா பபூவ, தம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம் த்ருஷ்ட்வா பர்தாரம் பரிஷஸ்வஜே'

என்று அந்வயித்து யோஜிக்கவும். காட்டில் கஷ்டப்பட வேண்டிவரு மென்கிற காரணத்தினால் பிராட்டியை அழைத்துக் கொண்டுபோகமாட்டேன் என்று பகவான் சொன்னபொழுது, அதை நம்பாமல்

'ஸ்த்ரியம் புருஷ விக்ரஹம்'

என்று அவனுடைய வீரத்வத்தைக் கர்ஹித்த அவள் திருமுன்பே

பராக்ரமத்தைக் காட்ட வேண்டும் என்று பகவான் திருவுள்ளம்பற்றி இளைய பெருமாளையும் வரவேண்டாம் என்று நிர்ப்பந்தித்து நியமித்தருளி, தான் ஒருவனாய் யுத்தம் செய்யப் புறப்பட்டபொழுது

‘ வதாவுரய ஸஹஸ்ராணி ரக்ஷஸாம் பீமகர்மணாம் |
ஜநஸ்த ராமோ யுத்தே கதம் யுத்தம் ஹவிஷ்யதி || ’

என்று மஹர்ஷி நெஞ்சாறல் பட்டாப்போலே பிராட்டியும் வயிறு பிடித்துக்கொண்டு நிற்கும்பொழுது பகவான் ஜயத்துடன் திரும்பி வந்து முன் நின்றதும் தன் பர்த்தாவை உயிருடன் பார்க்கப் பெற்றபிறகே பிராட்டி தான் உயிர்பெற்று நின்றாளாயிற்று. வீரபத்னியும் ப்ரீதியின் ஆதிக்யத்தினால் அத்தலைக்கு என்ன தீங்குவருகிறதோ என்று ஶங்கிப்பது ஸ்வரூப ப்ராப்தமிறே. அந்த ஸமயத்தில் அபஜயத்துடன் பகவான் திரும்பி வந்தாலும் உயிருடன் வந்தால் போதும் என்கிற நிலையில் இருந்தாள் என்பது ‘ தம் த்ருஷ்ட்வா பபூவ ’ என்கிற யோசனையில் ஏற்பட்ட அர்த்தம். ‘ தம் ஶத்ரு ஹந்தாரம் த்ருஷ்ட்வா ஹ்ருஷ்டா பபூவ ’ என்கிற அந்வயத்தில் தான் சென்ற கார்யத்தைச் செவ்வனே முடித்துக்கொண்டு, அதாவது ராக்ஷஸர்களை குறையாடி விட்டுத் தன் முன்பே அந்த வீரஶ்ரீயுடன் நிற்பதைக்கண்டு ஸந்தோஷத்துடன் கூடினவளாய் நின்றாள் என்று தாத்பர்யம். தன்னைக் காப்பாற்றுவதற்கென்றே வெகு காலம் சோறிட்டு வைத்திருந்தும் பாணாஸுரனுக்கு உதவ வேண்டிய பூசல் தலையில் ஓடுமவர்கள் இந்த்ர தேவதைகளிறே. பகவான் ஒருவனே ஆஶ்ரிதர்களை ஒருபொழுதும் கைவிடாமல் அவர்களுடைய விரோதிகளை நிரஸிக்கும் ஸ்வபாவமுடையவன். இப்படி ராக்ஷஸர்களைக் கொன்றதும் அங்கு இருந்த மஹர்ஷிகள் இனித் தாங்கள் நிர்ப்பயமாய் யஜ்ஞாதிகளைச் செய்யலாம் என்று ஸந்தோஷப்பட, தன்னுடைய ஸ்தநந்தயர்கள் போன்ற அந்த ரிஷிகளினுடைய ஸந்தோஷத்தினால் தானும் ப்ரீதியடைந்த பிராட்டி அப்படிப்பட்ட ப்ரீதி தனக்கு உண்டாயிற்று என்பதைத் தெரிவித்த ப்ரகாரம் மேல் ‘தம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம் த்ருஷ்ட்வா பர்த்தாரம் பரிஷஸ்வஜே ’ என்னப்படுகிறது. பார்யை தனக்குள்ள ப்ரீதியைக் காட்டுவது இப்படியேயிறே. பர்த்தாவும் பார்யையை ஸம்மானிப்பதும் இப்படியே.

‘ பதி ஸம்மாநிதா ஸீதா ’

னுக்கேயாம்படி தானவனுக்கானவனாய், ஶ்லாக்யமான தேரிலே

---

என்னப்பட்டதிறே. இப்படி ஸ்ரீ ஜனகராஜன் திருமகளான பிராட்டி பகவானுடைய வீரஶ்ரீயில் ஈடுபட்டாப்போலே இந்தத் தூப்புல் குலத்தில் அவதரித்த பிராட்டியும் அடியவர்க்கு மெய்யனுடைய வீரத்வ ப்ரதர்ஶக வ்ருத்தாந்தங்களை, அனுபூய — அனுபவித்து, அனுஸந்தித்தாராயிற்று. 'அந்த ஜயமும் விஜயனுக்கேயாம்படி' என்றது இப்படித் தானே ப்ரதானமாய் நின்று பாரத யுத்தத்தை நடத்தினாலும் அத்தால் வந்த பெருமை அர்ஜ்ஜுநனைச் சேரும்படி செய்தான் என்றபடி. தான் தேர்ப்பாகனாகி நின்றபடியினால் தன்னுடைய செயல்களினால் உண்டானபெருமையெல்லாம் யஜமானனாகிய அர்ஜ்ஜுநனையே அடைந்தது என்றபடி. அன்றிக்கே பாரத யுத்தத்தை நடத்தினது பகவானுக்கு ஒரு பெரிய கார்யமல்ல, அந்த ஜயத்தின் பெருமையை எல்லாம் பார்த்தன் தலையில் ஆரோபிப்பதே பெரிய ஶ்ரமமாயிற்று என்றபடியாகவுமாம். அதாவது ஆயுதத்தைக் கீழே எறிந்துவிட்டு ஓடினவனை அவற்றை எடுக்கும்படி செய்ததும், பீஷ்மாதிகளைக் கொல்லுவதற்குத் தயங்கின பொழுது அவனுடைய புத்தியை மாற்றிக் கொல்லும்படி செய்ததும், தர்ம புத்திரரைப் பொய் சொல்லும்படி செய்ததும், தேரை அழுத்தி கர்ணனுடைய நாக பாஶத்தினின்றும் காப்பாற்றினதும், பகலை இரவாக்கினதும், இவை போன்ற இன்னும் அநேகம் கார்யங்களைச் செய்ததும் இதற்காகவேயிறே.

'மயைவைதே', 'நிமித்தமாத்ரம் பவ ஸவ்யஸாசிந்'

என்று பகவான் தானே அருளிச்செய்தானிறே. அதாவது இவர் பீஷ்மாதிகளைக் கொல்ல வேண்டும் என்று நான் முற்கணவே ஸங்கல்பித்து விட்டேன், அதை மாற்ற ஒருவராலும் முடியாது, நீ கேவலம் நிமித்தமாக இருந்து அத்தால் வரும் கீர்த்தி முழுவதையும் அடை என்றபடி. 'மணித் தேர்' என்பதை விவரித்தருளுகிறார்— 'ஶ்லாக்யமான தேரிலே' என்று.

'உஹ்யதி ஸ்யந்தநே ஸ்தித:'

என்றான் மஹர்ஷி அதை வர்ணிக்கமுடியாமல். ஆசார்யரும்

'ஹரணிவெ வாயவு ரமெ'

என்றும், 'சிலை விசயன் தேரணியச் சிறு வேதத்தே' என்றும் அரு

தன் கையிலே உழக் கோலைக் கொண்டு அவர்களைத் தேர்க் கால் கொண்டே நெருக்கி நின்று, அச்செயலால் என்னை எழுதிக் கொண்ட அமராதிபனுக்கு இடமானது திருவஹீந்திரபுரமே என்று அந்வயம். தன்னையே கொண்டாட வேண்டும்படியான குளிர்ந்த ஔஷதாசலத்தினுடைய கடகங்களிலே வெற்றிலைத் தோட்டத்துக்

---

ளிச்செய்தார். அதாவது ப்ரணவம் ஸர்வோத்க்ருஷ்டமாகிறாப் போலே இந்தத் தேரும் ஸர்வோத்க்ருஷ்டமானது என்றபடி. அன்றிக்கே பாரத யுத்தம் முடிகிற வரையில் எதிரிகளினுடைய பாணங்களை எல்லாம் தாங்கிக்கொண்டிருந்து அது முடிந்ததும் அர்ஜ்ஜுநனும் பகவானும் கீழே இறங்கினதும் பற்றி எரிந்து போகும்படியான பகவதநுக்ரஹத்தைப் பெற்ற தேர் என்றபடியாகவுமாம். ‘கோல்கொள்’ இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—‘தன் கையிலே’ என்றாரம்பித்து. ‘சொல்லா மாக்கோல்’ என்னப்பட்டதிறே. அதாவது கொல்லுவதற்கு ஶக்தி லேஶம் கூட இல்லாத ஒரு கோலைக் கொண்டு எல்லாக் கொல்லுதலையும் செய்தானாயிற்று. அதாவது குதிரையைத் தட்டி ஓட்டும் கருவியைக் கொண்டு பாரத யுத்தம் முழுமையும் நடத்தினான் என்றபடி. ‘எல்லாச் சேனையும் இரு நிலத்தவித்தவெந்தாய்’ என்கிறபடியே இக்கோல் கொண்டு அவன் செய்த கார்யத்தை நிரூபித்தருளுகிறார்—‘அவர்களை’ இத்யாதியால். ‘எந்தை’ என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—‘அச்செயலால்’ என்றாரம்பித்து. ‘பெம்மான்’ என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—‘அமராதிபனுக்கு’ என்று. இப்படிப் பாண்டவர்களை ரக்ஷித்தது தேவ ப்ரக்ருதிகளானவர்களை ரக்ஷித்ததாயிற்று என்று திருவுள்ளம்.

‘ஸாயீந விஶ்விஸவம் ஸமவஹ விஶேஷாத் ஸ்வாம் செ
வந்தாயக்ஷேஶஷ்ணி பரமாவஸஜ்ஜா:’

என்றது இங்கு அநுஸந்தேயம். ‘குலவு’ இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—‘தன்னையே’ என்றாரம்பித்து.

‘ஸ்ஹாவஶ்ச ஸஹாஶாந வஶ் ஶ்ரீநாம்’,

‘ஸ்வஸ்ய ஜலவ்ருக்ஷ ஶிரிம் ஸ்ருணஞ்ஜி தேவா:’

என்னப்பட்டதிறே. கடகங்களிலே – தாழ்வரைகளிலே. ‘கால்’

குள் கிடங்குகளானவை மறையும்படியாக கணுத் தோறும் கொடிகளை விட்டு எழுந்த கைகளையுடைத்தாக, இவ்வூரில் முளைத்ததெல்லாம் ஸ்வாஶ்ரயங்களை முழுத்திக்கொள்ளுமாய்த்து, கமுகுகளினுடைய இளம் பாளைகளானவை விரிய, அதின் பரிமளத்தோடு கூடின சாரல் காற்றை மத்ஸ்யங்கள் தன் வயிற்றில் உட்கொண்டதாய் தன்னில் பாயும்படி பண்ணுகிற செழிப்புடைய நதியானது வயலில் புகும்படியான திருவஹீந்திரபுரமே பெம்மானது இடம் என்கிறார். 9

மூவராகிய ஒருவனை
மூவுலகுண்டு உமிழ்ந்தளந்தானை

---

*இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'வெற்றிலை' இத்யாதியால். கோள்கையாவது தன்னுள்ளே அடக்கிக்கொண்டிருக்கை என்கிற திருவுள்ளத்தினால் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'மறையும்படியாக' என்று. 'கால் கோள்' என்பதையும், 'செழு நதி' இத்யாதியையும் கடாக்ஷித்துத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'இவ்வூரில்' இத்யாதியால். அதாவது கிடங்குகளைத் தன்னுள்ளே அடக்கிக்கொள்ளும்படியான வெற்றிலைக் கொடிகளையும், கதிரைத் தன்னுள்ளே அடக்கிக்கொள்ளும் வயல்களையும் போலவே ஸர்வாஶ்ரயபூதனான பகவானையும் தன்னுள்ளே அடக்கிக்கொண்டிருக்கிறது இத்திருவஹீந்திரபுரம் என்று தாத்பர்யம். தேர்த்தட்டில் இருந்துகொண்டே*

'வஸூ்ராஜி ஜெவாநு தவ ஜெவ ஜெ.ம'

*என்கிறபடியே ஸர்வ ஜகதாஶ்ரயமான ரூபத்தைக் காட்டின ஸ்ரீ க்ருஷ்ணாவதாரத்தை 'கோல் கோள்' இத்யாதியால் இங்கு உதாஹரணமாய் அருளிச்செய்தபடி என்றறியத்தக்கது. 'கமுகு' இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'கமுகுகளினுடைய' என்றாரம்பித்து. 'கமழ்' என்பதற்கு அர்த்தாத் ஸித்தமான அர்த்தத்தை அருளிச்செய்கிறார்—'விரிய' என்று. 'சாரல், சேல்கள்' என்கிற பதங்களின் சேர்க்கையினால் ஏற்பட்ட அர்த்தத்தை நிரூபித்தருளுகிறார்—'சாரல் காற்றை' என்றாரம்பித்து.* 9

தேவர் தானவர் சென்று சென்றிறைஞ்சத்
தண் திருவயிந்திரபுரத்து
மேவு சோதியை வேல்வலவன்
கலிகன்றி விரித்துரைத்த
பாவு தண் தமிழ் பத்திவை
பாடிடப் பாவங்கள் பயிலாவே. 10

முதல் திருமொழி முற்றிற்று.

திருமங்கையாழ்வார் திருவடிகளே ஶரணம்.

ப - ரை. ] மூவராகிய - ப்ரும்மா ருத்திரன் இந்திரன் எனப்படும் மூவரும் தானேயாகும்படியான, ஒருவனை — அத்விதீயனானவனை, அதாவது அவர்களுக்கு அந்தர்யாமியானவனை, மூவுலகு — மூன்று லோகங்களையும், உண்டு — ப்ரளய காலத்தில் வயிற்றில் வைத்து, உமிழ்ந்து - ஸ்ருஷ்டி காலத்தில் வெளியே தோன்றும்படி உமிழ்ந்து, அளந்தானை - அன்பர்களினால் ஆக்ரமிக்கப்பட்ட அளவில் அளந்துகொண்டவனை, தேவர் — தேவதைகளும், தானவர் — அஸுரர்களும், சென்று சென்று — அடிக்கடி போய், இறைஞ்ச — ஆஶ்ரயிப்பதற்காக, தண் — குளிர்ந்ததான, திருவயிந்திரபுரத்து - திருவஹீந்திரபுரம் என்னும் க்ஷேத்திரத்தில் வஸிக்கிறதாய், மேவு — எல்லா வஸ்துக்களையும் விட மேற்பட்டதாயிருக்கும், சோதியை — ஜ்யோதிஸ்ஸான பகவானை, வேல் — வேலாயுதத்தில், வலவன் — மிகுந்த ஸாமர்த்தியத்தையுடைய, கலிகன்றி — கலியை நாசம் செய்யுமவரான திருமங்கையாழ்வார், விரித்துரைத்த — விஸ்தாரமாக அருளிச்செய்த, பாவு — பரவுகிற, தண் — ஶீதளமான, தமிழ் — த்ரமிட பாஷையில் அருளிச்செய்யப்பட்ட, இவை பத்து — இந்தப் பத்துப் பாட்டுக்களையும், பாடிட — பாட, பாவங்கள் — பாபங்கள், பயிலாவே - கிட்டாவே. 10

1 ‘ஶரஷ்டம் ததஃ க்ஷமிஷ்யாமி’

1. விஷ்ணு தர்மம் — 68 - 51.

இத்யாதி ப்ரமாணப்படியே தத் தத் கார்யார்த்தமாக ப்ரும்ம ருத்ர இந்திரர் மூவரும் தானேயானவனை, த்ரைலோக்யத்தையும் உண்டும் உமிழ்ந்தும் அளந்தவனை, தேவரும் தானவர்களும் ஸ்வ ஸ்வாபேக்ஷித ஸித்திக்காக வெவ்வேறே கூட்டம் கூட்டமாகச் சென்று ஆஶ்ரயிக்கும்படி ஸுக ஶீதளமான திருவஹீந்திரபுரத்திலே நித்ய வாஸத்தால் அத்யுஜ்வலனானவனை, அவன் ஆழி வலவன், தான்

---

'மூவராகிய ஒருவனை' என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'ஸ்ருஷ்டிம்' இத்யாதியால். (ஓ! ப்ரும்மாவே, உனக்கு அந்தர்யாமியாய் நின்று) தத: - பிறகு, ஸ்ருஷ்டிம் - ஸ்ருஷ்டியை, கரிஷ்யாமி - செய்யப்போகிறேன். 'அரன் அயனென உலகழித்து அமைத்துளனே' என்றாரிறே மயர்வற மதி நலமருளப்பெற்றவரும். தத் தத் கார்யார்த்தமாக — அவரவர்கள் செய்யும் அந்தந்தக் கார்யங்களுக்காக, அதாவது பகவான் அவர்களுக்கு அந்தர்யாமியாய் அந்தந்தக் கார்யங்களைச் செய்யாவிடில் ப்ரும்மாதிகள் தங்கள் தங்கள் தொழிலைச் செய்யமுடியாது என்று தாத்பர்யம். 'அமரரும் யாவையும் யாவரும் தானும் அமைவுடை நாரணன்' இத்யாதிகளைத் திருவுள்ளம் பற்றி 'மூவரும் தானேயானவனை' என்று அருளிச்செய்யப்பட்டது. கீழ் திருமொழியில் 'தூய நான்மறையாளர் சோமுச் செய்ய' என்றும், 'தீபம் கொண்டு அமரர் தொழ' என்றும் அருளிச்செய்யப்பட்டிருப்பதினால் தேவதைகளும் வைதிக ப்ரக்ருதிகளான நான் மறையாளர்களுமே ஆஶ்ரயிக்கும்படி நின்றருளினமை நிரூபிக்கப்பட்டது. இத்திருமொழியிலோ தேவாஸுர விபாகமற ஸர்வ ஸமாஶ்ரயணீயனாய் நிற்கும் ப்ரகாரம் அருளிச்செய்யப்படுகிறது என்கிற வித்யாஸம் அறியத்தக்கது. 'மூவுலகுண்டு' இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'த்ரைலோக்யத்தையும்' என்றாரம்பித்து. 'தேவர்' இத்யாதிக்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'தேவரும்' என்றாரம்பித்து. 'சென்று சென்று' என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'ஸ்வ ஸ்வாபேக்ஷித' இத்யாதியால். 'தண்' என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'ஸுக ஶீதளமான' என்று. 'மேவு சோதியை' என்பதற்கு அர்த்தம் அருளிச்செய்கிறார்—'அத்யுஜ்வலனானவனை' என்று. இப்படி இங்கு ஔஷதாசலத்தில் ஸேவை ஸாதிக்கிறபடியினாலே குன்றத்தில் ஏற்றின விளக்குப் போலே மிகவும்

வேல் வலவன், அவன் கலிக்கும் ப்ரவர்த்தகன், தான் கலிகன்றி, அவன் குவித்து உரைத்தது கீதை, தான் விரித்துரைத்தது சந்தஸ்ஸோடு கூடினதான ஸாரமிது,

---

ப்ரகாஶமாய் நிற்கிறான் என்பது த்யோதிதம். இத்தால் பரமபதத்தைக் காட்டிலும் அதிகமான ஔஜ்வல்யத்துடன் இங்கு ஸேவை ஸாதிப்பது விவக்ஷிதமாகிறது. திவத்திலும் பசு நிரை மேய்ப்பு உவந்தவனுகையாலே இந்த விபூதியையிறே அவன் போரஉகந்திருப்பது. ஸ்திரஜ்யோதிஸ் என்றிறே இந்தஎம்பெருமானுக்கு ஒருவிஶேஷத்திருநாமம். 'வேல் வலவன்' என்று தம்மை நிரூபித்துக்கொண்டதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'அவன்' என்றாரம்பித்து. எம்பெருமானுக்கும் ஆழ்வாருக்கும் உள்ள வாசியை மேலே விஸ்தாரமாக நிரூபிக்கிறார். 'ஆழி வலவன்' என்றது தன்னுடைய பொய்யை மெய்யாக்க வல்ல ஒரு திவ்ய ஆயுதத்தைக் கையில் ஏந்தி நிற்குமவன்என்றபடி. அதாவது பகலை இரவாக்கவும் இருட்டில் வெளிச்சம் கொடுத்து வழி காட்டவும் துணையாயிருக்கும் பகவானுடைய திருவாழி,ஆழ்வாருடைய வேலோ ஆஶ்ரித ஸம்ரக்ஷணைகாந்தமாயிருக்கும் என்றதாயிற்று. 'கலிக்கும் ப்ரவர்த்தகன்' என்றது

'காலஸ்ஸஹிவ ஜநார்த்தந:',

'கால சக்கரத்தான்' இத்யாதிகளிற்படியே பகவான் கால பரிணமங்களுக்கெல்லாம் பொதுவான காரணமாய் இருப்பவன், ஆழ்வாரோ கலியைப் போக்குமவராய் நிற்பவர் என்றபடி. 'குவித்துஉரைத்தது'என்றது அத்யந்தாகிஞ்சனனுக்கு உபயுக்தமாகாத கர்ம யோக ஜ்ஞான யோக தத்தங்கங்களை பதினேழு அத்யாயம் 65 ஶ்லோகங்களில் பரக்க நிரூபித்து, அகிஞ்சனர்களுக்கு உபயோகமான ப்ரபத்தியை ஒரு ஶ்லோகத்தால் அருளிச்செய்த என்றபடி. இவ்வாழ்வாரோ அந்த ப்ரபத்தி மார்க்கத்தை அநபேக்ஷித விஸ்தாரம் அபேக்ஷித ஸங்கோசம் முதலியவைகளில்லாமல் விரித்து அருளிச்செய்தார் என்று தாத்பர்யம். 'தண்' என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—'ஏஷ' என்றாரம்பித்து.

'ஸம்ஸாரஶ்ரீ விதீவ ந வ்ருமத ஹாண'

என்னப்பட்ட ஸம்ஸாரத்தில் இருக்கச்செய்தே

1 ' வஷ ஸூஹூ ஷவிஷெடாவஷி '

என்னலாய் அவனோடே சேர்ந்து குளிர்த்தியைப் பெறுத்த வல்ல

---

' வஷ ஸூஹூ ஷவிஷெடாவஷி '

இத்யாதி சொல்லும்படி பண்ணுவிக்கும் இந்த ப்ரபந்தத்தின் குளிர்த்தி என்று தாத்பர்யம்.

' ம ஂ ஹீ ா வஊணாு உயாா ஂ உஉ யீ ஹுவஜ ஂ ஸ்ரீ ஷெ தடாகஊிவ ஶீ தஉநாஷவிஷா '

என்றிறே ஸ்ரீ தேஶிகனும் அனுஸந்தித்தது. ஶ்ருதி கேவலம் ஒரு கோடை காலத்தில் குளிர்ந்த மடுவைப் போல ப்ரும்மத்தை அனுபவிக்கப் புகுகிறேன் என்று சொன்னது. அந்த மடு சிறியதாயிருந்தாலும், பெரியதாயிருந்து ஜலம் மிகவும் ஸ்வல்பமாயிருந்தாலும், அகாதமாயும் பூர்ணமாயும் இருந்து ஜலம் உப்பாயிருந்தாலும் அந்த மடு தாபத்தினால் அடிபட்டவனுக்குத் தாபத்தைப் போக்காதாகையினால் அது பரமாத்மாவை அனுபவிப்பதற்கு ஸரியான த்ருஷ்டாந்தமாகாது என்று திருவுள்ளம் பற்றி அந்த த்ருஷ்டாந்தத்தையே பரிஷ்கரித்து இந்த ஶ்லோகத்தில் நிரூபித்தருளினார் என்பது அறியத்தக்கது. அகாதமாயும், முழுவதும் ஜலம் நிறைந்ததாயும், அம்ருதம் போல் மதுரமான ஜலத்தையுடையதுமான ஒரு மடுவில் என்று அருளிச்செய்தபடியினால் கீழ் நிரூபிக்கப்பட்ட குறைகள் எல்லாவற்றையும் நீக்கி, தாம் வேதாந்தங்களுக்கும் ஆசார்யன் என்பதை வெளியிட்டருளினபடி த்யோதிதம். கீழ் முதல் பாட்டில் ' இன்னிசை ' இத்யாதியாக அருளிச்செய்த ஸ்வாபதேஶார்த்தத்தை இப்படி நிர்வஹித்தருளுகிறார். ( கோடை காலத்தில் ஶீதளமான மடுவை தாபத்தினால் பீடிக்கப்பட்டவன் அடைகிறாப் போலே ) ஏஷ: – ஸம்ஸாரத்திலே கஷ்டப்பட்ட ஜீவாத்மாவாகிற இந்த நான், ப்ரும்ம – ப்ரும்மத்தை, ப்ரவிஷ்ட: அஸ்மி – நுழைந்தவனாகிறேன்.

' உக்தாஉதி வ உாமுஷூ: ஶீதீ ஹஎதொ நிரஉயஃ '

என்கிறபடியே ஆரம்பம் முதலாகவே ஸம்ஸார தாப நிவர்த்தகமான கதி விஶேஷத்தாலே பரமபத நாதனைக் கிட்டுவித்து ஸம்ஸாரத்தைப் போக்கக் கூடியது இந்த ப்ரபந்தம் என்பதைத் தெரிவிப்பதற்காக

பத்துப் பாட்டான இந்தத் தமிழ் ப்ரபந்தத்தை அறிந்து பாடிப் பாடி அவனை நெஞ்சில் வைக்கவே உபாயோபேய ப்ரதிபந்தகங்களான பாபங்கள் கிட்டாவே, ஸ்வ பலங்களை இவன் அனுபவிக்கும்படி இவனில் நில்லாவே என்றபடி. 10

*முதல் திருமொழி முற்றிற்று.*

*பெரிய பரகால ஸ்வாமி திருவடிகளே ஶரணம்.*

---

*‘ தண் தமிழ் ’ என்று அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. ராஜ புத்திரனானவன் ஶிரஸ்ஸில் கிரீடத்துடன் தான் இருந்த பள்ளிக்கூடமாகிற சிறையிலிருந்து யௌவராஜ்ய பட்டாபிஷேகத்திற்குப் புறப்படுமாப் போலே ‘ அமரரோடு உயர்வில் சென்று அறுவர் தம் பிறவிஅஞ்சிறையே’ என்கிறபடியே முந்தற பகவதநுபவத்தைக் கொடுத்து, பிறகு அநிஷ்டங்களை நிவ்ருத்தி செய்யும் என்றபடி. ‘ பாடிட ’ என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—‘ பாடி ’ என்றாரம்பித்து. ‘ நெஞ்சிலே வைக்கவே’என்றது பகவானை நேரிலே அனுபவிப்பதைவிட இந்த ஸ்ரீஸூக்திகளைக்கொண்டு அனுபவிப்பது மிகவும் பாவனமும் போக்யமுமாயிருக்கும் என்றபடி. ‘ இங்ஙனே சொன்ன ஓராயிரத்து இப்பத்தும் எங்ஙனே சொல்லினும் இன்பம் பயக்குமே ’ என்கிறபடியே நம் அநுஸந்தானத்திலுள்ளபாவபந்தத்தைக்கணிசிக்காமல் ஆழ்வாருடைய ஸ்ரீஸூக்தி என்கிறகாரணத்தினலிறே எம்பெருமான் நமக்கு அருள்புரிவது என்று தாத்பர்யம். அன்றிக்கே அதிபோக்யமான பகவானை அனுபவிப்பதற்கு இந்த ப்ரபந்தம் இன்றியமையாதது என்றபடியாகவுமாம்.*

*‘ ஸ்வதாதாக் ஸ்வதேவஸ்ய ஶ்ருத்வா ஸ்வதந்த்ரீஸ்வனம் ...*

*...தத்ர ஶக்ருஞாஸ்வம் ’*

*என்னப்பட்டதிறே. ‘ பாவங்கள் ’ இத்யாதிக்குத் தாத்பர்யம் அருளிச் செய்கிறார்—‘ உபாய ’ என்றாரம்பித்து. திவ்ய தேஶ வாஸாதிகளுக்கு ‘ முன்போயாதல் பின்போயாதல் ஒரு உபாயத்துவக்குண்டு ’ என்று ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் அருளிச்செய்திருப்பது விவ*

கூஷிதம். ‘ உபேய ப்ரதிபந்தகமான ’ என்பதற்கு உபேயத்தை ஶீக்ரத்தில் அடையவொட்டாமல் தடுத்துக்கொண்டிருக்கிற என்று தாத்பர்யம். ‘ பயிலாவே ’ என்பதற்குத் தாத்பர்யம் அருளிச்செய்கிறார்—
‘ **ஸ்வ பலங்களை** ’ என்றாரம்பித்து.

‘ ஸுஹ்ருத: ஸாதுக்ருத்யாம் ’

என்கிறபடியே இவனுடைய புண்ய பாப கர்மங்களினுடைய பலனை இவனுடைய ஸுஹ்ருத்துக்களும் த்வேஷிகளும் அனுபவித்துப் போருவர்கள் என்றபடி. 10

முதல் திருமொழி முற்றிற்று.

நிகமபரிமள அச்சுக்கூடம், பராங்குச மந்திரம், திருவல்லிக்கேணி.

  

॥ 𑌶𑍍𑌰𑍀𑌃 ॥

॥ [illegible] 𑌹𑍇𑌮𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌨𑌾𑌯𑌿𑌕𑌾𑌸𑌮𑍇𑌤

𑌶𑍍𑌰𑍀𑌦𑍇𑌵𑌨𑌾𑌥 𑌪𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍇 𑌨𑌮𑌃 ॥

॥ 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌵𑌕𑍁𑌳𑌭𑍂𑌷𑌣 𑌮𑌹𑌾𑌗𑍁𑌰𑌵𑍇 𑌨𑌮𑌃 ॥

॥ 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌭𑌗𑌵𑌤𑍇 𑌭𑌾𑌷𑍍𑌯𑌕𑌾𑌰𑌾𑌯 𑌨𑌮𑌃 ॥

॥ 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌕𑍁𑌰𑍁𑌕𑍇𑌶𑌾𑌯 𑌨𑌮𑌃 ॥

॥ 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌨𑌿𑌗𑌮𑌾𑌨𑍍𑌤𑌮𑌹𑌾𑌦𑍇𑌶𑌿𑌕𑌾𑌯 𑌨𑌮𑌃 ॥

॥ 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜 𑌮𑌹𑌾𑌦𑍇𑌶𑌿𑌕𑌾𑌯 𑌨𑌮𑌃 ॥

॥ 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌶𑍍𑌰𑍀𑌨𑌿𑌵𑌾𑌸𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌮𑌹𑌾𑌦𑍇𑌶𑌿𑌕𑌾𑌯 𑌨𑌮𑌃 ॥

𑌤𑌿𑌰𑍁𑌵𑌹𑍀𑌨𑍍𑌦𑍍𑌰 𑌪𑍁𑌰𑌂 𑌵𑍇𑌟𑍍𑌟𑍂𑌰𑍍 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 𑌭𑌗𑌵𑌦𑍍𑌵𑌿𑌷𑌯𑌂

𑌪𑌣𑍍𑌡𑌿𑌤𑌭𑍂𑌷𑌣𑌂 𑌦𑍇𑌶𑌿𑌕𑌦𑌰𑍍𑌶𑌨𑌾𑌚𑌾𑌰𑍍𑌯

𑌮𑌹𑌾𑌮𑌹𑍋𑌪𑌾𑌧𑍍𑌯𑌾𑌯 𑌨𑌰𑌸𑌿𑌹𑍍𑌮𑌾𑌚𑌾𑌰𑍍𑌯 𑌸𑍍𑌵𑌾𑌮𑌿𑌭𑌿𑌃

𑌅 𑌨𑍁 𑌗𑍃 𑌹𑍀 𑌤𑌾

॥ 𑌶𑍍𑌰𑍀 𑌨𑌿 𑌗 𑌮 𑌪 𑌰𑌿 𑌮 𑌳 𑌪𑌾 𑌦𑍁 𑌕𑌾 ॥



## ॥ 𑌉𑌪𑍋𑌦𑍍𑌘𑌾𑌤𑌃 ॥

[illegible]

[illegible] ।

𑌤𑌦𑌿𑌹 𑌗𑍁𑌰𑍁𑌵𑌰𑌂 𑌶𑍍𑌰𑍀𑌨𑌿𑌵𑌾𑌸𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌖𑍍𑌯𑌂

𑌨𑌿𑌰𑌵𑌧𑌿𑌕𑌕𑌰𑍁𑌣𑌾𑌬𑍍𑌧𑌿𑌂 𑌸𑌨𑍍𑌤𑌤𑌂 𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌾𑌮𑌿 ॥ 1

ஶ்ரிய:பதிர் வாஸுதேவ: ஸ்வப்ரஜோஜ்ஜீவநேச்சயா | [யே ||
ஶாஸ்த்ரம் வேதாக்யம் ப்ராதாத் ஸ்வஸ்ருஷ்டாயாப்ஜயோந
பராஶர வ்யாஸ ஶுக வால்மீகி ப்ரப்ருதீந் ருஷீந் |
அநுப்ரவிஶ்ய ஶாஸ்த்ராணி ப்ராவர்தயததோக்ஷஜ: ||
ஹம்ஸ மத்ஸ்ய ஹயக்ரீவ கீதாசார்யாதி ரூபப்ருத் |
பஹுபி: விவிதைஶ்சைவ ஶாஸ்த்ராணி வ்யாசகார ததோ ஹரி: ||

---

|| ஶ்ரீ: ||

|| ஶ்ரீமதே ஶ்ரீநிவாஸ ராமாநுஜ மஹாதேஶிகாய நம: ||

திருவஹீந்திரபுரம் சேட்லூர் வித்வான்

**பகவத் விஷயம்** பண்டித பூஷணம் தேசிக தர்ஶநாசார்ய

**மஹாமஹோபாத்யாய**

**ஸ்ரீ. உ. வே. நரஸிம்மாசார்யர் ஸ்வாமியின்**

# ஸ்ரீ நிகமபரிமள பாதுகை.

## [தமிழ் மொழிபெயர்ப்பு.]

### உபோத்காதம்

*மிகவும் போக்யமான ஆழ்வாரால் ஸாக்ஷாத்கரிக்கப்பட்ட த்ரமிட வேதத்தின் தாத்பர்யம் எந்த ஆசார்யனுடைய கடாக்ஷத்தினால் ஸுலபமாய் அறியக் கூடியதாக ஆயிற்றோ, அப்படிப்பட்டவராயும், எல்லையில்லாத தயைக்கு ஸமுத்திரமாயும் இருக்கிற ஸ்ரீநிவாஸ ராமானுஜ முனி என்கிற திருநாமமுடைய ஸ்வாமியை எப்பொழுதும் த்யானம் செய்கிறேன்.* (1)

*ஶ்ரிய:பதியாகிய வாஸுதேவன் (எல்லாச்) சேதனர்களையும் உஜ்ஜீவிப்பிக்கச் செய்யவேண்டும் என்கிற ஆசையினால் தன்னால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட ப்ருஹ்மாவிற்கு வேதம் என்கிற பெயருடைய ஶாஸ்திரத்தைக் கொடுத்தார்.* (2)

*பிறகு பராஶரர், வ்யாஸர், சுகர், வால்மீகி முதலிய ரிஷிகளை அனுப்ரவேசித்து பகவான் ஶாஸ்திரங்களை ப்ரவர்த்திப்பித்தார்.* 3

𑌉𑌦𑍍𑌧𑍃𑌤𑌾𑌨𑌿 𑌤𑌤𑌸𑍍𑌤𑌾𑌨𑌿 𑌵𑍍𑌯𑌾𑌸𑌾𑌦𑍍𑌯𑍈𑌶𑍍𑌚 𑌮𑌹 | [𑌰𑍍𑌷𑌿𑌭𑌿𑌃 ||
𑌆𑌵𑌿𑌰𑍍𑌭𑍂𑌯 𑌯𑍁𑌗𑌸𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑍇 𑌸𑍍𑌵𑌯𑌂 𑌸𑌙𑍍𑌕𑌰𑍍𑌷𑌣𑍋 𑌹𑌰𑌿
𑌪𑌰𑌾𑌙𑍍𑌕𑍁𑌶𑌾𑌦𑌿 𑌰𑍂𑌪𑍇𑌣 𑌕𑍃𑌪𑌯𑍈𑌵𑌾𑌭𑌵𑌤𑍍 𑌪𑍁𑌨𑌃 |
𑌅𑌵𑌤𑌾𑌰𑌂 𑌵𑌿𑌶𑍇𑌷𑍇𑌣 𑌜𑌾𑌤𑌵𑍍𑌯𑌾𑌨𑌭𑌵𑌾𑌤𑍍 𑌤𑌤𑌃 || 6
𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌃 𑌸𑌰𑍍𑌵𑌵𑌰𑍍𑌣𑌾𑌨𑌾𑌂 𑌸𑌾𑌰𑌂 𑌸𑌂𑌗𑍃𑌹𑍍𑌯 𑌭𑌾𑌷𑌯𑌾 |
𑌦𑍍𑌰𑌾𑌵𑌿𑌡𑍍𑌯𑌾𑌦𑌰𑍍𑌶𑌯𑌾𑌮𑌾𑌸 𑌸𑍍𑌵𑌭𑌕𑍍𑌤𑌾𑌨𑍁𑌕𑌮𑍍𑌪𑌯𑌾 || 7
𑌯𑌥𑌾 𑌮𑍇𑌘𑌾 𑌜𑌲𑌨𑌿𑌧𑍇𑌃 𑌪𑍀𑌤𑍍𑌵𑌾 𑌕𑍍𑌷𑌾𑌰𑌂 𑌜𑌲𑌂 𑌤𑌤𑌃 |
𑌸𑌰𑍍𑌵𑍋𑌪𑌜𑍀𑌵𑍍𑌯𑌂 𑌵𑌰𑍍𑌷𑌨𑍍𑌤𑌿 𑌪𑌾𑌨𑍀𑌯𑌂 𑌮𑌧𑍁𑌰𑌂 𑌤𑌥𑌾 || 8
𑌤𑍇𑌷𑍁 𑌦𑌿𑌵𑍍𑌯𑌪𑍍𑌰𑌬𑌨𑍍𑌧𑍇𑌷𑍁 𑌸𑍂𑌕𑍍𑌤𑌿𑌃 𑌶𑌠𑌵𑍈𑌰𑌿𑌣𑌃 |
𑌸𑌾𑌰𑌭𑍂𑌤𑍇𑌤𑌿 𑌤𑌦𑍍𑌵𑍍𑌯𑌾𑌖𑍍𑌯𑌾𑌂 𑌕𑌰𑍍𑌤𑍁𑌮𑍇𑌵𑍇𑌤𑌿 𑌚𑌿𑌨𑍍𑌤𑌯𑌨𑍍 || 9
𑌯𑌾𑌮𑍁𑌨𑌾𑌰𑍍𑌯𑍋 𑌗𑍁𑌰𑍁𑌰𑍍𑌜𑌗𑌾𑌮 𑌵𑍈𑌕𑍁𑌣𑍍𑌠𑌂 𑌰𑌙𑍍𑌗𑌶𑌾𑌸𑌨𑌾𑌚𑍍𑌚 |

---

பிறகு ஹம்ஸம் மத்ஸ்யம் ஹயக்ரீவன் கீதாசார்யன் முதலிய அவதாரங்களைச் செய்து தானே வெளிநின்று ஶாஸ்திரங்களை ப்ரவசனம் செய்தார். (4)

பிறகு அவைகள் நஷ்டமாகப்போக த்வாபர யுகத்தின் கடைசியில் தானே ஸங்கர்ஷண ரூபத்தைத் தரித்து அவைகளை ப்ரகாஶிப்பித்தார். (5)

பிறகு பராங்குசாதி ரூபமாய் ஒரு அபிநவ தஶாவதாரம்செய்து, எப்படி மேகங்கள் ஸமுத்திரத்திலிருந்து கரிப்புள்ள (உப்புடன் சேர்ந்திருக்கும்) ஜலத்தைக் குடித்து எல்லோராலும் சாப்பிடக்கூடிய ருசியுள்ள ஜலமாகப் பெய்கின்றனவோ அதைப்போல வேதங்களில் அவஶ்யம் அறியவேண்டிய எல்லா அர்த்தங்களையும் சுருக்கி எல்லா வர்ணத்தாரும் அதிகரிக்கக்கூடிய தமிழ் பாஷையினால் அந்தப் பகவானே தன்னுடைய பக்தர்களிடத்தில் உள்ள க்ருபையினால் காண்பித்தார். (6,7,8)

அப்படிப்பட்ட திவ்ய ப்ரபந்தங்களில் நம்மாழ்வாருடைய ஸ்ரீஸூக்தியாகிய திருவாய்மொழி மிகவும் ஸாரமானதாகையினால் அதற்கு வ்யாக்யானம் பண்ணவேண்டும் என்று நினைத்துக்கொண்டிருந்த ஸ்ரீ ஆளவந்தார் ஸ்ரீ ரங்கநாதனுடைய நியமனத்தினால் தன்னுடைச் சோதியை அலங்கரித்தார். ($9,9\frac{1}{2}$)

ததஸ்ஸ ஶிஷ்யைராஹூத: காஞ்ச்யாஸ்த்வரேணாப்யாகத: |
லக்ஷ்மணார்யோ குரோர்வீக்ஷ்ய ஸம்யக் சரமவிக்ரஹம் |
தத்ராங்குலீநாம் த்ரிதயம் ஸங்கோசம் த்ருஷ்ட்வா விசிந்த்ய ச || 11

குரோராஹ்ருதயமாஜ்ஞாய கரோமீதி நியமம் ததா |
இதி ப்ரதிஜ்ஞா: [illegible] ||

தேஷு போதாயநப்ரோக்த வ்ருத்திக்ரந்தாநுஸாரத: |
ஶ்ரீபாஷ்யகரணம் ஸூத்ராணாம் யதாவத் ஸம்ப்ரவர்திதம் ||

த்விதீயம் வ்யாஸதத்பித்ரோருபகாரப்ரகாஶநம் |
தச்சாநுஷ்டிதம் ஸம்யக் லக்ஷ்மணார்யேண தீமதா || 14

ஶடாரிஸூக்திவ்யாக்யாநகரணே து த்ருதீயகே |
பரீக்ஷிதம் ஸ்வஶிஷ்யம் து குருகேஶப்ரநாமகம் || 15

---

பிறகு ஶிஷ்யர்களினுல் அழைத்துக்கொண்டு வரப்பட்டவராய், காஞ்சீபுரத்தில் இருந்து மிகவும் த்வரையாய் எழுந்தருளின ஸ்ரீ பாஷ்யகாரர் ஆசார்யனுடைய சரம திருமேனியை நன்ருக ஸேவித்து, அதில் மூன்று கைவிரல்கள் மடங்கியிருந்ததைப் பார்த்து, தாமே யோசித்து ஆசார்யனுடைய திருவுள்ளக் கருத்தை அறிந்து, அவை எல்லாவற்றையும் திருவுள்ளப்படி செய்கிறேன் என்று ப்ரதிஜ்ஞை செய்தார். (உடனே) அந்த மூன்று விரல்களும் நீண்டுவிட்டன.

அந்த ப்ரதிஜ்ஞைகளுக்குள் போதாயனருடைய வ்ருத்தி க்ரந்தத்தை அநுஸரித்து ப்ரும்ம ஸூத்திரங்களுக்குப் பாஷ்யம் செய்ய வேண்டும் என்கிற முதல் ப்ரதிஜ்ஞை ஸ்ரீ பாஷ்யகாரரினுலேயே பூர்த்தி செய்யப்பட்டது. (13)

இரண்டாவது ப்ரதிஜ்ஞை பராசரரும் வ்யாஸரும் நமது ஸித்தாந்தத்திற்குச் செய்த உபகாரத்தை ப்ரகாசம் செய்வது, அதுவும் மிகவும் புத்திமானுகிய ஸ்ரீ பாஷ்யகாரரினுல் நன்ருக அனுஷ்டிக்கப் பட்டது. (14)

மூன்ருவது ப்ரதிஜ்ஞையாகிற ஆழ்வாருடைய ஸ்ரீ ஸூக்திக்கு வ்யாக்யானம் செய்வது என்பதில் நன்ருய்ப் பரீக்ஷிக்கப்பட்டவரும்,

ஶ்ரீஶைலபூர்ணபௌத்ராய புத்ராய ஸ்வாந்தஶாஸிதே யதீஶ்வர: |
ஸ்வாசார்ய காருணிகாயீஶ: ஸத்யா கார்ய நிதேஶத: ||
சகார ஷட்ஸஹஸ்ராக்யாம் வ்யாக்யாம் வ்யாக்யாதவாந் குரோ|
தத்ப்ரேஷ்டா லக்ஷ்மணார்யேண ஆவிஷ்டாவிஷ்டாய கௌஷ்டம்
த்ராவிடாப்தே: ஶிஷ்யவர்கேஷ்வ: கணதாகாஸ்வயமேவஹி
காருணிகாயீஶஸம்ஜ்ஞாய க்ருபயா குருஸத்தம: || 18
வேதாந்தத்வயஸிம்ஹாஸநாதிபத்யம் ததௌ ததா | [ர்த ||
ஶ்ரீமந்வேதாந்தயோகீந்த்ரோ வ்யாக்யாம் தஸ்யாகரோ
த்ராமிடாம்நாயஸாரஸ்யஸம்ஜ்ஞாம் ஸர்வமஹாவிஸ்த்ருதாம் |
ஸாபி காலேந மஹதா நஷ்டாஹேதி ந: ஶ்ருதம் ||
வேதாந்தலக்ஷ்மணமுநி: வ்யாக்யாம் தஸ்யாகரோத்த்வரா|

---

தமக்கு ஶிஷ்யரும், பெரிய திருமலை நம்பிகளின் குமாரருமான திருக்குருகைப் பிரான் பிள்ளானை ஸ்ரீபாஷ்யகாரர் நியமித்தருளினார். (15½)

அந்தத் திருக்குருகைப்பிரான் பிள்ளானும் ஆசார்யனுடைய நியமனத்தினால் அப்பொழுதே ஆறாயிரப்படி என்கிற திருநாமமுடைய வ்யாக்யானத்தைச் செய்தார். அதைத் தன் ஆசார்யனிடத்தில் ஸமர்ப்பித்தார். (16½)

ஸ்ரீ பாஷ்யகாரரும் தன்னால் உபதேசிக்கப்பட்ட அர்த்தங்களைக் கொண்டே எழுதப்பட்ட அந்த க்ரந்தத்தைக் கடாக்ஷித்து ஸந்தோஷத்தினால் தாமே தம்முடைய ஶிஷ்யர்களுக்கு அதை ப்ரவசனம் செய்தருளினார். (17½)

திருக்குருகைப்பிரான் பிள்ளானுக்கும் ஸ்ரீ பாஷ்யகாரர் கருணையினால் உபய வேதாந்த ஸிம்மாஸனாதிபத்யத்தைக் கொடுத்தார். (18½)

பிறகு ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன் அந்த ஆறாயிரப்படிக்கு த்ரமிட நிகமபரிமளம் என்கிற திருநாமம் பூண்ட மிகவும் விஸ்தாரமாகிய வ்யாக்யானத்தைச் செய்தருளினார். (19¼)

அந்த வ்யாக்யானமும் கால தைர்க்யத்தினால் நஷ்டமாயிற்று என்று (ஆசார்ய பரம்பரோபதேசத்தினால்) கேழ்விப்படுகிறோம்.

பிறகு அந்த ஆறாயிரப்படிக்கு ஸ்ரீமத் வேதாந்த ராமாநுஜ

தானி ஸம்க்³ருஹ்ய தீ⁴ரோ: ஶ்ரீமாந் ஶிஷ்யஸ்ய ப்ரார்த்²ய ச
ஸர்வஜ்ஞ: ॥ 21

தத்ர தத்ர விஶேஷார்தா²ந் ஸங்க்³ருஹ்ய ப்ரதிபாதி³தாந்
ஸூக்ஷ்மவிஸ்தரேண விஸ்தர: தஸ்ய டீகாம் யதா²மதி ॥ 22

கரோதி நிக³மாசார்ய வாஸநா பாது³காஹ்வயாம் ।
ஶிஷ்யாணாம் தத்³விஶேஷேஷு ஸௌகர்ய ஜ்ஞாநஸித்³த⁴யே ॥23

இதி ஶ்ரீ நிக³மபரிமள பாது³காயாம்

॥ உபோத்³கா⁴த: ॥



ஸ்வாமி (24000படி என்கிற) ஒரு வ்யாக்யானம் செய்தருளினர். இந்த வ்யாக்யானங்களை ஆசார்யனிடத்தில் நன்ருகக் கேட்டும், அனேகம் தடவை ஶிஷ்பர்களுக்கு ப்ரவசனம் செய்தும், ஆங்காங்கு ஆசார்யர்களினுல் காண்பிவிக்கப்பட்ட விசேஷார்த்தங்களைச் சுருக்கி நிருளிம் மாசார்யர் என்கிற பெயரையுடைய வித்வான் ஶிஷ்யர்களுக்கு அந்தந்த அர்த்தங்களில் ஸுகமாக ஜ்ஞானம் உண்டாவதற்காக நிகமபரிமள பாதுகை என்று பெயருடைய ஒரு வ்யாக்யானத்தை ஆறாயிரப்படிக்கு வ்யாக்யானமாகச்செய்கிருர். (21,22,23)

இப்படி ஸ்ரீ நிகமபரிமள பாதுகையின்
தமிழ்மொழி பெயர்ப்பில்
உ போ த் கா த ம்
முற்றிற்று.



